# கல்கி

KALKI
4.6.2000
ரூ. 5.00

'வரி'



கேட்கிறார்
வசுந்தரா!

# கலைஞர் - 77

பாதுகாப்பான முதலீடு - நிலையான வருமானம்

# பவர்ஃபைனான்ஸ்

## தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்

## முதலீடுகளுக்கு திருத்தியமைக்கப்பட்ட வட்டி விகிதங்கள் (1-6-2000 முதல்)

| காலம் | முறையான வட்டி வழங்கும் திட்டம் (RIPS) — வழங்கப்பட உள்ள ஆண்டு வட்டி விகிதம் — மாதத்திற்கு | முறையான வட்டி வழங்கும் திட்டம் (RIPS) — வழங்கப்பட உள்ள ஆண்டு வட்டி விகிதம் — காலாண்டிற்கு | திரள் வட்டி வழங்கும் திட்டம் (CIPS) - I — முதிர்வுத் தொகை ரூ. 5,000/-த்திற்கு | திரள் வட்டி வழங்கும் திட்டம் (CIPS) - I — ஒரு ஆண்டிற்கு பெறக்கூடிய வருவாய் விகிதம் |
|---|---|---|---|---|
| 12 மாதங்கள் | – | 10.59% | ரூ. 5,551/- | 11.02% |
| 24 மாதங்கள் | – | 11.10% | ரூ. 6,224/- | 12.24% |
| 36 மாதங்கள் | 12.00% | 12.12% | ரூ. 7,155/- | 14.37% |
| 48 மாதங்கள் | 12.00% | 12.12% | ரூ. 8,061/- | 15.31% |
| 60 மாதங்கள் | 12.00% | 12.12% | ரூ. 9,085/- | 16.34% |

### திரள் வட்டி வழங்கும் திட்டம் (CIPS) - II

| காலம் | குறைந்த அளவு டெபாசிட் ரூ. | முதிர்வுத் தொகை ரூ. | ஒரு ஆண்டிற்கு பெறக் கூடிய வட்டி விகிதம் |
|---|---|---|---|
| 60 மாதங்கள் | 550/- | 1,000/- | 16.34% |




**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**

(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)

பதிவு அலுவலகம் : எண் 84, டி.டி.கே. சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி : 4997689, 4995648. ஃபேக்ஸ் : 044-4982894 மின் அஞ்சல் : powerfin@md3.vsnl.net.in
Visit us at: www.tnpowerfinance.com / www.tninfrafinance.com

28-9-99 தேதியிட்ட எகனாமிக் டைம்ஸ் இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது.

"Also available on the Internet" www.tn.gov.in / www.chennaionline.com / www.aaraamthinai.com / www.southindia.com

வீட்டை மிக அழகாக வைத்துக் கொள்ளும் பெண்மணிகளுக்கென 'மிஸஸ் சென்னை — 2000' போட்டி நடத்தப்பட்டது. அதில் வெற்றிபெற்று பட்டம் வென்ற ராஜிமணியை மிஸ் சென்னை த்ரிஷா சந்திக்கிறார்:




ராஜி: ஹாய் த்ரிஷா, வெல்கம்! என் வீட்டுக்கு ஒரு தேவதையே வந்தாப் போல இருக்கு!

த்ரிஷா: தாங்க்யூ! உங்களுக்கும் என்னுடைய வாழ்த்துக்கள். உங்க வீட்டின் முகப்பே ஒரு கோவில் மாதிரி இருக்கு!

ராஜி: முகப்பு மட்டுமில்லே, இந்த வீடே ஒரு கேரளக் கோவில் பாணியில் இருக்கணும்னு முடிவு செஞ்சு, கூரையில் ஓடு வேஞ்சுருக்கோம்.

த்ரிஷா: இது என்ன வாசல்லே மணி கட்டி இருக்கீங்க?

ராஜி: இந்த வெண்கலமணி


கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

செட்டி நாட்டுக் கலாசாரம்... அங்கெல்லாம் முன்னே காலிங்பெல் கிடையாது. கரண்ட் இல்லாதபோது இதை அடிச்சு, கூப்பிடலாம். இன்னும் வீடு முழுவதும் பலவகையான மணிகளை இடத்திற்குத் தகுந்தாற்போல் பயன்படுத்தியிருக்கேன்.

**த்ரிஷா:** உங்க வீட்டை எனக்கு சுத்திக் காட்டறீங்களா?

**ராஜி:** நிச்சயமா! தோட்டத்திலிருந்து ஆரம்பிக்கலாம். உண்மையில் இது தோட்டமில்லே! ஒரு பிருந்தாவனம். துளசிமாடம், புல்தரை, கூரையற்ற ஒரு மணி மண்டபம், அதில் தொங்கும் செடிகள், ஊஞ்சல், வேப்பமர நிழலில் கிருஷ்ணர், பிள்ளையார். இங்கேதான் என்னோட காலைப் பொழுது ஒரு காப்பியோடு தொடங்குது. மீனாட்சி சுப்ரபாதம், திருப்பள்ளி எழுச்சி, பாரதியின் எழுச்சிமிக்க பாடல்கள், நியூஸ் பேப்பரோடு என் கணவரும் சேர்ந்து விட்டால் இது பூலோக வைகுண்டம்தான்!

**த்ரிஷா:** வாவ்! ஆனா என்னோட தலைமுறை இதுமாதிரி ஒரு வாழ்க்கை இருக்கறதையே தெரிஞ்சுக்கலியே, ஏன்?

**ராஜி:** அதுக்கு மீடியா எக்ஸ்ஃபோஷர் காரணமா இருக்கலாம்.

**த்ரிஷா:** ஆமா, ஆமா! இன்டர்நெட், மாடலிங், படிப்பு– இதுக்கே எங்களுக்கு நேரம் போதலியே!

**ராஜி:** ஆனாலும் நம்மோட கலாசாரத்தை சுத்தமா விட்டுடக் கூடாது, இல்லியா?

**த்ரிஷா:** உண்மைதான். அதோட வேல்யூ எனக்குப் புரியது.

**ராஜி:** குட்... இந்த வராந்தாவைப் பாருங்க! இதில் இரண்டு தமிழகபாணி அக்ரகாரத்துத் திண்ணைகள். வராண்டா மூலையில் மீனாட்சி கல்யாணத்தில் வந்த குண்டோதரன். உங்களையும் வரவேற்கிறார் பாருங்க.

**த்ரிஷா:** ஸோ, க்யூட்! மேடம், உங்களைப் பற்றியும் உங்க குடும்பம் பற்றியும் சொல்லுங்களேன்.

**ராஜி:** என்னோட கணவர் ஜி.வி.எஸ்.மணி ஆயுள்காப்பீட்டுக் கழகத்தில் பணியாற்றினார். யூனியன் லீடராகவும் இருந்தார். அதனால் அவர் இந்தியா முழுக்க போகவேண்டி இருந்தது. நானும் அவரோடு சுற்றவேண்டி வந்தது. இதனால் இந்திய மாநிலங்களின் வேறுபட்ட கலாசாரத்தைக் கண்டு வியந்தேன். அதனால்தான் ஒவ்வொரு மாநிலத்தின் கலைப்பொருட்களையும் வாங்கி எனது வீட்டில் பொருத்தமான இடத்தில் வைத்து, ஒரு 'தேசிய இல்லமாக' இதை மாற்றினேன்! எனக்கு இரண்டு மகன்கள். இருவருமே அமெரிக்காவில் உள்ளனர். நான் தி.நகரில் ஒரு பள்ளியில் கணித ஆசிரியையாகப் பணியாற்றினேன். வீட்டைப் பராமரிப்பதற்காகவே





பெரிய வாங்கும் சக்தி கொண்ட நாடு இதுதான். அதனால, பன்னாட்டு அழகு சாதனப் பொருட்களை இந்தியாவில் விற்க, இந்தியாவில் அழகு பற்றி ஒரு விழிப்புணர்வு உண்டாக்க வேண்டி இருக்கு! அதுக்கு இந்தியப் பொண்ணுங்களை உலக அழகிகளாகத் தேர்ந்தெடுத்து, அவங்களை லிப்ஸ்டிக், நெயில் பாலீஷ் இதுக்கெல்லாம் விளம்பர மாடலாகப் பயன்படுத்தினா கிராமத்துப் பொண்ணுங்களும் அதை வாங்கிடுவாங்க. இதுதான் காரணம்னு நினைக்கிறேன்.

**த்ரிஷா:** நான் சின்னப் பொண்ணு. உங்க அளவுக்கு என்னால் சிந்திக்க முடியலேன்னு சொல்லலாம்.

**ராஜி:** சரி, உங்க வீட்டு ஜனநாயகம் எப்படி?

**த்ரிஷா:** என்னோட பெற்றோர்கள் எனக்கு, அனுமதியும் சுதந்தரமும் கொடுத்ததனால்தான் நான் மிஸ் சென்னை ஆக முடிஞ்சது! உங்களுக்கு உங்க கணவரின் ஒத்துழைப்பு இருந்ததனாலதான் மிஸஸ் சென்னை ஆக முடிஞ்சது, இல்லியா?

**ராஜி:** ரொம்ப சரியா சொன்னீங்க. ஆனா, இந்த சுதந்தரம் இன்னும் கிராமத்துப் பெண்களுக்கு முழுசா கிடைக்கலை! அதுக்கு ஏழைமையும் ஒரு காரணம்.

**த்ரிஷா:** உண்மைதான். நான் சென்னையிலேயே நிறைய ஸ்ட்ரீட் சில்ரனைப் பார்க்கறேன். அவங்களுக்கு நல்ல டிரெஸ் கூட இல்லை. பாவம்!

**ராஜி:** எல்லோருக்கும் வேலை கிடைக்கணும். தொழில்கள் பெருகணும். அதுக்கு த்ரிஷா மாதிரி பெண்கள் உலக அழகிகள் பட்டம் கிடைச்சதும் சினிமாவில் நடிக்கப் போகாமல், சந்தர்ப்பங்களைப் பயன்படுத்தி தொழில் அதிபர் ஆகி நிறையப் பேருக்கு வேலை குடுக்கணும்.

**த்ரிஷா:** நிச்சயமா நான் சினிமாவில் நடிக்க மாட்டேன்.

**ராஜி:** நான் நம்பறேன்!

**த்ரிஷா:** நன்றி. நீங்க உங்க கணவரோடு எங்க வீட்டுக்கு வரணும்!

**ராஜி:** நிச்சயமா வர்றோம்!

ஏற்பாடு, தொகுப்பு: **ஜெயந்த்**

படங்கள்: **வெங்கடேஷ்**

வேலையை விட்டுவிட வேண்டி வந்தது! பைத வே, த்ரிஷா, உங்க குடும்பத்தைப் பற்றிச் சொல்லவே இல்லையே!

**த்ரிஷா:** அப்பா இங்கே பேப்பர் இண்டஸ்ட்ரி வெச்சுருக்கார். நான் வீட்டுக்கு ஒரே பொண்ணு. சர்ச்பார்க் கான்வெண்டில் பிளஸ் டூ முடிச்சேன். அடுத்து பி.பி.ஏ, இல்லேன்னா சைக்காலஜி படிக்கலாம்னு இருக்கேன்.

**ராஜி:** இப்போ இந்தியப் பெண்கள் தொடர்ந்து உலக அழகிகளாகத் தேர்ந்தெடுக்கப்படுறாங்களே, எப்படி?

**த்ரிஷா:** தேவையான தகுதிகளோடு, தைரியமா கலந்துகறதால இருக்கலாம்.

**ராஜி:** அதுவும் ஒரு காரணம். அதுவே காரணம்னு எனக்குத் தோணலை. ஏன்னா, தாராளமயப் பொருளாதாரக் கொள்கைக்கு இந்தியா மாறிய பிறகு, நம்ம நாடு உலகச் சந்தையா மாறிட்டது. உலகத்தோட இரண்டாவது

---

''பிக்பாக்கெட் பக்கிரி விஷயத்துல எல்லாம் தலைகீழா இருக்கே?''

''என்ன?''

''போர்டுல **உள்ளேன்னு** இருந்தா வீட்டுல இல்லை, ஜெயில்ல இருக்கான்னு அர்த்தமாம்!''

– சீர்காழி வி. ரேவதி





# “எங்களைச் சாக விடாதீர்கள்!”

## — கதறும் ராஜஸ்தான் மக்கள்!

வறட்சியால், கடுமையாகப் பாதிக்கப்பட்ட மாநிலம் ராஜஸ்தான்தான். அங்கு வறட்சி புதிதில்லையென்றாலும், கடந்த இரண்டு வருடங்களாகவே மழை பொய்த்து விட்டதால், இந்த வருடம் வறட்சி மிகவும் கடுமையாக உள்ளது.

அண்மையில் வறட்சியின் கொடுமையை நேரில் ஆராய, ராஜஸ்தான் மாநிலம், ஜெய்சால்மீர் பகுதியில் உள்ள சில கிராமங்களுக்குச் சென்று வந்த சென்னையின் ‘வேர்ல்டு விஷன்’ அமைப்பைச் சேர்ந்த சத்யார்தி சாகுவும், வில்லி வெங்கடரங்கமும் தம் அனுபவங்களைப் பகிர்ந்து கொள்கிறார்கள்:

- ராஜஸ்தானின் பகல் வெப்பம் நாற்பத்து ஐந்து டிகிரியைத் தொடுகிறது. கிராமப்புறங்களில் வசிக்கிற மக்கள், தண்ணீருக்கு வழி



யின்றி, மூட்டை முடிச்சுகளுடன் நகர்ப்புறங்களுக்குப் போவதைப் பல இடங்களிலும் காண முடிந்தது.

- ஐம்பது, அறுபது கி.மீ. தூரத்தில் உள்ள இடங்களிலிருந்து டிராக்டர்களில் டாங்கர்களை இணைத்து, தண்ணீர் கொண்டு வருகிறார்கள். ஒரு டாங்கர் தண்ணீர் விலை அறுநூறு ரூபாய்! ஒட்டக வண்டிகளைக் குறைந்த தூரத்துக்குப் பயன்படுத்துகிறார்கள்.
- பல இடங்களில் சாலையெல்லாம் இறந்து போன ஆடுகளின் ரோமம் கொத்துக் கொத்தாகக் கிடந்தன.
- ஒருவர் எழுபது ஆடுகளும் ஒரு பசுவும் வைத்துப் பிழைத்துக் கொண்டிருந்தார். பால் வியாபாரம்தான் வருமானத்துக்கு வழி. ஆனால் இன்று பசுவும் ஐம்பது ஆடுகளும் இறந்து விட்டன. இதைக் கூறும்போது அவர் கதறிய காட்சி இன்னமும் நெஞ்சை விட்டு அகலவில்லை!
- இன்னொருவரின் ஆடு ஒன்று, குட்டிகள் போட்டுவிட்டு இறந்துவிட்டது. மாட்டின் பாலையே புட்டியில் நிரப்பி ஆட்டுக் குட்டிகளுக்குப் புகட்டிக் கொண்டிருந்தார் அவர்.
- தங்கள் குடிசைகளை ஒட்டி எட்டு அடி ஆழத்துக்கு, பூமியில் ஒரு தொட்டி கட்டி வைத்திருக்கிறார்கள். ஒட்டக வண்டிகளில் தண்ணீர் கொண்டு வந்து அந்தத் தொட்டிகளில் ஊற்றி வைத்துக் கொண்டு சிக்கனமாகப் பயன்படுத்திக் கொள்கிறார்கள்.
- கொஞ்சம் போல் மழை பெய்தால் விவசாயம். காய்ந்த நாட்களில் கால்நடை வளர்ப்பு, பால் வியாபாரம், ரோமம், இறைச்சிக்கு ஆடுகள் வளர்த்து விற்பது- இவைதான் இங்கே ஜீவனத்துக்கு வழி. வறட்சி காரணமாக விவசாயமும் கிடையாது. கால்நடைகளும் மடிந்து கொண்டிருக்கின்றன. சோகம் சொல்லி மாளாது. ஒரு பஞ்சாயத்துத் தலைவர், எங்கள்



கைகளைப் பிடித்துக்கொண்டு, "ஜூலை மாதம் வரை எங்களைக் காப்பாற்றுங்கள்; எங்களது ஆடு, மாடுகளைப் போல எங்களையும் சாக விட்டு விடாதீர்கள். ஜூலையில் மழை வந்துவிடும்" என்று கெஞ்சினார்; பரிதாபமாக இருந்தது.

● வங்கிகளில் கடன் வாங்கி, ஆயிரம் ரூபாய்க்கு ஒரு ஆடு என்று வாங்கியவர்கள் பலர். ஆடு மாடுகள் மடிந்து விட்டதால், வாங்கிய கடனை எப்படிக் கட்டுவது என்று கலங்கி நிற்பவர்கள் ஏராளம்! ஆயிரக்கணக்கில் கால்நடைகள் மரணம் என்பதால், நஷ்டஈடு கொடுத்து உதவிக்கு வர வேண்டிய இன்சூரன்ஸ் கம்பெனிகள் கைகட்டி நிற்கின்றன!

● 'உழைப்புக்கு ஊதியம்' என்ற திட்டம் மூலமாக, தவிக்கும் மக்களுக்கு வேலை கொடுத்து, சாப்பாட்டுக்கு வழி செய்திருக்கிறது அரசாங்கம். ஆனால் காண்ட்ராக்டர்கள், ஏழை ஜனங்களுக்கு அரசு உத்தரவுப்படி கொடுக்க வேண்டிய ஐந்து கிலோ கோதுமையைத் தராமல், மூணு கிலோ கொடுத்து ஏமாற்றிக் கொண்டிருக்கிறார்கள். தவிர, பொய்யாகப் பல பெயர்கள் எழுதிக் கொண்டு, கணக்குத் தர வேண்டிய கோதுமையை ஸ்வாகா செய்து கொண்டிருக்கிறார்கள்!

● ஓர் ஊரின் எல்லையில், இறந்த கால்நடைகளை மொத்தமாகக் கொட்டி வைத்திருந்தது நெஞ்சைப் பிழிய வைக்கும் காட்சி!

தொகுப்பு : **கௌதம் ராம்**

# என்ன விலை?



[redacted]

சேமிப்பு உங்களுக்கு ரூ.94.40

ரூ.998.70 மட்டுமே சுபிக்ஷாவில்

பொருட்கள் தனித்தனியே வாங்கினாலும் இதேபோல் தள்ளுபடி உண்டு

மேலே உள்ள பொருள்கள் மட்டுமில்லாமல் சென்னையிலேயே குறைந்த விலையில் எல்லா பொருட்களையும் விற்பது சுபிக்ஷாதான்—சுபிக்ஷாவில் வாங்காமல் அதே பொருட்களை அதிக விலை கொடுத்து மற்ற கடைகளில் வாங்குவது ஊதாரித்தனம் அல்லவா? பல்லாயிரக்கணக்கான புத்திசாலிகளின் தேர்வான சுபிக்ஷாதான் இன்று சென்னையில் No.1. நீங்களும் புத்திசாலிதானே? வாருங்கள் இன்றே சுபிக்ஷாவிற்கு!



## Subhiksha

Pay Less ... Always

மருந்துகளுக்கு 10% தள்ளுபடி

### புதிய சுபிக்ஷாக்கள்

•சூளைமேடு •மடிப்பாக்கம் •ஓட்டேரி •கோபாலபுரம் •வண்ணாரப்பேட்டை •மே.தாம்பரம் •அசோக்நகர்

**Order online at : www.subhiksha.com**

- அடையார் 68/5, பச்சைப்பா காலனி
- அடையார் 13, 2வது குறுக்குத்தெரு, கஸ்தூரிபா நகர்.
- அம்பத்தூர் 390, எம்.டி.எச். ரோடு.
- அமைந்தகரை 255, கொன்னூர் ஹை ரோடு (108 அருகில்)
- அண்ணாநகர் W-125, 3வது அவென்யூ
- அண்ணாநகர் (மே) 1944, 18வது மெயின்
- அசோக் நகர் 32, முதல் அவென்யூ
- அசோக்நகர் 1, வேது தெரு, மல்லிகைப்பூ நகர், புதூர், டாக்டர் அம்பேத்கர் சாலை
- அரும்பாக்கம் D-103, MMDA காலனி
- ஆதம்பாக்கம் 1/C, கருணீகர் தெரு
- ஆதம்பாக்கம் 15, பழண்டியம்மன் கோயில் தெரு
- ஆள்வார்பேட்டை 101, டி.டி.கே. சாலை
- எழும்பூர் 22, எழும்பூர் நெடுஞ்சாலை
- ஓட்டேரி 155/124, ஸ்ட்ரான்ஸ் ரோடு, பாத்தர் கல்யாண மண்டபம் எதிரில்
- கிழக்கு தாம்பரம் 2, IIவது மெயின் ரோடு, சிட்லபாக்கம்
- கிழக்கு தாம்பரம் 133, பாரதமாதா தெரு
- குரோம்பேட்டை 81, ராதாநகர் மெயின் ரோடு
- கீழ்பாக்கம் 20A/3, டெய்லர்ஸ் சாலை
- கே.கே.நகர் 4712, ராமசாமி சாலை (பிள்ளையார் கோயில் பின்புறம்).
- கோடம்பாக்கம் 332, ஆற்காடு சாலை
- கோபாலபுரம் 7, டி.டி.கே. ரோடு
- சேலையூர் 11, கேம்ப் ரோடு(அகரம் ரோடு)
- சாலிக்கிராமம் 7/4, அருணாச்சலம் சாலை
- சூளைமேடு 13, திருவேங்கடபுரம் மெயின் ரோடு
- தி.நகர் 12, தணிகாசலம் சாலை
- திருவான்மியூர் 2வது கிழக்குத் தெரு, காமராஜ் நகர்
- திருவல்லிக்கேணி 73, டி.பி. கோயில் தெரு.
- வேளச்சேரி / [illegible]
- வண்ணாரப்பேட்டை 374, டி.எச். ரோடு
- விருகம்பாக்கம் 50/1, காளியம்மன் கோயில் தெரு
- வேளச்சேரி 137, வேளச்சேரி தாம்பரம் ரோடு
- நங்கநல்லூர் 140, காலேஜ் ரோடு
- நுங்கம்பாக்கம் 114, வில்லேஜ் ரோடு
- பல்லாவரம் 7/12, இந்திரா காந்தி ரோடு.
- பாடி 30, எம்.டி.எச். ரோடு
- பெரம்பூர் 13 & 14, குருமூர்த்தி கார்டன் தெரு
- பெரவள்ளூர் 33/1, S.R.P கோயில் தெரு, ஜவகர் நகர்
- பெசன்ட் நகர் 2, எல்லையம்மன் கோயில் தெரு
- பெசன்ட் நகர் 3/1A, முதலாவது அவென்யு
- மடிப்பாக்கம் 2, மடிப்பாக்கம் மெயின் ரோடு
- மந்தைவெளி 113, ஆர்.கே.மடம் சாலை
- மயிலாப்பூர் 4/1, பீமசேனா கார்டன் தெரு
- முகப்பேர் [illegible]
- மூலக்கடை 42G, மாதவரம் ஹை ரோடு.
- ராயபுரம் 23, M.S. கோயில் தெரு
- போரூர் 220&221, மவுண்ட் பூந்தமல்லி ரோடு
- மேற்கு தாம்பரம் 33, சிவசண்முகம் தெரு
- மேற்கு மாம்பலம் 15/1, தம்பையா ரோடு
- மேற்கு மாம்பலம் 15, பிருந்தாவன் தெரு

## சென்னையில் 49 சுபிக்ஷாக்கள்

☎ 2432911

*All trademarks acknowledged as properties of their owners.

''என்னுடைய ஆசை, லட்சியம் எல்லாம் மேடைப் பாடகி ஆவதுதான். நடிப்பு என்பது இடையில் கிடைத்த ஒரு வாய்ப்பு. நடிகை என்ற முறையில் ஒருவரின் திரையுலக வாழ்க்கை வெகு காலம் நீடித்து இருக்காது. ஆனால் பாடகி என்றால் அப்படிக் கிடையாது. விரும்பும் வரை, மனம் போலப் பாடிக் கொண்டேயிருக்கலாம்'' என்கிறார் வசுந்தரா. ஹே ராமில் நடித்து, 'முதல்வனி'ல் 'ஷக்கலக்க பேபி' பாடி, தமிழ் ரசிகர்களை 'அடுத்தது என்ன?' என்று எதிர்பார்க்க வைத்திருப்பவர். சமீபத்தில் சென்னையில் மையம் கொண்டிருந்த இந்த பெங்களூர்ப் புயலைச் சந்தித்துப் பேசினோம்.



''நீங்கள் சினிமாவுக்கு அறிமுகமான, 'ஹே ராம்' எதிர்பார்த்த வெற்றியைப் பெறாமல் போனது உங்களைப் பாதித்திருக்கிறதா?''

''இரண்டு கோணங்களில் இக்கேள்விக்கு பதில் சொல்லலாம். முதலாவது, அதில் நடித்தது மிக அற்புதமான அனுபவம். ஆழமான நடிப்பு என்றால் என்னவென்று எனக்குக் கற்றுக் கொடுத்த படம். அந்த விதத்தில் ஹேராமில் நடித்ததில் எனக்கு மிக்க மகிழ்ச்சி தான்! அதே சமயம், சிறு சிறு விஷயங்களைக் கூட நுணுக்கமாக கவனித்து, கடுமையாக உழைத்து, உருவாக்கிய படம் வெற்றி பெறவில்லையென்கிறபோது வருத்தமில்லாமல் எப்படி இருக்கும்?''

வசுந்தரா, ஹேராமில் நடிக்க ஒப்புக் கொள்வதற்கு

வசுந்தரா
பேட்டி

# 'ரீ' கேட்கிறார் வசுந்தரா!

முன்பே, மணிரத்னத்திடமிருந்து, ஸ்கிரீன் டெஸ்டுக்கு அழைப்பு வந்திருக்கிறது. ஆனால் தேர்வாக வில்லை.

"வெற்றிகரமாக ஓடிக் கொண்டிருக்கிற 'அலைபாயுதே'வில் நடிக்க முடியாது போய் விட்டதில் வருத்தம் உண்டா?'' என்றால்,

''வருத்தமெல்லாமில்லை. மணிரத்னம் அழைத்ததால்தான் ஸ்கிரீன் டெஸ்டுக்கே போனேன். உண்மையில் அப்போது நடிப்பதில் எனக்கு அவ்வளவு ஆர்வமில்லை. இப்போது படம் பார்த்தால், என்னை விட ஷாலினி பிரமாதமாக நடித்திருப்பதாகவே தோன்றுகிறது. சரியாகத்தான் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்'' என்கிறார்.

**வ**சுந்தரா முறைப்படி ஹிந்துஸ்தானி இசை பயின்றவர். மேற்கத்திய இசையிலும் அதிக ஆர்வம் கொண்டவர். 'இரண்டும் ஒன்றுக்கொன்று முரண்பட்டதில்லையா?' என்று கேட்டால், "முறைப்படி இந்திய இசை பயின்றவரால் மிகச் சுலபமாக மேற்கத்திய இசையிலும் பரிமளிக்க முடியும். இது என் அனுபவம்" என்று பதில் அளிக்கிறார்.

பெங்களூரில், ஏராளமான மேற்கத்திய இசை மேடை நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு பாடி வருபவர் வசுந்தரா. "மேடையில், ரசிகர்களை நேரடியாகப் பாடி, மகிழ்விக்க முடிகிறது. அந்த உடனடி பாராட்டும், அங்கீகாரமும் என்னை மிகவும் கவர்ந்து விட்டன. ஆனாலும், திரைப்படப் பாடல்கள் பாடுகிறபோது நான் சற்று எச்சரிக்கையுடன் இருக்கிறேன்" என்று கூறுபவர், சற்றே கசப்பான அனுபவம் ஒன்றை நினைவுகூர்ந்தார்.

அண்மையில், ஒரு படத்துக்காக ஒரு

மங்கையர் மலர்

ஜூன் 2000

## கணவருக்காக கராத்தே கற்றேன்!

●●

## விரக்தி எட்டிப் பார்க்கிறதா? விடாதீர்கள்!



## ஆன்ட்டி? ஊஹூம்... அக்கா!

●●

## தொப்பைக்கு பை!

பாடலைப் பாடியிருக்கிறார். இவர் முழு திருப்தியுடன், பாடி முடித்து விட்டார். ஆனால், அந்தப் படத்தின் பாடல்கள் வெளியிடப்பட்ட சமயத்தில், இவர் பாடியதுடன் கூட ஆங்காங்கே சற்றே விரசமான ஓசைகளையும் சேர்த்து விட்டார்கள். பாடல்களைக் கேட்ட வசுந்தராவுக்கு ஷாக்! நாம் பாடாததை, யாரோ ஒருவரைக் கொண்டு (விரசமாகப்) பாடவைத்து, சேர்த்து விட்டார்களே என்று மிகவும் ஆதங்கம்.

"அதற்குப் பிறகு, எப்போது என்னைப் பாடக் கூப்பிட்டாலும், பாடல் வரிகளை முழுக்கக் கேட்டுக் கொள்வேன். அதன் அர்த்தம் என்ன, விஷுவலாக ஆபாசம் இல்லாமல் இருக்குமா? என்றெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டுதான் பாடுவதற்கு ஒப்புக் கொள்கிறேன்!" என்கிறார் படபடப்பாக.

"நடிப்பு, பாட்டு இரண்டையும் தொடருவதாகவே ஐடியாவா?"

"இப்போதைக்கு இரண்டும் ஓ.கே.தான். நடிப்பதற்குச் சில வரைமுறைகள் வைத்திருக்கிறேன். வெறுமனே இரண்டு பாடல் காட்சிகளில் வந்து விட்டுப் போகிற கேரக்டர்களில் சகட்டுமேனிக்கு ஒப்புக் கொள்வதில் எனக்கு விருப்பமில்லை. அதே நேரம் ஹே ராம் போல அழுத்தமான கேரக்டர்கள் வந்தால் மட்டுமே ஒப்புக் கொள்வது என்கிற பிடிவாதமும் கிடையாது. வெரைட்டியான ரோல்கள் பண்ண வேண்டும்!"

இசையைப் பொறுத்தவரை, சினிமாவுக்குப் பாடுவது, மேடை நிகழ்ச்சி, தனி ஆல்பம் என்று ஏகப்பட்ட கனவுகள் வைத்திருக்கிறார். "மனதுக்குப் பிடித்த விஷயமானதால், நிறைய சந்தோஷம் கிடைக்கிறது. இப்போது நண்பர் பிரவீன் மணி என்பவர் உதவியுடன் ஒரு ஆல்பம் உருவாக்கும் பணியில் ஈடுபட்டுள்ளேன். மேக்னா சவுண்ட் நிறுவனம், இன்னும் சில மாதங்களில் அந்த ஆல்பத்தை வெளியிடப் போகிறது."

இரண்டு குதிரையில் சவாரி செய்தாலும் வசுந்தரா சிரமப்படுவதாகத் தெரியவில்லை.

— எஸ். சந்திரமௌலி

அட்டை வண்ணப்படம்; படங்கள் : பிரவீண்குமார்

# Standard எதுவானாலும் Standard சீருடை!

என்டைஸ் பள்ளி சீருடைகள்.
துடிப்புடன் திகழும் பள்ளிப்
பருவத்திற்கு உறுதியான துணை.
படிக்கும்போதும்,
விளையாடும்போதும்
என்டைஸ் சீருடை.




**என்டைஸ்®**

சிறந்த துணி ரகங்கள். சரியான விலை.

**நேஷனல் டெக்ஸ்டைல் கார்ப்பொரேஷன்**



(தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரி) லிமிடெட்
ஒரு மத்திய அரசு நிறுவனம்

35-B, சோமசுந்தரம் மில்ஸ் ரோடு, கோயமுத்தூர் - 641 009.



• ஆறுமுகசா

சிதம்பரம் நடராஜர் ஆலயத்தில், கரு வறைக்கு முன் உள்ள சிற்றம்பல மேடை யின் மீது ஏறி நின்று திருவாசகம் இசைத்த ஆறுமுகசாமி என்கிற அறுபது வயது முதியவரை, அங்கிருந்த இளம் தீட்சிதர் கள் அடித்து, உதைத்து, கோயிலுக்கு வெளியே வீசியெறிந்தனர் என்று நமக் கொரு செய்தி வந்தது.

உடனே சிதம்பரம் விரைந்தோம். தாக்குதலில் வலப்புறத் தோள்பட்டை மற்றும் அடிவயிற்றில் ஏற்பட்ட ரத்தக் கட்டுகளுக்காக சிகிச்சை பெற்றுவரும் அவரைச் சந்தித்தோம்.

"தீண்டாமை கூடாது என்றுதான், அன்று தாழ்த்தப்பட்ட சிவத் தொண்டரான சேந்தன் வீட்டுக்கு சிவபெருமானே சென்றார். அங்கே களி உண்டு, எஞ்சிய களியைக் கந்தல் துணியில் கட்டி வந்து, அதை சன்னதி முழுக்க இறைத்து விட்டும் போனான்! இதைத்தான் திருவாதிரைக் களி என்று பிரசாதமாகக் கொடுக்கிறார்கள்.

"பண்டு பறைச்சேந்தன் கொடுத்த
களியும் திருவாமிர்தமாகியதே!"

என நம்பியாண்டார் நம்பி இதைத்தான் பாடுகிறார். இப் படிப்பட்ட தலத்தில், நீதிமன்ற உத்தரவுடன் அம்பலம் ஏறி திரு வாசகம் பாட முயலும் என்னை அடித்து உதைக்கிறார்கள்! கடந்த இரண்டாண்டுக் காலத்தில் பல முறை என்னைத் தாக்கி இருக் கிறார்கள். ஆனால் இந்த முறை எல்லோரும் சூழ்ந்து

கொண்டு மிகக் கடுமையாகத் தாக்கி விட்டார்கள்!" என்று கூறும் ஆறுமுக சாமி, சிதம்பரம் நடராஜர் கோவிலுக்கும் தனக்கும் கடந்த பத்தாண்டுகளாக ஏற்பட்ட நெருக்கத்தை விவரித்தார்.

"1985-ல் குடும்ப வாழ்க்கையில் இருந்து

# தில்லையில் தீண்டாமைத் தீ!

கொஞ்சம் கொஞ்சமாகப் பிடிப்பு குறைய ஆரம்பித்தது. வீட்டு நிர்வாகத்தை மனைவி, பிள்ளைகளிடம் விட்டுவிட்டு, உத்திரகாசிக்குச் சென்றேன். அங்கே சுந்தரானந்த சாமிகளைச் சந்தித்தேன். அந்த வடநாட்டு சாமியார், தேவாரம், திருவாசகம் அடங்கிய கையெழுத்துப் பிரதி ஒன்றை என்னிடம் கொடுத்து, "எல்லாமும் இதில் இருக்கிறது. இதை சிவாலயங்களில் ஓது... மற்றவர்களுக்கும் பயிற்சி கொடு" எனக் கூறி அனுப்பினார்.

"இந்த நிலையில் ஜெயலலிதா ஆட்சியின் போது எல்லா சமூகத்தினரும் அர்ச்சகராகலாம் என்று அறிவித்து அது தொடர்பாகப் பயிற்சி ஆரம்பிக்கும் திட்டமும் கொண்டு வந்தார்கள். அப்போது என்னைப் பற்றிக் கேள்விப்பட்டு தேவாரம், திருவாசகம் சொல்லித்தர என்னை


• சுப்ரமணியதீட்சிதர்


• வி.வி. சாமிநாதன்


• அம்பலமேடை



• சௌந்தர்ராஜன்



• நாகலட்சுமி

அழைத்தார்கள். என்னால் இயன்ற இறைப்பணியைச் செய்தேன். இந்த நேரத்தில் சிதம்பரம் கோயிலில் தேவாரம் பாட ராஜமணி என்ற தீட்சிதரை எனது மேற்பார்வையில் அரசு நியமித்தது. ஆனால் ராஜ மணியை மற்ற தீட்சிதர்கள் அம்பலத்தில் ஏறி தமிழில் பாடக்கூடாது என மிரட்டி விட்டனர். நானும் போராடிப் பார்த்தேன். ஒன்றும் நடக்கவில்லை.

"இந்நிலையில் நாமே ஒரு சிவாலயம் கட்டி, தேவாரம் இசைப்பது என்ற முடிவோடு எனது கிராமத்திலேயே (குமுடிமூலை) பசுபதீஸ்வரர் ஆலயம் கட்டி, ஒரு கால பூஜை நடத்த அரசின் உதவி பெற்று அதன்படியே நடத்தி வந்தேன்...

"ஆனாலும் மனசுக்குள் புழுக்கம்... 'எனது அம்பலத்தில் வந்து பாடாமல் ஏன் முடங்கி விட்டாய்? என் ஆலயத்திற்கு வா... எத்தனை சோதனை வந்தாலும் தயங்காதே!' என்று பரம்பொருள் என்னிடம் சொல்லிக்கொண்டே இருப்பது போல இருந்தது. எனவே எனது நண்பர்களோடு, கடலூர் மாவட்ட நீதிபதி சிங்கார வேலுவைச் சந்தித்து, அம்பலத்தில் நின்று தேவாரம் இசைத்தபடி இறைவனை தரிசிக்க அனுமதி கேட்டேன். அவர் இரண்டு அதிகாரிகளையே உடன் அனுப்பி எங்களுக்குப் பாதுகாப்புக் கொடுத்தார்.

"அந்த அதிகாரிகள் முன்னிலையில், கடந்த ஆண்டு நவம்பர் மூன்றாம் தேதி அம்பலத்தில் பாடினேன். மறுநாள் அதிகாரிகள் இன்றி பாடச் சென்றபோது என் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளினார்கள்! அதன் பிறகு அதே மாதம் 18-ஆம் தேதி சிதம்பரம் நகர காவல் துறையின் பாதுகாப்புடன் சபையில் பாடினேன். மறுநாள் 19-ஆம் தேதி பாடியபோது பத்துக்கும் மேற்பட்ட தீட்சிதர்கள் கீழ்த்தரமான வார்த்தைகளைக் கூறி, ஜாதியின் பெயரையும் சொல்லி என்னைக் கீழே பிடித்துத் தள்ளி விட்டனர். இறையன்பர்கள் சிலர் அருகில் இருந்ததால் என்னைக் காப்பாற்றி அழைத்து வந்தார்கள். அதன்பிறகு நான் மானசரோவர் யாத்திரை சென்று விட்டேன்.

"மறுபடியும் நீதிமன்ற உத்தரவுப்படி கடந்த மே மாதம் எட்டாம் தேதி, காலை பத்து மணிக்கு அம்பலத்தில் தொண்டர்களுடன் தேவாரம் இசைக்கப் போனேன். அம்பலம் ஏறி ஆறு வரிகள்தான் பாடினேன்...

"சுப்ரமண்ய தீட்சிதர் என்பவர் அங்கிருந்த பிற தீட்சிதர்களையும் அழைத்துக்கொண்டு, என்னை மிகக் கேவலமாகத் திட்டியபடி 'இவனை அடிச்சு தள்ளுங்க' என்று சத்தம் போட்டதும், என்னை அம்பலத்தில் இருந்து கீழே தள்ளி எல்லோரும் இடுப்பு, கழுத்து, வயிறு பகுதிகளில் மிதித்தார்கள். நிலைமை மோசமானதை அடுத்து உடன் இருந்தவர்கள் என்னை மருத்துவமனையில் சேர்த்தார்கள். காவல் நிலையத்தில் புகார் செய்தோம். ஆனால் இதுவரை யாரையும் ஒரு வார்த்தை கூட விசாரிக்கவில்லை.

"ஆனால் என் உடம்பில் உயிர் இருக்கும் வரை அம்பலத்தில் திருவாசகம் இசைத்து, தில்லை திருத்தலத்தில் இருக்கும் தீண்டாமைப் பேயை விரட்டப் பாடுபடப் போகிறேன்!" என்கிறார் ஆறுமுகசாமி.

இந்த ஆறுமுகசாமி யார், எப்படிப்பட்டவர் என்பதை அறிய அவரது குமுடிமூலை கிராமத்திற்குச் சென்றோம்.

"காடா இருந்த ஊருக்கு பஸ் வசதி, பள்ளிக்கூடம், ஆஸ்பத்திரி கொண்டு வந்தது உட்பட, அதிகாரிகளைப் போய்க் கேட்டுப் பல வசதிகள் செஞ்சு கொடுத்திருக்கார்... மூணு கிராமங்கள்ல கோயில் கட்டிக் கொடுத்திருக்கார். கொஞ்சம் கூட சுயநலம் இல்லாதவர். அவரும் பல வருஷமா போராடித்தான் பார்க்கறாரு. ஆனா, தொடர்ந்து அவருக்கு அடியும் உதையும், அவமானமும்தான் சிதம்பரம் கோயில்ல கிடைக்குது" என்கிறார் குமுடிமூலை கிராம வாசியான சௌந்தர்ராஜன்.

"அவருக்கு நான் சம்சாரமா இருக்கிறதே பெரிய பாக்கியம்! மத்ததை ஈஸ்வரன் பார்த்துக்குவார்" என்கிறார் அவரது மனைவி நாகலட்சுமி.

"இமயமலை போயி வந்த பிறகு தம்பி ஆளே மாறிட்டான். அவன் முகத்தைப் பார்த்தாலே எனக்கு மரியாதை வருது... ஒரு சிலருக்குத்தான் அவனை மாதிரி ஆகிற பாக்கியம் கிடைக்குது. என் குடும்பத்துக்கு இந்த ஜென்மத்திற்கு இவன் போதும்" என்று கண் கலங்குகிறார் ஆறுமுகசாமியின் அண்ணன் கன்னையன்.

சிதம்பரம் நகர காவல் நிலையத்தை அணுகினோம்.

தீட்சிதர்கள், ஆறுமுகசாமி என்ற இரண்டு பெயர்களைக் கேட்டதும், எஸ்ஐ எல்லா விவரமும் தருவார் என்று கூறிவிட்டு இன்ஸ்பெக்டர்

குப்புசாமி அவசர கதியில் ஜீப் ஏறி மறைந்தே போனார்.

எஸ்.ஐ. சுரேந்திரகுமார், தலைமைக் காவலரை அழைத்து, ஆறுமுகசாமி மே எட்டாம் தேதி கொடுத்த புகாரை நம்மிடம் காட்டிடச் சொன்னார். அந்தப் புகார் பத்து வரிகளே டைப் செய்யப்பட்டிருக்கக் கண்டு, நமக்கும் குழப்பமானது!

காரணம், காவல் நிலையத்தில், தாம் கொடுத்த விரிவான புகாரின் நகலை ஆறுமுகசாமி நம்மிடம் கொடுத்திருந்தார்!


• கண்ணையன்


• ஸ்ரீனிவாசன்


• ராம்சபேசன்

"ஆறுமுகசாமிக்கு இதே வேலையாகப் போய்விட்டது. தீட்சிதர்களுக்கும், ஆறுமுகத்திற்கும் இடையில் பஞ்சாயத்து பண்ணுவதை விட்டால் எங்களுக்கு வேறு வேலையே இல்லையா?" என்கிறார்கள் போலீசார்.

"ஆறுமுகசாமி புகாரின் பேரில் தீட்சிதர்கள் மீது என்ன நடவடிக்கை எடுத்தீர்கள்? உடனடியாகக் குற்றப் பத்திரிகையின் நகலை அனுப்பி வையுங்கள்" என்று மாவட்ட நீதிபதி, டெல்லியில் உள்ள மனித உரிமைக் கழகம், மாவட்ட ஆட்சியர் ஆகியோர் எழுத்துபூர்வமாகக் கேட்டும் சிதம்பரம் போலீசார் எந்த பதிலும் அனுப்பவில்லை. இதோ ஆதாரம்!" என்று சம்பந்தப்பட்ட ஆவண நகல்களை நம்மிடம் கொடுத்தார், இந்த விவகாரத்தைத் தொடர்ந்து கவனித்து வரும், குருஞான சம்பந்தர் பணி மன்றம் என்ற அமைப்பை நடத்திவரும் ஸ்ரீநிவாசன் என்ற இளைஞர்.

"ஆறுமுகசாமியைப் பொருத்தவரை, அவரை இந்த ஊரில் உள்ள முன்னாள் அமைச்சர்தான் இயக்குகிறார் என்று நினைக்கிறேன்" என்று சொல்கிறார் சிதம்பரம் நகர ஆர்.எஸ்.எஸ். செயலர் ராம் சபேசன்.

எம்.ஜி.ஆர் அமைச்சரவையில் இந்து அறநிலையத்துறை அமைச்சராக இருந்த வி.வி. சாமிநாதனையும் அவரது இல்லத்திலேயே சந்தித்தோம்.

"ஆறுமுகசாமியை நீங்கள் முடுக்கி விடுவதாக குற்றம் சாட்டுகிறார்களே, உண்மையா?" என்றோம்.

"ஆறுமுகசாமி எனக்குத் தெரிந்தவர்தான்... அவர் ஒரு எளிமையான மனிதர். எதற்கும் ஆசைப்படாதவர். சிவ பக்தர். அவரது பக்தியைக் கிளறி விடவோ, தூண்டி விடவோ, இது ஒன்றும் அநாகரிகமான அரசியல் அல்ல! சுதந்தரத்திற்கு முன்பே சென்னை உயர்நீதிமன்ற பெஞ்ச் சிதம்பரம் நடராசர் கோவில் சைவர்களுக்கு உரிய ஒரு பொதுக்கோவில். அதில் தீட்சிதர்கள் மட்டுமே உரிமை கொண்டாட முடியாது என்று தீர்ப்புக் கூறியுள்ளது. அதை உச்ச நீதிமன்றம் உறுதி செய்துள்ளது. ஆனால், தீட்சிதர்கள் அரசுச் சட்டத்தின் கீழ் இதைக் கொண்டு வருவதை அனுமதிக்கவில்லை. இப்போதைய திமுக அரசு, நாலரை ஆண்டுகளுக்கு முன்பு இந்தக் கோவில் நிர்வாகத்தைக் கவனிக்க ஒரு நிர்வாக அலுவலரை நியமித்தது. அவர் தனது அலுவலக பெயர்ப் பலகையை மாட்ட கோவில் உள்ளே சென்ற போது, பலகையைப் பிடுங்கி உடைத்து, அவரையும் வெளியே தள்ளிவிட்டார்கள்! காஞ்சி முனிவருக்கே அபிஷேகம் செய்ய அனுமதி மறுத்த இவர்களுக்கு, ஒரு ஏழை ஆறுமுகசாமி எம்மாத்திரம்? இதையெல்லாம் பேசிப்பேசி நான் களைத்துப் போனது தான் மிச்சம்!" என்கிறார் வி.வி. சாமிநாதன்.

கடந்த எட்டாம் தேதி ஆறுமுகசாமி தாக்கப்படக் காரணமாக இருந்ததாகக் கூறப்படும் சுப்ரமண்ய தீட்சிதர் என்ன சொல்கிறார்?

"அம்பலத்துல நின்னு பாடறதுக்குன்னுதான் நாங்க இருக்கோமே... இங்கே எதுக்கு ஆறுமுகசாமி...? அம்பலத்துக்குக் கீழே நின்னு பாடினா பகவான் ஏத்துக்க மாட்டாரா? ஆறு கால பூஜை நேரம் போக பக்தர்கள் யாரு வேணும்னாலும் சன்னதியில் – அம்பலம் தவிர எங்க வேணுமானாலும் நின்னு பாடிக்கலாம். இதுக்கு நாங்க தடை சொல்றதில்லே! எங்க உரிமையைப் பறிக்க யாரையும் அனுமதிக்க மாட்டோம். இவ்விஷயத்தில் ஜாதி ஒரு பொருட்டே அல்ல!" என்று அடித்துச் சொல்கிறார். அதற்கு மேல் நாம் கேட்ட எதையுமே அவரோ, தற்போது தலைமை தீட்சிதராக இருக்கும் கனகசபை தீட்சிதரோ காதில் போட்டுக் கொள்ளத் தயாராக இல்லை!

– ஜெயந்தன்

படங்கள்: வெங்கடேஷ்

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2000

படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!

| | | |
|---|---|---|
| முதல் பரிசு | – | ரூ. 5000 |
| இரண்டாம் பரிசு | – | ரூ. 3000 |
| மூன்றாம் பரிசு | – | ரூ. 2000 |



தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர் எனில், வழக்கம் போல் போனஸ் உண்டு!

***விதிமுறைகள் :***

- சரித்திரம், சமூகம், மர்மம், நகைச்சுவை என எப்படிப்பட்ட கதையாகவும் இருக்கலாம். கதை உங்கள் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும்; அவ்வளவுதான்!
- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர்குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2000'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

  **ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
  **ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.**
- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : **ஜூன் 15.**
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 6 ஆண்டு மலரில் வெளியாகும்.

***படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.***

**— ஆசிரியர்**







2000 ஜூன் 4
விக்ரம வைகாசி 22
மலர் : 58
இதழ் : 45

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## கலைஞர் — 77

அரசியல் தலைவர்கள் பிறந்த நாள் கொண்டாடி கேக் வெட்டுவது என்பது இன்று ஒரு சம்பிரதாயச் சடங்காகவே ஆகிவிட்டது. உண்மையில் அது ஆத்ம பரிசோதனைக்கு ஏற்றதான நாள் ஆகும்.

நமது வாழ்நாள் எந்தவிதத்தில் பிறருக்குப் பயனுள்ளதாக அமைந்தது? நேர்மையுடன் வாழ்ந்தோமா? என்ன சாதிக்க எண்ணினோம்? அதில் எந்த அளவுக்கு வெற்றி பெற்றோம்? என்றெல்லாம் வாய்மையுடன் சிந்திக்க வேண்டிய தருணம் அது.

பொது வாழ்வில் ஈடுபட்டுள்ள தலைவர்களை, இதே போன்ற கேள்விகளை எழுப்பி மக்களும் எடை போடுவார்கள்.

அப்படிப் பார்க்கும்போது, இன்று பாரதத்தில் உள்ள தலைவர்களில் பிறந்த நாள் கொண்டாடப்படுவதற்கு உண்மையிலேயே தகுதி பெற்ற ஓரிருவரில் கருணாநிதி ஒருவராகிறார்!

அண்ணாவின் தலைமையை ஏற்று, பெரியாரிடமிருந்து பிரிந்து வந்த பிறகும் பெரியாரை மதித்துப் போற்றுவது; தமது தலைவர் சி.என்.ஏ.விடம் வைத்த பெருமதிப்பில் என்றும் மாறாதிருப்பது போன்ற பண்பாடுகள் ஒருபுறம். அண்ணாவுக்குப் பிறகு ஆட்சிப் பொறுப்பும் கட்சித் தலைமையும் ஏற்றுப் பலவித சோதனைகளையும் தாங்கி, தி.மு.க.வை ஆழமாக




வேரூன்றச் செய்து வளர்த்தது மறுபுறம்.

கட்சித் தலைமையில் அவர் காட்டிய ஆற்றலை விஞ்சியது ஆட்சித் தலைமையில் அவர் வெளிப்படுத்திய நிர்வாகத் திறன். இப்போது சொன்னால் பிசகில்லை. அண்ணாவுக்குப் பிறகு நெடுஞ்செழியனா, கருணாநிதியா என்ற கேள்வி எழுந்தபோது ராஜாஜி நண்பர்களிடம் சொன்னார் : "தி.மு.க. எம்.எல்.ஏக்கள் என் பேச்சைக் கேட்பார்களென்றால் கருணாநிதியைத் தான் முதல்வராக்க வேண்டுமென்பேன்." அப்படியே நடந்தது. அந்த அளவுக்கு கலைஞரின் ஆற்றலையும் சுறுசுறுப்பையும் எடை போட்டு வைத்திருந்தார் ராஜாஜி.

இன்றைக்கும் 77வது வயதில் அதே அளவு சுறுசுறுப்புடனும் ஆற்றலுடனும் இயங்கி வருகிறார். "நான் கோப்புகள் என் மேஜைக்கு வரக் காத்திருப்பதில்லை. அவற்றை ஃபோன் மூலமே துரத்திச் சென்று வரவழைத்து தீர்வு காண்பேன்" என்றார் ஒருமுறை. அதனால்தான் அண்ணா அமைச்சரவையில் பொதுப் பணித்துறை அமைச்சராகப் பதவி ஏற்றதும் காங்கிரஸ் ஆட்சியில் தூங்கிக் கொண்டிருந்த ஏராளமான ஃபைல்களில் நாநூறுக்கு மேற்பட்ட கோப்பு களை ஒரே வாரத்தில் ஆராய்ந்து முடிவுகள் எடுக்க அவரால் முடிந்தது. இதனை கின்னஸ் சாதனை என்று கூடச் சொல்லலாம்.

அவரது தமிழ்ப் பற்றையும் தமிழ் அறிவையும் பறைசாற்றக் கோட்டம் முதல் குமரி வரை எத்தனையோ அடையாளங்கள். அரசியலில் அவருடைய பரம எதிரி கூட அவரது செயலாற்றலையும் எழுத்தாற்றலையும் நினைவாற்றலையும் கண்டு மலைக்காமல் இருக்க முடியாது.

கலைத் துறையில் - குறிப்பாக சினிமாத் துறையில் - அவர் நிகழ்த்திய சாதனைகள் திரைப்பட சரித்திரத்தில் பொன் எழுத்துக்களில் மிளிரும்.

கலைஞர் ஆட்சியில் குறைகளே இல்லை என்று கூறிவிட முடியாது. 'மதுவிலக்கை ரத்து




செய்ய வேண்டாம்' என்று தமது தள்ளாத வயதில் ராஜாஜி கலைஞரின் வீடு தேடிச் சென்று மன்றாடும்படியாயிற்று. அது ஒரு கரும்புள்ளிதான். அப்புறம் சர்க்காரியா கமிஷன். அது அரசியல்ரீதியான குற்றச்சாட்டாக இருக்கலாம், அல்லது அரசியல் காரணங்களுக்காக வழக்குகள் வாபஸ் பெறப்பட்டிருக்கலாம். என்றாலும் அது ஏற்படுத்திய கசப்பு உணர்வு நீடிக்கிறது.

ஆனால் அதற்கெல்லாம் ஈடுகட்டுவது போல் அவர் பின்னால் கிடைத்த வாய்ப்புகளை சிறப்பாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார். தாமும் உயர்ந்து தமிழகத்தையும் உயர்த்தியிருக்கிறார். தமிழகத்தில் இன்றுவரை நிலவியுள்ள வேறு எந்த ஆட்சியையும் விட கலைஞரின் இன்றைய ஆட்சி சாதனைகள் மிக்கது என்றால் 'புகழ்ச்சிக்கு ஒரு எல்லை இல்லையா?' என்று சிலர் கேட்கலாம். ஆனால் நாளைய சரித்திரம் புள்ளி விவரங்களுடன் இதை நிரூபிக்கத்தான் போகிறது.

தமிழகம் அவரிடம் இன்னும் நிறைய எதிர்பார்க்கிறது. குறிப்பாக இலங்கைப் பிரச்னையில் அவர் பிறருக்கு வழிகாட்ட முடியும். தனித் தமிழ்நாடு கோரிக்கையை ஒரு காலகட்டத்தில் அண்ணா எவ்வளவு விவேகத்துடன் கைவிட்டார் என்பதை எண்ணிப் பார்த்து அதே வழியைப் பின்பற்றுமாறு ஈழத் தமிழர்களுக்கு அவர் அறிவுறுத்த வேண்டும்.

பேச்சு வார்த்தைகளுக்கு உதவி, இலங்கையின் இறையாண்மையை மதிக்கின்ற தமிழ் ஈழ மாநிலம், சுயாட்சி அதிகாரங்களோடு உருவாக வகை செய்ய வேண்டும்.

மத்திய அரசு விவகாரம் என்று ஒதுங்காமல் வாஜ்பாய் அரசுடன் கைகோத்து முயற்சிகளை மேற்கொள்ளலாம். வெற்றி பெற்றால், அமைதிக்கான நோபல் பரிசு காத்திருக்கிறது. அதை நீர்வே நாட்டுக்கு விட்டுக் கொடுப்பானேன்! ●

**'டாப்ஸ் குரூப்' என்பது இந்தியாவின் முன்னணி செக்யூரிடி ஏஜென்ஸிகளில் ஒன்று. அதன் நிர்வாக இயக்குனர் திவான் ராகுல் நந்தா அண்மையில் சென்னை வந்திருந்தார். அவர் தமது திரில்லிங் அனுபவங்களைச் சொல்கிறார் :**

மும்பையில் மைக்கேல் ஜாக்ஸன் இசை நிகழ்ச்சி நடந்தபோது, மாநில போலீஸ் தவிர, பாதுகாப்புப் பொறுப்பை எங்களிடமும் கொடுத்திருந்தார்கள். எங்கள் ஆட்கள் முன்னூறு பேர். ஐயாயிரம் போலீஸ். நிகழ்ச்சி துவங்குவதற்குப் பதினெட்டு மணி நேரம் முன்பிருந்தே மக்கள் மைதானத்துக்கு


• காஜோல் திருமணம்

வெளியில் கூட ஆரம்பித்து விட்டனர். (நிகழ்ச்சிக்கு மூன்று மணி நேரத்துக்கு முன்புதான், மைதானத்துக்குள்ளே அனுமதி) முண்டியடித்த கூட்டம், இரவில் நின்று கொண்டே தூங்கியது; வெயிலில் தவித்தது; உணவுக்குத் திண்டாடியது.

இரவு மைக்கேல் ஜாக்ஸன் மேடையில் தோன்றிய மாத்திரத்தில், உணர்ச்சிவசப்பட்டு மயங்கி விழுந்த இளம்பெண்கள் முப்பது பேராவது இருக்கும்! அவர்களை, உடனடியாக அங்கே நிறுத்தி வைக்கப்பட்டிருந்த ஆம்புலன்சுக்குக் கொண்டு போய் முதலுதவி செய்யப்பட்டது.

கூட்டத்தின் இடிபாட்டில் சிக்கி, கீழே விழுந்து, எழுந்திருக்க முடியாது தவித்த ஒரு கால் ஊனமுற்ற பெண்ணை, அப்படியே தூக்கிச் சென்று மிதிபாடுகளிலிருந்து காப்பாற்றினோம்.

இருபத்தையாயிரம் பேர் கொள்ளளவு கொண்ட மைதானத்தில் திரண்ட முப்பத்தி ஐந்தாயிரம் பேரைச் சமாளித்தது, ஒரு பெரும் சாதனைதான்.

● மும்பை திரையுலகில், மிகவும் புகழ் பெற்ற காஜோல், அஜய் தேவ்கான் திருமணத்துக்கு மிகவும் முக்கியமான சிலரே அழைக்கப்பட்டிருந்தனர். ஆனால், திருமணம் நடந்த இடத்துக்கு வெளியே, ஆயிரக்கணக்கான ரசிகர்கள் திரண்டு விட்டனர். கூட்டத்தையும் சமாளித்தாக வேண்டும்; ரசிகர்களையும் மனம் நோகச் செய்யக் கூடாது என்று எங்களுக்கு


• உலகக் கோப்பைப் பயணம்...


• ஸ்டார்களுக்குப் பாதுகாப்பு...

உத்தரவு. அன்று எல்லாம் சுமுகமாக முடிந்தது என்றாலும் எங்களைப் பொறுத்தவரை அது பெரிய சவால்தான்.

● உலகக் கோப்பை கிரிக்கெட் போட்டி ஆரம்பிக்கு முன், கோப்பை, இந்தியாவின் பல்வேறு நகரங்களுக்கும் கொண்டு செல்லப்பட்டது நினைவிருக்கும். அதனைப் பாதுகாப்பாகக் கொண்டு போகிற பணி எங்களிடம் தான் ஒப்படைக்கப்பட்டது. பல்வேறு ஊர்களிலும், ஆயிரக்கணக்கில் கிரிக்கெட் ரசிகர்கள் திரண்டு, உலகக் கோப்பையைக் கண்டு ரசித்து, இந்திய அணியை வாழ்த்தினார்கள். நாங்கள் கோப்பையைப் பாதுகாக்கும்

பணியைத் திருப்திகரமாக முடித்து விட்டோம். இந்திய அணிதான், கோப்பையைக் கோட்டை விட்டு விட்டது, ஆஸ்திரேலியாவிடம்!

● சென்னையில், திருட்டு வீடியோவைத் தடுக்க கராத்தே வீரர் ஹூசைனி, நேரடியாக நடவடிக்கை எடுப்பது இங்கே சட்டத்துக்குப் புறம்பானது என்று விமர்சனம் எழுந்துள்ளது. ஆனால், பீவி நெம்பர் ஒன், குச் குச் ஹோதா ஹை, தால் போன்ற பல இந்திப் படங்களின் திருட்டு வீடியோ தடுப்புப் பணி எங்களிடம் ஒப்படைக்கப்பட்டது. நாங்கள், வீடியோக் கடைகளில் ரெய்டு, அடிதடி என்று இறங்கவில்லை. காரணம், அது இந்த வியாதிக்குச் சரியான மருந்து இல்லை. பிரச்னையின் வேரைக் கண்டு பிடித்து, அங்கே வெட்டுவதுதான் சரியானது.

# தேடு; வெட்டு!

எனவே தீவிர புலனாய்வின் மூலம் திருட்டு வீடியோ, சிடிகளைத் தயாரிக்கும் பாக்டரிகளைக் கண்டுபிடித்தோம்.

"இன்னின்ன படங்களின் திருட்டு வீடியோவைத் தடுக்கும் பொறுப்பை நாங்கள் ஏற்றிருக்கிறோம். அப்படங்களின், திருட்டு வீடியோ, சிடி வெளிவந்தால், நீங்கள் கடுமையான விளைவுகளைச் சந்திக்க வேண்டியிருக்கும்!" என்று எச்சரித்து விடுவோம். இதற்கே நல்ல பலன். இதையும் மீறி திருட்டு வீடியோ வெளியானால், போலீஸ் உதவியுடன் ரெய்டு செய்து, பிடித்து விடுவோம். இந்த முயற்சிக்கு நல்ல பலன் கிடைத்து வருகிறது.

● வட இந்தியாவில், ஒரு பிரபல டிடர்ஜெண்ட் பவுடரின் விற்பனை தொடர்ந்து சரிய ஆரம்பித்தது. இதில் ஏதோ சதி இருப்பதாக அதன் தயாரிப்பாளர்களுக்குச் சந்தேகம். எங்களை அழைத்தார்கள். நாங்கள் எங்கள் டிடெக்டிவ் பிரிவினை முடுக்கி விட்டோம். அவர்கள், மிக நுட்பமாகச் செயல்பட்டார்கள். சில்லறை வியாபாரிகளின் கடைகளில் காத்திருந்து, அவர்களுக்குப் போலி டிடர்ஜெண்ட் சப்ளை செய்வது யார் என்று கண்டுபிடித்து, அவர்களை ரகசியமாகப் பின் தொடர்ந்து, அதன் விநியோகஸ்தர்களைக் கண்டுபிடித்தோம்.

பின் அவர்களை நேரடியாக அணுகி, ஒரு லட்சம் ரூபாய்க்கு (போலி) சரக்கு வாங்கினோம். இது போன்று இரண்டு, மூன்று தடவை வாங்கி அவர்களின் நம்பிக்கையைப் பெற்று, பின் போலி உற்பத்தி செய்யும் இடம் பற்றி மோப்பம் பிடித்தோம். தக்க நேரத்தில் போலீசுடன் அதிரடியாய் ரெய்டு செய்து, கோடிக்கணக்கான மதிப்புள்ள போலிச் சரக்கு, மெஷின்கள், கச்சாப் பொருட்கள் அனைத்தையும் கைப்பற்றினோம். சட்டப்படி அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டது.

● எங்களிடம் சமீப காலமாகக் கணவனைச் சந்தேகப்படும் மனைவிமார்களும், மனைவியைச் சந்தேகப்படும் கணவன்மார்களும் உதவிகோரி அதிகமாக வருகிறார்கள். எங்கள் ஆட்கள், சந்தேகத்துக்குரியவரை நிழல் போல இரவு பகலாகத் தொடர்ந்து, கடைசியில் உண்மையைக் கண்டுபிடிக்கிறார்கள். ஒரு பெண்மணி, எங்கள் புலனாய்வின் கிளைமாக்ஸின்போது, தானும் கூடவே இருப்பேன் என்று பிடிவாதம் பிடித்து உடன் இருந்தார். அவரது கணவர், இன்னொரு பெண்ணுடன் ஒரு ஓட்டல் அறையில் இருந்தபோது, கையும் களவுமாகப் பிடிபட்டார். அவள் அப்போது கணவருடன் போட்ட சண்டை இருக்கிறதே, அப்பப்பா! உணர்ச்சி பொங்கும் சினிமா காட்சி கெட்டது போங்கள்!

சந்திப்பு : **கௌதம்**



• நிலான் ராகுல் நந்தா

## நிர்மலா சுரேஷ்

# ஆடாதே; பாடு!

என் தந்தை, திருச்சி செயின்ட் ஜோஸப் கல்லூரியில் பேராசிரியர். சீதாலட்சுமி கல்லூரிக்குப் பின்புறம் இருந்த ஆண்டாள் தெருவில்தான் நாங்கள் அப்போது குடியிருந்தோம். அது ஒரு அக்ர



ஹாரம் போன்றது. அக்கம்பக்கத்துப் பெண்கள், பாட்டு, பரதநாட்டியம், வயலின் என்று கற்றுக்கொண்டு அசத்துவார்கள். எனக்கு பரதநாட்டியம் கற்றுக் கொள்ள ரொம்ப ஆசை. ஆனால் அம்மாவுக்கு அது பிடிக்கவில்லை.

"நாட்டியம் ஒரு குறிப்பிட்ட வயசு வரைதான் ஆட முடியும். ஆகையால் நீ வாய்ப்பாட்டு கற்றுக் கொள்" என்றார் அவர்.

அம்மா, நன்றாக வயலின் வாசிப்பார். எம்.எஸ்ஸின் தீவிர ரசிகை. இருப்பினும் என் நாட்டிய ஆசைக்கு ஸ்பீட் ப்ரேக்கர் போடப்பட்டது.

சரி, படிப்பு விஷயத்திலாவது நமது விருப்பம் நிறைவேறுகிறதா பார்ப்போம் என்று பொறுத்திருந்தேன். எங்கள் தெருவில் நிறைய வழக்கறிஞர்கள் இருந்தார்கள். காலை வேளைகளில் கறுப்புக் கோட்டுகளுடன் அவர்கள் செல்வதைப் பார்க்கும்போது, "என்ன இது, ஒரு பெண் வழக்கறிஞர் கூடக் கிடையாதா?" என்று நான் வியந்ததுண்டு.

எங்கள் குடும்பத்தில் பெண்கள், பட்ட மேற்படிப்பு படித்தால் பொருளாதாரம், ஆங்கில இலக்கியம் படிப்பார்கள். பின்பு லெக்சரராகக் கல்லூரியில் சேர்ந்து விடுவார்கள். எனவே நான் வழக்கறிஞராக வர விருப்பம் என்று சொன்னவுடன் எதிர்ப்பு!

'திருச்சியில் சட்டக் கல்லூரி கிடையாது. சென்னைக்கு அனுப்பிப் படிக்க வைக்க முடியாது. நீயும் பொருளாதாரம் அல்லது ஆங்கில இலக்கியம் படி' என்று நச்சரித்தார்கள்.

"வழக்கறிஞர் படிப்புக்குத்தான் தடை போடுகிறீர்கள். என் விருப்பப்படி செயல்பட அனுமதியுங்கள்" என்று போராடி, நேஷனல் கல்லூரியில் தமிழ் இலக்கியத்தில் சேர்ந்தேன். என் இலக்கிய வாழ்க்கைக்கான வாசல் அங்கேதான் திறந்தது!

கறுப்புக் கோட்டு போட்டு கோர்ட்டுக்குத்தான் போக முடியவில்லையே தவிர நான் கனடாவில் சில காலம் இருந்தபோது கோர்ட்டில் வேலை செய்யும் வாய்ப்புக் கிடைத்தது. கனடாவில் இலங்கைத் தமிழர்கள் தொடர்புடைய வழக்குகள் நீதிமன்றத்துக்கு வரும்போது மொழிபெயர்ப்பாளராகப் பணிபுரிந்தேன். இலக்கியத்தைப் பொறுத்தவரை சைவ சித்தாந்தத்தையும் கிறிஸ்துவத் தத்துவங்களையும் ஒப்பிட்டு ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டம் வாங்கும் ஆசை இருந்தது. திருச்சி பிஷப்பாக இருந்த தாமஸ் பெர்னான்டோ, தமிழ்ப் பேராசிரியர் சி. பாலசுப்பிரமணியம் ஆகியோர் எனக்கு இந்த விஷயத்தில் பக்கபலமாக இருந்தாலும் சரியான 'கைடு' கிடைக்காததால் அந்த ஆசையும் நிறைவேறவில்லை!

— ர[illegible]

படம் : ராஜ[illegible]



# இவர் நிஜ சக்திமான்!

சக்திமான் டி.வி தொடர் ரொம்ப பாபுலராக இருக்கலாம். ஆனால் பெங்களூரில் ஒரு நிஜமான 'சக்திமான்' இருக்கிறார். பெயர் மனோஜ் குமார் சோப்ரா. வயது முப்பத்து ஒன்று. ஆயிரத்துக்கும் அதிகமான பக்கங்கள் கொண்ட டெலிபோன் டைரக்டரியை அவரிடம் கொடுத்தால் இரண்டாய்க் குறுக்கு வாட்டில் கிழித்து விடுகிறார்! (பார்க்க படம்.)

இரண்டு கைகளையும் கோர்த்துக்கொண்டு, தம் கட்டினார் என்றால், உங்களால் அவரது பலத்தைக் கற்பனை கூடச் செய்து பார்க்க முடியாது. இரண்டு பக்கமும் கயிறு கட்டி, அவற்றை இரண்டு மாருதி கார்களில் இணைத்துவிட்டு, காரை முதல் கியரில் போட்டு ஸ்டார்ட் பண்ணினால், கார் ஒரு இஞ்ச் கூட நகராது! இதற்கு பதிலாக, இரண்டு பக்கமும் தலா ஆயிரம் பேர் நின்றுகொண்டு, கைகளைப் பிரிக்க முயன்றாலும், இந்த சக்திமானிடம் பாச்சா பலிக்காது!

இவரது ஃபேவரிட் ஐட்டம் என்ன தெரியுமா? குழந்தைகள் பலூன் ஊதுவது போல, வீக்கத்துக்கு வென்னீர் ஒத்தடம் கொடுக்கப் பயன்படுத்துவார்களே, ரப்பரினாலான பை, அதை பலூன் மாதிரி பிரம்மாண்டமான சைசுக்கு ஊதியே உடைப்பது! சாதாரணமாக காரில் பயன்படுத்துவதற்கு ஏற்ற ஒரு டியூபை ஊத வேண்டுமெனில் முப்பது பவுண்டு காற்றழுத்தம் அளவுக்கு ஊத வேண்டும். ஒரு லாரி டயருக்குக்கூட தொண்ணூறு பவுண்டு காற்றழுத்தம் போதுமானது. ஆனால், ஒரு வென்னீர் ஒத்தடம் தரும் ரப்பர் பையை ஊதியே உடைக்க வேண்டுமெனில் ஐந்நூறு பவுண்டு காற்றழுத்தம் அளவுக்கு ஊத வேண்டும்!

அண்மையில், ரிப்பிள்ஸ் என்ற கண்காட்சி சென்னையில் நடந்தபோது, ஸ்பெஷல் ஐட்டமாக மனோஜ் சோப்ரா சாகசங்கள் செய்து காட்டினார். கராத்தே போலவே இன்னொரு சாகசப் பயிற்சியான 'டெக்வான்டோ' அறிந்த ஒரு குழுவினைக் கொண்டு மேடை நிகழ்ச்சிகள் நடத்தி வருகிறார், மனோஜ். பள்ளிகள், கல்லூரிகள், பொது நிகழ்ச்சிகள், கண்காட்சிகளில்



• 'டமால்' ஆகப்போகிறது!

மனோஜ்குமாரின் 'பவர் டீம்' சாகசக் காட்சிகளைச் செய்து காட்டி வருகிறது. நூற்றுக் கணக்கான நிகழ்ச்சிகள் வழங்கியுள்ள மனோஜின் பெயர் லிம்கா சாதனைப் புத்தகத்தில் இடம் பெற்றுள்ளது. இவ்வாண்டு ஆஸ்திரேலியாவில் உள்ள சிட்னியில் நடைபெறும் ஒலிம்



பிக்ஸில், இவரது சாகச நிகழ்ச்சியை விளையாட்டு வீரர்கள், பார்வையாளர்கள் முன்னால் செய்து காட்டும் அரிய வாய்ப்பு கிடைத்திருக்கிறது!

“**ம**னோஜ் நீங்கள் 'சக்திமான்' ஆனது எப்படி?”

“நான் வெயிட் லிப்டிங்கில் கோல்டு மெடலிஸ்ட். 1997ல் டெலிவிஷனில், உலகின் அதி பலசாலியான மனிதன் போட்டியைப் பார்த்தேன். பல்வேறு நாடுகளையும் சேர்ந்தவர்கள் அதில் பங்கேற்றாலும், இந்தியா சார்பில் ஒருவரும் இல்லை. அது எனக்கு



• 'டர்ர்...' சப்தம் கேட்டதா?

வருத்தத்தை அளித்தது. நாம் ஏதாவது செய்ய வேண்டும் என்ற உந்துதல் ஏற்பட்டது. என்ன செய்வது என்று யோசித்த வேளையில் அமெரிக்காவில் உள்ள 'பவர் டீம்' என்ற சாகசங்கள் செய்யும் குழுவினர் பற்றிய வீடியோ கேஸட் ஒன்று கிடைத்தது. அதைப் பார்த்தபின் என்ன செய்யலாம் என்று ஐடியா கிடைத்தது!”

“டெலிபோன் டைரக்டரியைக் கிழிப்பது, வெந்நீர் ஒத்தடப் பையை ஊதுவது எல்லாம் ரொம்ப சிரமமாயிற்றே! எப்படிப் பயிற்சி செய்தீர்கள்?”

“நான் முறையான உடற்பயிற்சி செய்யும், பளு தூக்கும் சாம்பியன் என்றாலும், இது போன்ற வேலைகள் ரொம்ப கஷ்டமாகத்தான் இருந்தன. எல்லோரும் உறங்கியபின் இரவு பன்னிரண்டு மணிக்கு மேல்தான் நான் என் பயிற்சியை ஆரம்பிப்பேன். விடியற்காலை நாலு மணி வரை பயிற்சி செய்வேன். வெந்நீர் ஒத்தடப் பையை சாதாரண சைசுக்கு ஊதவே மிகவும் கஷ்டப்பட்டேன். ஊதி, ஊதி, கழுத்துப் பகுதி துவண்டு விடும். நரம்புகள் கூட பாதிக்கப்பட்டன. ஆனால் என் கடுமையான பயிற்சி, ஆழமான பிரார்த்தனை மற்றும் கான்சன்ட்ரேஷன்தான் சாதனை ரகசியம். இன்றுவரை அது தொடர்கிறது!

“பருமனான டெலிபோன் டைரக்டரியைக் கிழிப்பதற்கு முன் நான் பழைய பேப்பர் கடைகளிலிருந்து ஏராளமாகப் புத்தகங்கள் வாங்கிவந்து பயிற்சி செய்தேன். என் முதல் நிகழ்ச்சியைப் பார்த்துவிட்டு, டேக்வான்டோ பயிற்சி பெற்ற இளைஞர்கள் சிலர் என்னை அணுக, நாங்கள் எல்லோருமாகச் சேர்ந்து ஒரு 'பவர் டீம்' உருவாக்கினோம்.

“எங்கள் பவர் டீம், வெறுமனே ஷோ நடத்துவதில்லை. அதற்கு ஒரு நோக்கம் உண்டு. வழக்கமான நிகழ்ச்சிகளுடன்கூட, எங்கள் அணியினர் மது பாட்டில்களை வைத்து, வெறும் கையாலேயே உடைப்பது வழக்கம். அப்போது புகை பிடித்தல், மது, போதைப் பொருள் இவையாவும் உடலுக்குக் கெடுதல். இந்தப் பழக்கங்கள், உங்களிடம் இருந்தால், இங்கே நாங்கள் பாட்டில்களை உடைத்து சிதற அடிப்பது போல நீங்களும் அந்தத் தீய பழக்கங்களை அடித்து நொறுக்கி விடுங்கள் என்று கூறுவோம்!” என்கிறார் மனோஜ்.

“மனோஜ்! வெந்நீர் ஒத்தடப் பையை ஊதுவது, டெலிபோன் டைரக்டரியைக் கிழிப்பது– இதில் எது ரொம்பக் கஷ்டம்?”

“இரண்டையும் விட கிழிப்பதற்கு டெலிபோன் டைரக்டரி கிடைப்பதுதான் மகா கஷ்டம்!”

சந்திப்பு: **மௌலி**

# குஷி



சில பேரிடம் "என்னங்க உங்க ஹாலிடே ட்ரிப் எப்படிங்க இருந்தது?" என்று கேட்டு வைத்தோம், தொலைந்தோம். "அதாவதுங்க, சனிக்கிழமை கிளம்பினோமா, இல்லை இல்லை.. சனி இல்லை, திங்கட்கிழமை கிளம்பினோம்... ஐய்யோ திங்கள் கூட இல்லைங்க, ஞாயிறோட ஞாயிறு எட்டு. திங்கள் ஒன்பது...ஆங், செவ்வாய்க்கிழமை கிளம்பினோங்க... செவ்வாய் இல்லையே..."

நமக்கு அப்போது ஒரு அவஸ்தை ஏற்படும் பாருங்கள், அதே அவஸ்தை டைரக்டரின் ஃபுல் - ஸ்கேப் அளவு முகவுரையைக் கேட்கும்போது ஏற்படுவது நிஜம்.

ஈகோ காரணமாகத் தங்கள் காதலை கன்ஃபெஸ் பண்ணிக் கொள்ளாத காதலர்கள் விஜய் - ஜோதிகா. காலேஜ் லைஃப் முடிந்து பிரிய வேண்டிய தருணத்தில் தவறை உணர்ந்து ஒன்று சேர்கிறார்கள். ஆக மொத்தத்தில் அவுட் அண்டு அவுட் ஒரு காதல் கதை.

ஆனால் காதல் ரொம்ப பெரிஃபரலாகச் சொல்லப் பட்டிருப்பதால் இருவரும் ஒன்று சேர வேண்டும் என்ற ஆதங்கமோ, சேராமல் போய் விடுவார்களோ என்ற டென்ஷனோ நமக்குத் துளியும் ஏற்படாமல் ஆடியன்ஸாகவே இருந்து விடுகிறோம்.

அது மட்டும் இல்லாமல், அவர்களுடைய ஈகோ கொஞ்சம் கொஞ்சமாகத் தளர்ந்து, நெருக்கம் அதிகரித்து, கடைசியில் ஒன்று சேர்ந்திருந்தால் சுவாரஸ்யமாக இருந்திருக்கும். அதை விடுத்து க்ளைமாக்ஸின் முந்தின காட்சி வரைக்கும் முறுக்கிக் கொண்டிருந்துவிட்டு, தடாலென்று 'ஐ லவ் யூ, யூ லவ் மீ' என்று உருகி உருக்குலைந்து போவது மனதைத் தொடவே இல்லை. 'எனர்ஜி-பாக்டு', 'எக்ஸ்ப்ரெஷன் - பாக்டு' ஆக இருக்கும் 'ஜோ'விற்கு ஈடு கொடுக்கவாவது விஜய், உணர்ச்சிகளை முகத்தில் இன்னும் நன்றாகக் காண்பித்திருக்கலாம்!

தன் மகளைப் பற்றித்தான் புலம்புகிறா[ர்] என்று புரியாமல் விஜய் சொல்லச் சொல்ல விஜய[குமார்] 'இன்னொஸண்ட்' ஆக, அதேசமய[ம்] இன்வால்மெண்ட்டோடு கேட்டுக் கொள்ளு[ம்] விதம் இருக்கிறதே, அப்பப்பா.. படத்திற்குப் பட[ம்] இந்த மனுஷர் என்னமாய் ஜொலிக்கிறார்?

பீச்சில் போடப்பட்டிருக்கும் செட், நி[லா] ஸிலாந்த் 'லாண்ட்ஸ்கேப்'ஐ எல்லாம் தோ[ற்] கடித்து விடுகிறது. பேசாமல் சிங்கார[ச்] சென்னை பிராஜெக்ட்டை 'தோட்டா'விட[ம்] கொடுத்து விடலாம்!

— கிருஷ்ணா சிதம்பர[ம்]

## புகழ் பெற்ற ஜோதிஷர், மந்திர சாஸ்திர நிபுணர் பண்டித காழியூர் ம. பத்மநாபன்



எனது தந்தையார் அடியேனுக்கு மந்திரோபதேசம் செய்யும் காட்சி

பிரபல ஜோதிஷர் (பண்டித காழியூர் பத்மநாபன்) காழியூர் ஸ்ரீனிவாச சாரியாரின் மூத்த புதல்வரும், ஜோதிஷ மந்திர சாஸ்த்திரங்களில் 45 வருடங்களுக்கு மேலாக நன்கு தேர்ச்சியும், ஆசீர்வாதமும், பெற்றவரால் மகத்தான சக்தி வாய்ந்த, யந்திரங்கள், சக்கரங்கள் (வெள்ளியில் தயாரிக்கப்படுகின்றன) மகாலக்ஷ்மி கவசம் ரூ.250/- மகா சுதர்சன யந்திரம் ரூ.250/- லக்ஷ்மி நரசிம்ம கவசம் ரூ.350/- தனாகர்ஷண யந்திரம் ரூ.350/- மகா சுதர்சன சக்கரம் ரூ.600/- மஹாலக்ஷ்மி சக்கரம் ரூ.600/- இவை தவிர அநேக விதமான யந்திரங்களும், கவசங்களும், (விசேஷ பூஜாக்ரமப்படிக்கு) தயாரித்து அனுப்பப்படும். வெளிநாட்டு நேயர்கள் இரட்டிப்புத் தொகை டி.டி. மூலம் அனுப்ப வேண்டும். தபால் செலவு ரூ.100/- B.P.O. மூலம் அனுப்பி பெறலாம்.

கம்ப்யூட்டர் ஜாதகம் தமிழ்/ஆங்கிலம் ரூ.60/- ஜாதகத்தின் பொதுப் பலன்கள் நேரில் சொல்வதற்கு ரூ.100/- ஆயுள் பலன் (வருஷம், மாதம், தேதி, நேரம், ஊர்) ரூ.250/- சாதாரண தபால் மூலம் அனுப்ப ரூ.25/- பதிவுத் தபால் மூலம் அனுப்ப ரூ.30/- நேரில் சந்திக்க: **காலை 8 மணி முதல் 11 மணி வரை**

*பிரபல ஜோதிஷர்*

**பண்டித காழியூர் பத்மநாபன்**

**'தபோநிதி'**

நெ. 5, வித்யோதயா முதல் மெயின் தெரு
த.பெ. எண்: 1411, தி. நகர் சென்னை - 600 017. போன் : 8263814
தென் இந்தியா (கிளைகள் ஏதும் கிடையாது)

***முக்கிய கவனிப்பு:*** தபால் மூலம் வரும் எல்லா கடிதங்களும் வெகு கண்டிப்பாக பரம இரகசியமாக வைக்கப்படுகின்றன. வீட்டில் கிரகதோஷம் மற்றும் எந்த தோஷங்களும் பாதிக்காமலிருப்பதற்கு, சுதர்சன ஹோமம், மகா சுதர்சன சக்கரம் பிரதிஷ்டை செய்து தரப்படும். உள்ளூர் வாசிகளுக்கு மட்டுமே செய்யப்படும். நேரிலோ தபால் மூலமோ தொடர்பு கொள்ளலாம்.




## अपैरल ट्रेनिंग एण्ड डिज़ाईन सैन्टर

# Apparel Training & Design Centre

(Sponsored by AEPC, Ministry of Textiles, Govt. of India)

**No.18-23, Readymade Garment Complex, Thiru Vi Ka Industrial Estate, Guindy, Chennai - 600 032. Ph: 2312121; Telefax: 2312121 / 4346416**

**Applications are invited for admission to the job oriented courses:**

| S.No. | Name of the course | Eligibility | Duration |
|---|---|---|---|
| 1. | Diploma in Apparel Manufacturing Technology | +2 | 1 year |
| 2. | Diploma in Fashion Sampling / Coordination | +2 | 1 Year |
| 3. | Pattern Cutting Masters' Course (Regular / Evening) | 10th Std. | 6 months |
| 4. | Production Supervisor / Quality Controller | +2 | 6 months |
| 5. | Machine Mechanic | 10th Std. | 4 months |
| 6. | Measurement and Quality control / Sewing Machine Operator | 8th Std. | 3 months |

The Centre also arranges suitable placement for deserving candidates. Registration-cum-Application Form can be obtained by Cash Rs. 100/- or Rs. 125/- by post, drawing DD/IPO on Apparel Training & Design Centre, payable at Chennai.

V. Nagarajan
Jt. Director

**Last date for receipt of application is 12.6.2000**

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

# குறையொன்று

**பா**துகைகளின் பெருமையைச் சொன்னேனல்லவா? அதை உலகமெல்லாம் தெரியப்பண்ணியவன் யார் என்று கேட்டால் பரதன்தான்! அந்த பரதன் இல்லையானால் பாதுகா பிரபாவம் உலகத்திலே தெரிந்திருக்குமா? அவனல்லவா பிரகடனப்படுத்தினான்.

நரசிம்ஹாவதாரத்துக்குக் காரணம் யார்? பிரஹலாதன்தானே! அவன் இல்லாவிட்டால் நரசிம்ஹாவதாரம் உண்டோ. பரம பாகவதோத்தமனாய்த் திகழ்கிறான் பிரஹலாதன்.

பகவானைக் காட்டிலும் பன்மடங்கு உயர்ந்தோர் பாகவதோத்தமர்கள். அதனால்தான் பகவானே அவர்களுக்குக் கட்டுப்படுகிறான். விஷ்ணு மாயா என்று பகவானுக்குப் பெயர். அப்படிப்பட்ட மாயன், மாயாவி என்று பெயர் பெற்றவனே பாகவதோத்தமர்களிடம் தோற்றுப் போகிறான்- என்ன பண்ணுவது என்று தெரியாமல் தோற்றுப் போகிறான்!

அதனால்தான் பாகவதோத்தமனான பரதனுக்கு அஞ்சலி செய்கிறார் சுவாமி தேசிகன் பாதுகா சஹஸ்ரத்திலே. இரண்டாவது சுலோகத்திலேயே, 'பரதனின் பொருட்டு இந்த அஞ்சலி' என்று சொல்கிறார்.

அடியார்கள் பெருமையைப் பாசுரங்கள் சொல்லும் அழகே அழகு. திருமங்கையாழ்வார் சொல்கிற அழகைப் பாருங்கள்-நாராயணனிடத்திலிருந்து எல்லாவற்றையும் பெற்றதாகச் சொல்கிறார்:

குலம் தரும்; செல்வம் தந்திடும்; அடியார்
படுதுயர் ஆயின எல்லாம்
நிலம் தரும் செய்யும்; நீள் விசும்பு அருளும்;
அருளொடு பெருநிலம் அளிக்கும்;
வலம்தரும்; மற்றும் தந்திடும்; பெற்ற தாயினும்
ஆயின செய்யும்
நலம்தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன்
நாராயணா என்னும் நாமம்

குலம் தரும்- என்றால் தாஸ்ய குலத்தை அருளும். தாஸ்யர்கள்- அவன் அடியார்கள். இப்படி ஆரம்பத்திலேயே பாகவதோத்தமர்களைச் சொல்லித்தான் பாசுரத்தைப் பாடுகிறார்!

இது பெரியதிருமொழி என்று பெயர். பெரிய திருமொழியை ஒருத்தர் சொல்லிவிட்டாரானால், மீதி பாசுரங்களெல்லாம் சுலபமாகச் சொல்லிவிடுவார். வேதத்திலே இரண்டாம் காண்டம் ஐந்தாம் காண்டம் ஆறாம் காண்டம்- இதெல்லாம் ரொம்பக் கஷ்டம். அதே மாதிரி திவ்ய பிரபந்தத்திலே பெரிய திருமொழி- திருமங்கையாழ்வார் அருளிச் செய்தது கஷ்டம். அதனால் அதைத்தான் முதலில் அத்யயனம் பண்ண வைப்பார்கள். பண்ணி விட்டால் மீதி பாசுரமெல்லாம்-நம்மாழ்வாரெல்லாம் லலிதமான பாசுரம்- சுலபமாக வரும்.

பெயரையே பாருங்கள்- பெரிய திருமொழி ஆயிற்றே! அதிலே ஆரம்பத்திலேயே அஷ்டாக்ஷரப் பெருமையைச் சொல்லி 'நின் அடியார்க்கு அடிமை நான்' என்றே கூறுகிறார். ஆகவே அஷ்டாக்ஷர மந்த்ரம் நமக்கு என்ன ஞானத்தை உண்டு பண்ணுகிறது என்றால், குலசேகர





ஆழ்வார் முகுந்த மாலை யிலே சொல்கிறாரே அந்த விஷயம்தான்: அடியவர்க்கும் அடிய வர்க்கும், அடியவர்க் கும், அடியவர்க்கும், அடியவர்க்கும் அடிய வனாய் இருக்கும்படி யான நிலையைத் தரு கிறது!

பெரியாழ்வார் என்ன பண்ணினார்.. இங்கேயிருந்து காசிக்குப் போனார். அங்கே ஒரு வித்வான் இருந்தார். அவர் இவருக்குச் சொல்லிக் கொடுத்தார்: 'நித்யம் நான் என்ன பண்ணவேண்டும்?' என்று கேட் டார் இவர்.

அவர் சொன்னார், "நித்யம் 'ஸோஹம் ஸோஹம்' என்று ஜபம் பண்ணவேண்டும். உமக்கு அதனால் க்ஷேமம் ஏற்படும்."

இவரும் 'ஸோஹம் ஸோஹம்' என்று சொல் லிக் கொண்ட காஞ்சிபுரத்துக்கு வந்துவிட் டார். அங்கே காஞ்சிபுரத்திலே வந்தவுடனே ஒரு வித்வான், "நீங்கள் சொல்வது நன் றாகத்தான் இருக்கிறது: அதற்கு முன்னே ஒரு 'தா' போட்டுக் கொள்ளுங்கள்- ஸோஹத் துக்கு முன்னே" என்றார்.

'தா' போட்டால், 'தாஸோஹம்'

# மில்லை

'தாஸோஹம்' என்று ஆகிவிட்டது. அதைச் சொல்லிக் கொண்டே காசிக்குப் போனார். போனால், அங்கே அந்த வித்வான் பார்த்தார். "இதுவும் நன்றாகத்தான் இருக்கிறது, ஆனால் 'தா'வுக்கு முன்னால் ஒரு 'ஸ' போட்டுக் கொள் ளுங்கள் என்றார்.

தாஸோஹம் என்பது ஸதாஸோஹம் ஆயிற்று. "ஸதாஸோஹம், ஸதாஸோஹம், ஸதாஸோஹம்" என்றபடி இவர் அங்கேயிருந்து காஞ்சிபுரத் துக்கு வந்தார். அங்கேயுள்ளவர் இரும்பவும், "அதற்கு முன்னே ஒரு 'தா' போடு" என்

றார்.

"தாஸதாஸோஹம் தாஸதாஸோஹம் தாஸதாஸோஹம்" என்று ஆயிற்று. அதற்கப் புறம் அதிலேயே நின்றுவிட்டார் அவர்!

தாஸர்களுக்கு தாஸனாக, காஞ்சிபுரத்திலே இருந்து கைங்கர்யம் பண்ணுதல் என்கிற உயர்ந்த ரீதியிலே எம்பெருமானிடத்தில் ஈடுபட்டார் பெரியாழ்வார்.

இப்படி தாஸர்களுக்கு தாஸனாய் இருத்தல் பெருமை. ஆஞ்சநேயனுக்கு என்ன பெருமை என்றால் எம்பெருமான் திருவடியை ஆச்ரயித்த பெருமை. நமக்கெல்லாம் என்ன பெருமை என்றால், ஆஞ்சநேயனுடைய திருவடியை ஆச்ரயிப்பது பெருமை. பகவத் பக்தன் அவன். அவனுடைய அனுக்கிரஹத்தினாலே பகவானுடைய அனுக்கிரஹமும் நமக்கு விசேஷமாக ஏற்படும். அதனால் பாகவதோத்தமர்களுடைய திருவடியை விடாமல் பற்ற வேண்டும்.

கேவலம் விஷ்ணு விஷ்ணு என்று பாராயணம் பண்ணுவதால் மட்டும் பகவான் திருப்தி அடைய மாட்டான். அந்த விஷ்ணு பக்தியுடையவர்களிடத்திலே அன்புடன் இருந்தால்தான் அவனுடைய அனுக்ரஹத்தை நாம் சம்பாதிக்க முடியும். இந்த பகவத் பக்தி என்கிற அனுஷ்டானமில்லாமல், கேவலம் ஞானத்தால் மட்டுமே நாம் பெருமையை அடைந்துவிட முடியாது.

அதனால்தான் நம்முடைய சம்பிரதாயத்திலே ஞானிகளைக் காட்டிலும், ஞானவான்களைக் காட்டிலும் அனுஷ்டாதாக்களுக்குத்தான் ஏற்றம் அதிகம்.

ஏனென்றால் அவர்கள் நடந்து காட்ட வேண்டும். இப்படிப் பலபேர் அனுஷ்டானம் பண்ணினால்தான் மற்றவர்களுக்கு அவர்களைப் போல் நடந்து கொள்ளத் தோன்றும்.

ஞானம் இருக்கிறது ஒருத்தருக்கு. எல்லாம் தெரிந்து வைத்திருக்கிறார். பிரும்ம முகூர்த்தத்தில் எழுந்திருக்க வேண்டும். பகவானை ஆராதனை பண்ணவேண்டும். எட்டு மணிக்குள் காலை ஆராதனை பண்ண வேண்டும். பன்னிரண்டு மணிக்குள் மத்தியான ஆராதனை. சாயங்காலம் ராமாயணம், பாகவதம் பாராயணம்.- இப்படி எல்லாம் தெரியும். ஆனால், அவர் எழுந்திருப்பதே பன்னிரண்டு மணிக்கு தான் எழுந்திருக்கிறார்! என்ன பிரயோஜனம்! அனுஷ்டானம் இல்லையே?

நாய் வால் திருந்துவது இல்லை! தூக்கிக் கொண்டிருக்கும் நாய் வாலை என்னதான் பத்து நாட்களுக்குப் போட்டு அப்படியே கட்டி வைத்தாலும் பழைய படிதான் போய் நிற்கும். மாட்டின் வாலைப் போல அது மான சம்ப்ரக்ஷணத்துக்கோ ஈ ஓட்டுவதற்கோ பயன்படாது. அனுஷ்டானம் இல்லாமல் வெறும் பாண்டித்யம் மட்டும் இருந்தால் அது நாய்வாலைப் போன்று பிரயோஜனமற்றது. எந்தவிதமான நலனும் அதனால் ஏற்படாது.

அனுஷ்டானம் பண்ணக்கூடிய மகான்களால்தான் உலகம் முழுவதும் உஜ்ஜீவிக்கும் ஆனதனாலே, அனுஷ்டாதாக்களாக இருத்தல் வேண்டும். அந்த அனுஷ்டானத்தின்படி மகான்கள் திருவடியை ஆச்ரயிக்கவும் வேண்டும்.

திருமழிசையாழ்வார் ஒரு பாசுரத்தில் சொல்கிறார். (அவர் சொல்வதற்கு விஷ்ணு புராணம்தான் மூலம்):

யமன் தன் சேவகர்களைக் கூப்பிட்டுச் சொல்கிறானாம் - 'பாகவத அபசாரப் படாதீர்கள்' என்று சொல்கிறானாம்.

"துளஸி மணி மாலையை அணிந்து

## அருள்வாக்கு

முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்றுண்டு. பௌராணிகர்கள் எந்த அளவுக்கு ரஸாபாஸம் உண்டாக்காமல் கதை சொல்கிறார்கள்? ஏதோ கொஞ்சம் பாலிடிக்ஸ், ஹாஸ்யம், உபகதைகள் வந்தால் பரவாயில்லைதான். ஆனால் இதுகளே கதையை, அதன் தத்வார்த்தத்தை அடித்துக் கொண்டு போகிற மாதிரி செய்து விட்டால் அது ரஸாபாஸம். பகவான் நினைவை உண்டாக்குவதுதான் ரஸம். அதையும் அந்தப் புராணத்தில் சொல்லியிருக்கிற பிரகாரம், அதைவிட்டு ரொம்பவும் வெளியே ஓடிவிடாமல், மனஸில் பதிகிற மாதிரி சொல்ல வேண்டும். இதற்கு முக்கியமாக ஸ்வாநுபூதி இருக்க வேண்டும். கதை சொல்கிறவருக்கே ஆஸ்திக்யம்,



ஆசாரங்கள், தெய்வ பக்தி, தாம் சொல்கிறதில் மனமார்ந்த நம்பிக்கை எல்லாம் இருக்க வேண்டும். அவரே விஷயத்தில் (ஸப்ஜெக்டில்) தோய்ந்தவராக இருந்துவிட்டால், வேண்டாத கதைகள், பாலிடிக்ஸில் போவதற்கு அவருக்கே மனசு வராது. ஸினிமா, நாவலுக்குப் பதில் அதே மாதிரி இன்னொரு பொழுது போக்கைப் போலப் புராணப் பிரவசனமும் ஆகிவிட்டால் அதில் ஒரு பிரயோஜனமும் இல்லை.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

கொண்டிருக்கிறார்கள். விஷ்ணு பக்தர்கள் என்ற சின்னத்தைத் தரித்துக் கொண்டிருக்கிறார்கள். மகான்கள் அவர்கள்; சாத்விகர்கள்!"

வைஷ்ணவ சப்தத்துக்கு வைஷ்ணவர்கள் என்ற அர்த்தம் இருந்தாலும் இன்னொரு அர்த்தத்தையும் பெரியவர்கள் காட்டுகிறார்கள். 'திருமண் இட்டுக் கொண்டிருந்தால் வைஷ்ணவர்கள் என்று நினைக்காதீர்கள். அது ஒரு சின்னம். வைஷ்ணவர்கள் என்றால் யார்? சாத்விக குணம் இருக்க வேண்டும். அப்படிப்பட்டவனையே வைஷ்ணவன் என்று அழைக்கலாமேயொழிய தமோ குண ரஜோ குண மிருந்தவர்களை விஷ்ணு பக்தி உடையவர்கள் என்று சொன்னால் பிரயோஜனமில்லை.

சாத்விக குணமுடையவர்கள்கிட்டே போகக் கூடாது என்று யமன் தன் வேலையாட்களுக்குச் சொல்லி வைக்கிறான். "அவர்களுக்கெல்லாம் நான் பிரபு அல்ல. மற்றவர்களுக்குத்தான் நான் எஜமானனேயொழிய சாத்விகர்களுக்கு அல்ல..." என்று சொல்கிறான்.

எங்களாழ்வார் என்று சொல்லக்கூடிய விஷ்ணுசித்தர் என்பவர் திருவெள்ளறை என்ற க்ஷேத்திரத்தில் அவதாரம் செய்தார். விஷ்ணுபுராணத்துக்கு அழகான வியாக்யானம் எழுதியிருக்கிறார் அவர். விஷ்ணு சித்தீயம் என்று பெயர் அதற்கு. அதிலே அவர் எழுதுகிறார்:

"யமன் ஏன் இப்படிச் செவியோடு செவியாய்த் தன் தேவகர்களைக் கூப்பிட்டுச் சொல்கிறான்? எல்லோரையும் கூப்பிட்டு வைத்துப் பெருத்த குரலில் சொல்லக் கூடாதா அந்த யமன்...? ஏன் இப்படிக் காதோடு காதாக ரகசியமாகச் சொல்கிறான்...?" என்று கேட்டு, "காரணத்தோடு தான்" என்று பதிலும் சொல்கிறார்.

நடுத் தெருவிலே நின்று கொண்டு ஒருத்தன் "நான் ராஜ குமாரத்தியைக் காதலிக்கிறேன்" என்று சொன்னானானால் என்ன நடக்கும்? சிரச்சேதம் நடக்கும்! பகிரங்கமாக அந்த விஷயத்தைச் சொல்ல முடியுமா?

அந்த மாதிரி, 'விஷ்ணு பக்தர்களிடத்திலே போகாதீர்கள்!' என்று சொல்வதைக் கூட உரத்த குரலில் சொன்னால் அது பெருத்த அபசாரம் என்பதனாலே, ரகசியமாகக் கூப்பிட்டு 'ஜாக்கிரதை! ஜாக்கிரதை!' என்று ரொம்ப முக்கியமான ஒரு விஷயத்தை எப்படிப் பெரியவர்கள் சொல்வார்களோ, அந்த மாதிரி அருகில் அழைத்து யமன் சொல்கிறான் என்றால், அந்த யமனுக்கே பாகவதோத்தமர்களிடத்திலே எவ்வளவு பயம், பாகவதோத்தமர்களிடத்திலே எவ்வளவு பக்தி என்று தெரிகிறது அல்லவா!

(தொடரும்)

---

**"நீங்க போலீஸ் வேலைல சேர்ந்ததிலிருந்து எனக்கு நிம்மதியே இல்லீங்க..."**

**"ஏன் அப்படிச் சொல்றே?...."**

**"பின்னே, யாரைப் பார்த்தாலும், 'இன்னுமா உன் புருஷனுக்குத் தொந்தி போடலே, போடலே'ன்னு கேட்டுக் கேட்டு நச்சரிக்கிறாங்களே!"**

**— மிஸ்டர் எக்ஸ்**



# வட்டமேஜை

✉ ஊழல் பேர்வழிகளை சேர்க்க மாட்டோம் என்று சொல்லிவிட்டு கட்சிக்காக உழைக்கக் கூடிய யாராயிருந்தாலும் வரவேற்பதில் தவறில்லை என முன்னுக்குப் பின் முரணாகச் சறுக்கியிருந்தார் ஆலடி அருணா.

சி.மகேஷ், சென்னை-26

✉ இரா. சுந்தரமூர்த்தியின் 'தடம்' கவிதைகளும், அதற்கான வண்ண ஓவியமும் நெஞ்சில் 'பச்சக்' கென்று ஒட்டிக் கொண்டுவிட்டன!

வி. பரமசிவம், மதுரை

✉ எங்களைப் போன்ற வெளியூர் வாசிகள், நேரில் கண்டாற்போல் திருப்தி ஏற்படுத்தியது தங்களின், 'மேம்பால யாத்திரை' கட்டுரை!

ஆர். பிரகாஷ், பொன்மலை

✉ பறவைகள் பூங்காவில் கிளிகள் செய்த சாகசத்தையும், சாதனைகளையும் நேரில் கண்டு ரசிக்க முடியவில்லையே என்ற ஏக்கத்தை ஏகமாய்ப் போக்கிவிட்டது கட்டுரை. சபாஷ்!

எஸ்.கே.மூர்த்தி, கும்பகோணம்




✉ 'ஜேம்ஸ்பாண்டு' படத்தின் நொந்து போன விமரிசனத்தில், இவர்கள் நம்மைச் சிரிக்க வைக்கவில்லை என்று யார் அழுதார்கள்? என்ற கடைசி வரிகளைப் படித்ததும், சிரிப்பு தன்னாலே வந்துடுச்சுங்க!

யமுனாரெங்கநாதன், சென்னை-97

## கடைசியில் வந்த சிரிப்பு!

✉ தத்து எடுப்பவர்களின் மனநிலையைத் தெளிவாகப் பதிவு பண்ணியிருந்தார் ஜெயஸ்ரீ ராஜ், வேண்டும் வேண்டும் சிறுகதையில். ஆரம்ப வரியில் வேண்டாமே என்று ஆரம்பித்து இறுதி வாக்கியத்தில் வேண்டும் என்று முடித்திருந்தது வெகு அழகான கோர்வை.

சு. இந்துமதி, நெய்வேலி

✉ பெட்டி நிறைய டிப்ஸ் செய்திகளை அள்ளி வழங்கி வெளியூர் செல்வோருக்கு யோசனை வழங்கிய கல்கிக்கு நன்றிகள் பல.

என். சாம்பமூர்த்தி, திருச்சி-18

✉ காஞ்சிப் பெரியவரின் திருநக்ஷத்திரத்தைக் கொண்டாடும் வண்ணம் அவரது உபன்யாசக் கருத்துத் தொகுப்பு மற்றும் பட்டு சாஸ்திரிகளின் அனுபவத் தொகுப்பை வெளியிட்டது மிகவும் மகிழ்ச்சியைத் தந்தது.

ஸ்ரீனிவாசன், சென்னை

✉ கிராமங்களையும் கொஞ்சம் கவனியுங்கள் என்ற தலையங்கம் படித்தேன். கோலப்பன் கமிட்டி அறிக்கை எப்படியோ இருக்கட்டும், இன்று கிராமங்களில் வயல்வேலை செய்வோருக்குக் கைநிறையச் சம்பளம்! ஆனால் அங்கே வேலை செய்யத்தான் ஆள்கிட்டவில்லை. எல்லாம் பட்டணமோகம்.

இரா.கல்யாணசுந்தரம், மதுரை-9

✉ பாரதிராஜா அறிமுகம் என்றவுடன் அடித்துப் பிடித்துக் கொண்டு தலையில் தூக்கி வைத்துக் கொண்டு ஆடுவதும்... அன்னார் அட்ரஸ் இல்லாமல் (சமீபத்தில் ரியாசென்) போவதும் வாடிக்கையாகி விட்டது. 'ஆர்த்தி'யின் அறிமுகம் எப்படியோ, பார்ப்போம்!

ஜெயப்பிரகாஷ், கோவை.

# நால்வர் பாதை

பேராசிரியர் பெரியார்தாசன்

தன்முனைப்புப் பயிற்சியாளன் ஆனதால் தந்தை பெரியார் கொள்கை பரப்புதலையோ, சமுதாய மாற்றப் பணிகளையோ நான் கைவிட நேர்ந்ததா?

இல்லை. மாறாக, என் தன்முனைப்புப் பயிற்சி ஈடுபாடு, கொள்கை பரப்புப் பணியில் ஒரு பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியது. தமிழர்கள் அனைவருக்கும், குறிப்பாக உழைக்கும் மக்கள் அனைவருக்கும் சுரண்டல் இல்லாத ஏற்றத் தாழ்வற்ற சம வாய்ப்புள்ள, சமுதாயத்தை உறுதிப்படுத்துவதே தந்தை பெரியாரின் இலட்சியம். இதை அடையும் வழிமுறைகள் எல்லோரையும் போல் என்னாலும் எதிர்மறை வெளிப்பாடுகளாகவே பரப்பப்பட்டு வந்தன. ஆனால் என் தன்முனைப்பு ஈடுபாடு எனக்குள் ஏற்படுத்திய உடன்பாட்டுச் சிந்தனை முறை என் பெரியார் கொள்கை பரப்புமுறையிலும் தாக்கத்தை ஏற்படுத்தியது.

அதுவரை வார்த்தை யுத்த மேடையாயிருந்த என் பேச்சு மேடை, மெல்ல மெல்ல மாறி, எனக்கு உடன்பாடான கருத்துக்களை அன்பாய், ஆற்றலாய், விசாரமாய் வெளிப்படுத்தும் வசந்த மேடையாயிற்று.

கூர்ந்து கவனியுங்கள். என் கருத்துக்களில் எந்த மாற்றமும் ஏற்படவில்லை. ஆனால் எதிர்மறை அணுகுமுறை மாறி உடன்பாட்டு அணுகுமுறை ஆயிற்று.



இருட்டைப் பழிப்பதைக் கைவிட்டு ஒளி விளக்கேற்றும் முறை இது. அவ்வளவுதான்.

இந்தப் பேச்சுமுறைக்கு வரவேற்பு எப்படி இருக்கிறது என்கிறீர்களா?

இதுவரை இந்தக் கொள்கைகளை ஏற்கெனவே அறிந்தவர்களும், ஏற்றுக் கொண்டவர்களும் மட்டுமே பெரும்பாலும் என் கூட்டத்தைக் கேட்பார்கள். இப்போது புதிதுபுதிதாக மக்கள் கூடுகிறார்கள். கேட்கிறார்கள். ஏற்கிறார்கள். கொள்கைக்கு லாபம்தானே?

தந்தை பெரியார் - பாபாசாகேப் அம்பேத்கர் - மாமேதை மார்க்ஸ் ஆகியோரின் கருத்துக்களைப் பரப்ப எனக்கு மேடையளிக்கும் இயக்கங்களைப் பற்றி இங்கே கொஞ்

சம் சொல்லியாக வேண்டும்.

சென்ற நூற்றாண்டின் எழுத்து வேந்தர் யாரென்று தெரியுமா உங்களுக்கு? தமிழகத்தின் எந்தக் கிராமத்துக்கு வேண்டுமானால் செல்லுங்கள். இந்த ஊரில் யாராவது சுயமரியாதைக்காரர் இருக்கிறாரா என்று கேளுங்கள். கட்டாயம் ஒரு முதியவராவது கிடைப்பார். அவரை விசாரியுங்கள். அவர் எப்படிச் சுயமரியாதைக்காரர் ஆனார் என்று கேளுங்கள். அவருடைய வாலிப வயதில் விடுதலை பத்திரிகையில் வந்த 'குத்தூசி' பகுதியைப் படித்துத்தான் சுயமரியாதைக்காரன் ஆனேன் என்று தவறாமல் சொல்லுவார். அந்தப் பகுதியை எழுதி வந்த அந்நாளைய விடுதலை ஆசிரியர்தான் அந்த எழுத்து வேந்தர். அவரே குத்தூசி குருசாமி. அவருக்கு ஒரு சீடர். அவர் செஞ்சட்டை பஞ்சாட்சரம். அவருடைய இயக்கம் பகுத்தறிவு சமதர்ம இயக்கம். இந்த இயக்கத்தின் மேடைகளில் என்றும் என் கருத்துக்கள் பரவி வருகின்றன.



• திருச்சி விழா...

## புகை இங்கே; நெருப்பெங்கே?

சென்னை மாநகர மேயர் மு.க. ஸ்டாலின் சில நாட்கள் முன்பு திருச்சிக்கு வருகை தந்து, காவல் நிலையக் கட்டடம் அடிக்கல் நாட்டு விழா, காவல் உதவி மையங்கள், நியாய விலைக்கடைகள் மற்றும் மேல்நிலை நீர்த்தேக்கத் திறப்பு எனப் பல விழாக்களில் கலந்து கொண்டார். அரசினர் தலைமை மருத்துவமனையில் இருதய ஓட்டத்தைப் பதிவுசெய்யும் கருவியினை

தந்தை பெரியார் 1970களில் ஓர் இளைஞரைத் திடீரென்று கோவை மாவட்ட திராவிடர் கழகத்தில் பெரும் பொறுப்பில் அமர்த்தினார். தொண்டுள்ளமும் செயல்வேகமும் மிக்க அந்த இளைஞரே இன்றைய தமிழ்நாடு திராவிடர் கழகப் பொதுச்செயலாளர் கோவை கு. இராமகிருஷ்ணன். அவருடைய இயக்கக் கொள்கை பரப்புச் செயலாளர் நான்தான்.

பாபாசாகேப் அம்பேத்கர் இயக்க மேடைகளில் பிரிவு வேறுபாடு இல்லாமல் எல்லோரும் என்னைச் சிறப்புரையாற்ற அழைக்கிறார்கள். சமீபத்தில் கூட இந்தியக் குடியரசுக் கட்சியின் சார்பில் அதன் தலைவர் ஆர்.எஸ். கவாய் தலைமையில் மும்பை தாராவியில் நடைபெற்ற மாபெரும் பொதுக்கூட்டத்தில் உரையாற்றிவிட்டு வந்தேன்.

ஒரு மாடு கன்று போட்டவுடன் அந்தக் கன்று எப்படி நடக்க வேண்டும் என்று மாடு சொல்லித் தருவதில்லை. பிறந்தவுடனே கன்று துள்ளிக்குதிக்கும். ஆனால் மனிதன் குழந்தையாய்ப் பிறந்த பின் பேச, கேட்க, நுகர, நடக்க, சிரிக்க எல்லாவற்றையும் பிறர் கற்றுக் கொடுத்தாக வேண்டும். ஆக மனிதன் எல்லாவற்றையும் கற்க வேண்டிய பிராணி. கல்வியே அந்தப் பிராணியை மனிதனாக்குகிறது. மனிதன் கண்டதை, கேட்டதைக் கொண்டே புதியதைக் கற்க முடிகிறது. இயல்பாய் ஒரு மனிதன் காண்பதும், கேட்பதும் அவன் தாய் மொழி சார்ந்ததாகவே இருக்கிறது. ஆக தாய்மொழி மூலம் கற்பதே கல்வி. இந்த அடிப்படையில் தமிழகத்தில் தாய் மொழிக் கல்விக்காகப் போராடும் இயக்கம் அய்யா அருணாசலம் அவர்களால் நிறுவப்பட்டு, தமிழண்ணல் தலைமையில் இயங்கும் தமிழ்ச் சான்றோர் பேரவை. தமிழகம் முழுதும் இந்த இயக்கக் கொள்கைகளை மக்களிடம் பரப்பும் பணியும் என் பொதுவாழ்வின் ஒரு பகுதியாக உள்ளது. இப்படியாக என் சமூகப் பணி தொய்வின்றித் தொடர்கிறது.

ஆக, எனது தனி வாழ்க்கை முன்னேற்றம் என் பொதுவாழ்க்கைப் பயணத்திற்குத் தடையாக இல்லை. கூடுதல் தகுதியாகவே இருக்கிறது.

ஆளும் வளரணும், அறிவும் வளரணும். அது தாண்டா வளர்ச்சி என்பார் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம். நானும் வளரணும் சமுதாயமும் வளரணும் என்று பாடுபட்டு வருகிறேன் நான்.

இயக்கி வைத்தல், 34 புதிய மின்விளக்குகள் இயக்கி வைத்தல் வரகனேரி – இருதயபுரம் இணைப்புப் பாலம் திறப்பு விழா என அடுக் கடுக்காகப் பல நிகழ்ச்சிகள்!

ஸ்டாலினின் திருச்சி வருகை, திருச்சி மேயர் புனிதவல்லி பழனியாண்டிக்கு முன்னரே தெரி விக்கப்படவில்லை என்பதுதான் இங்கு பயங் கரமான புகைச்சல்! இத்தனைக்கும் மாநகராட்சி யின் பெயரில் அழைப்பிதழ் தயாரான விழாக் கள்! ''இது அரசு விழாவா? ஆளும்கட்சியினர் நடத்தும் பொதுக் கூட்டமா?'' என திகைத்துப் போய்க் கேட்ட மேயர் புனிதவல்லி செய்தி யாளர்களை அழைத்து, 'மு.க. ஸ்டாலின் கலந்து கொள்ளும் அரசு விழாக்களைப் புறக் கணிக்கப் போவதாக' அறிவித்ததும் பிரச்னை விஸ்வரூபமெடுத்து விட்டது.

''நிகழ்ச்சிகளில் பெரும்பாலானவை மாநக ராட்சி சம்பந்தப்பட்டவை. சென்னைக்குச் சென்று இதுபோல ஒரு பாலத்தைத் திருச்சி மேயர் புனிதவல்லி திறந்து வைக்க இவர்கள் ஒப்புக் கொள்வார்களா? விடுவார்களா?'' என ஆவேசமாகக் கேட்கிறார்கள், திருச்சி மேயரின் ஆதரவாளர்கள்.

அன்பில் பொய்யாமொழி மறைவுக்குப் பின்னால் திருச்சிக்கு மு.க. ஸ்டாலின் இரண்டு வாரத்திற்கு ஒருமுறை வந்து விட்டுப் போவதன் சிறப்புக் காரணம் புரியாமல் குழம்புகின்றனர் மக்கள்.

வரும் சட்டமன்றத் தேர்தலில், திருச்சி–1 தொகுதியில் ஸ்டாலின் போட்டியிடப் போகிறார் என்கிற பேச்சும் பலமாகக் கிளம்பியுள்ளது.

– ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

• ஸ்டாலின் வருகையால் 'மேக்அப் போட்டுக் கொண்ட' மலைக்கோட்டை!

'நான் நாத்திகன் இல்லை' என்னும் தலைப்பிலான என் வாழ்க்கைச் சுவட்டின் நினைவுக் குறிப்புக்கள் இங்கே நிறைவுறுகின்றன.

"கடவுளை மற! மனிதனை நினை!" என்ற தந்தை பெரியார் நாத்திகர்.

"படமாடும் கோயில் பகவற்கொன்று ஈயில்
நடமாடும் கோயில் நம்பர்க்கங்கு ஆகா!
நடமாடும் கோயில் நம்பர்க்கொன்று ஈயில்
படமாடும் கோயில் பகவற்கது ஆமே!"

என்ற திருமூலர் ஆத்திகர். கோயிலைவிட நடமாடும் மனிதனே முக்கியமானவன் என்பது இவரது கருத்து.

1956 அக்டோபர் 14ல், பல லட்சம் மக்களோடு பௌத்தத்திற்கு மாறியபோது பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கர் கூறினார்: "இனி நான் எந்தக் கடவுளுக்கும் கடவுளச்சிக்கும் பக்தன் அல்லன். நான் முதாதையர்க்குச் சிராத்தம் செய்ய மாட்டேன். புத்தரின் எட்டு நெறிகளை உறுதியுடன் பின்பற்றுவேன்" – அவர் ஒரு நாத்திகர்.

"சாதியிலே, மதங்களிலே, சாத்திரச் சந்தடிகளிலே,
கோத்திரச் சண்டையிலே
ஆதியிலே அபிமானித்து அலைகின்ற உலகீர்!
அலைந்தலைந்து வீணே நீர் அழிதல் அழகலவே!"

என்று பாடிய வள்ளலார் இராமலிங்க அடிகள் ஓர் ஆத்திகர்.

இவ்வாறாகத் தம் கருத்துகளை வெளிப்படுத்திய பெரியார், திருமூலர், அம்பேத்கர், வள்ளலார் ஆகிய நால்வரின் கருத்துக்களையும் முழுமனதோடு ஏற்றுக்கொண்டு இயங்குபவன் நான். இவர்களில் இருவர் நாத்திகர் எனப்படுகிறார்கள். இருவர் ஆத்திகர் எனப்படுகிறார்கள். இந்த நால்வரையும் ஏற்றுக்கொண்ட நான் நாத்திகனா? ஆத்திகனா? நீங்களே சொல்லுங்கள்.

(முற்றும்)



# தேவதைகளின்

நள்ளிரவு பன்னிரண்டு மணிக்குக் கோழி கூவுவதில்லை. பால் வண்டி வருவதில்லை. உடையவர் சந்நிதியின் வெளிப்பிராகாரத்திலிருந்து இருபது குரல்களினூடே பிரபந்தம் கசிந்து பெருகுவதில்லை. நாய்கள் ஒருவேளை குரைக்கலாம். அதுவும் தாழிடப்பட்ட செவிகளுக்குள் புகுவதில்லை. பிறகெப்படி விழித்தெழுந்து தெப்பக்குளத்துக்கு ஒடி, மோதித் ததும்பும் நீர்ப்பரப்பின் மேலெழுந்து தேவதைகள் விளையாடும் பூப்பந்தாட்டத்தைக் காண இயலும்?

தேவதைகள் தம் விளையாட்டு நேரத்தை ஏன் நடு நிசியாகக் கொள்கிறார்கள்? அதுவும் நூற்றுப்பதிமூன்று பேர் மூழ்கி இறக்குமளவு ஆழம் கொண்ட பிரும்மாண்டமான குளத்தின்



# பூப்பந்தாட்டம்

நடுவே? குளத்தில் எப்படிப் பந்தாட முடியும்? நூறடி ஆழமாம் குளம். வைதேகி அக்கா சொன்னாள். தண்ணீரின் மேலே எப்படி நடக்க முடியும்? ஓட முடியும்? பூப்பந்து மூழ்காமலிருக்கக்கூடும். ஆடுபவர்கள்?

ஏதும் புரியவில்லை எனக்கு. ஆனால் அவள் கூறும் சங்கதிகளைக் கேட்டால் ஆச்சர்யம், ஆச்சர்யமாகவே இருக்கிறது. பதைக்கப் பதைக்கக் கதை கேட்பதற்காகவே நாள் முழுக்க அவளுடனே இருக்கலாம் போலிருக்கிறது.

"இதெல்லாம் கதை இல்லேடா கிச்சு. நிஜம்மாவே உண்டு. இந்தக் குளம் இருக்கே, இது உண்டாகி இன்னியோட சரியா ஆயிரத்தி எழுநூறு வருஷம் ஆறது. ராஜராஜ சோழனுக்கெல்லாம் முன்னாடி யாரோ ஒரு ராஜா இருந்து, வெட்டியிருக்கான். எத்தனை பெரிசு பாரு! குளத்துக்கு அடியிலே மண் இருக்காது. வைடூரியம் தெரியுமா, வைடூரியம்? பளீர்னு பார்த்தாலே கண் கூசி மூடிண்டுடுவே. அந்த வைடூரியக்கல் கோடி கோடியா இதுலே கொட்டியிருக்கு! அதுவும் சாதாரண வைடூரியமில்லை. இது தேவலோக வைடூரியம்! அதுலேருந்து தண்ணி சுரந்துண்டே இருக்கும். தஞ்சாவூர் ஜில்லால எத்தனை வாட்டி ஆறு, குளமெல்லாம் வத்திப் போயிருக்கு? நீயே சொல்லு. ஒரு வாட்டியாவது நம்மூர் குளம் வத்திப் பார்த்திருக்கியா?''

"இல்லே!" என்று உணர்ச்சிவசப்பட்டுக் கத்தினேன். குளத்தின் நான்கு புறமும் இருபது, இருபது படிகள். அதில் எப்போதும் பாதி வரை நீர் மூடியே இருக்கும். கால் வைத்தால் போதும். வெடுக் வெடுக்கென்று மீன் கடிக்கும்.

"அந்த மீனெல்லாம் குளத்துல வசிக்கிற தேவதைகளோட சிப்பாய். புரியறதா? மீன் வேஷம் போட்டுண்ட சிப்பாய்! அந்துமீறி அலட்சியமா கால் வெச்சியோ, வெடுக்குனு கடிச்சுடும்! நீயே பார்த்திருப்பியே, குளிக்க வரவாளெல்லாம் ஒரு நிமிஷம் கண்மூடி மனசுக்குள்ளேயே சேவிச்சுட்டுத்தானே முழுக்குப் போடறா?''

சரியாகத்தான் சொல்கிறாள். வணங்கிவிட்டு இறங்குபவர்கள் மீன் கடி பற்றி ஏதும் பேசுவதில்லை. எழுபத்தி மூன்று சுருக்கங்களை முகத்தில் கொண்ட என் பாட்டி கூட, "கடிக்காதுடா கண்ணுு. கால்ல இருக்கற அழுக்கையெல்லாம் சுத்தம் பண்ணிடும்" என்றுதான் சொல்லியிருக்கிறாள்.

கொஞ்சம் பெரியவனாகும் வரை குளத்துப் பக்கம் போகக் கூடாது என்று அப்பா கண்டிப்பாகச் சொல்லியிருந்ததால்தான் பொறுத்துக் கொண்டிருந்தேன். இனிமேலும் பொறுக்க முடியுமா என்று தெரியவில்லை.

நடுநிசியில், நீர்ப்பரப்பில் பூப்பந்தாடும் தேவதைகள்! ஆயிரம் மின்னல்களை உருக்கிச் செய்தாற்போல அப்படியொரு தேஜஸ் அவர்கள் முகத்தில் ஒளிரும் என்றாள் வைதேகி அக்கா.

**பா. ராகவன்**

"நீ பார்த்திருக்கியோ?" என்றேன் சந்தேக முடன்.

"பின்னே? கதையா சொல்றேன்? நெஜம்டா செக்கு! தேவலோகத்துக் கற்பக மரத்துப் பூவை நெருக்கமா தொடுத்து, ஒரு ஃபுட்பால் அளவுக்குப் பெரிசா பந்தாக்கி, தூக்கித் தூக்கிப் போட்டு, ஜிங்கு ஜிங்குனு ஆடுவா. அத்தனை தேவதைகள் ஓடி ஆடினா, தண்ணி எப்படித் தெறிக்கும் தெரியுமா? முத்து முத்தா, முத்து முத்தா சிதறி, குளமே பளபளன்னு நட்சத்திரம் கொட்டினா மாதிரி ஆயிடும்!"

இமைக்க மறந்து, விரிந்து நின்றன என் கண்கள். சில விநாடிகள் கழித்துத்தான் பேச்சே வந்தது.

"நெஜம்தானே நீ சொல்றதெல்லாம்?" என்று மீண்டும் கேட்டேன்.

"நான் ஏன் கதை விடணும்? வேணும்னா நீயே ராத்திரி பன்னெண்டு மணிக்கு எழுந்து போய்ப் பாரு," என்று சொன்னாள்.

நான் மானசிகமாக உருகி அழுதகணம் அதுதான். ஒரு நாளாவது என்னால் பன்னிரண்டு மணிக்கு விழித்துக் கொள்ள முடிந்ததில்லை. சரி, தூங்காமலே இருந்து பார்ப்போம் என்றால் முடிகிறதா? ஏழு மணிக்குச் சாப்பிட்டதும் பாட்டியின் நீட்டிய கால் மடியில் சாய்ந்தால், லயம் பிசகாத அவளது காலசைப்பில் எப்படியோ பிரக்ஞை தப்பி விடுகிறது.

"பாட்டி, நான் தூங்கிட்டேன்னா, என்னைப் பன்னெண்டு மணிக்கு எழுப்பறியா?" என்று ஒருநாள் கேட்டேன்.

"எதுக்குடா கண்ணு?"

உலகிலேயே மிகப் பெரிய ரகசியமும் மர்மமும் அற்புதமுமான அந்த விஷயத்தை, வேறு யாரிடமும் சொல்லி விடக்கூடாது என்கிற கடும் நிபந்தனையின் பேரில் வைதேகி அக்கா என்னிடம் மட்டும் சொல்லியிருக்கிறாள்.

"ரொம்ப ரொம்ப நல்லவாளுக்கு மட்டுந்தான் இந்த விஷயம் தெரியலாம். நீ ரொம்ப சமர்த்துங்கறதாலதான் உன்கிட்டே சொல்றேன்! வேற யார்கிட்டேயாவது சொன்னே, குளம் வத்திப் போயிடும்!" என்கிற அவளது எச்சரிக்கை ஞாபகம் வர, பாட்டியிடம் காரணம் சொல்ல முடியாத நெருக்கடி ஏற்பட்டது. ஆகவே, எதற்கு என்று அவள் கேட்டதை உள்வாங்கிக் கொள்ளும்முன் உறங்கி விட்டவன் போலத் திரும்பிப் படுத்துக் கொண்டு விட்டேன். 'கடவுளே! நீயாவது என்னைப் பன்னிரண்டு மணிக்கு எழுப்பி விடேன்?'

பிரார்த்தனைகள் தொடர்ந்தாலும், ஒரு நாளும் அந்நேரத்தில் விழிப்பேற்பட வில்லை.

**உள**மை வெயிலடிக்கும் மத்தியானப் பொழுதுகளில், அரிசியில் கல் பொறுக்கிக் கொண்டிருக்கும்போதோ, நிலவு வரும் நேரம் கோயில் பிராகாரம் சுற்றி வரும் போதோ, வேறு பல நேரம் பொழுது போகாமல் அவளே தன் வீட்டுக்கு என்னை அழைக்கும் போதோதான் இப்படியான தேவதைக் கதைகள் கேட்கக் கிடைக்கின்றன. திடீரென்று அலட்டிக் கொண்டு கதை சொல்ல (கதை என்றால் வைதேகி அக்காவுக்குக் கோபம் வந்து விடும். எல்லாம் 'நடந்தது'!) மறுத்து, "அப்புறம் சொல்றேண்டா" என்று கழற்றி விட்டு விடுவாள். அந்தச் சமயங்களில் என் துக்கம் ததும்பி, விழிகளில் நிறையும். அவள் சொல்லிக் கொண்டே வர வர, நான் உரிய வியப்புக் குரலில் 'ஊம்' கொட்டிக் கொண்டே இருந்தால் பிரச்னையே இல்லை. குறுக்கே என் சந்தேகங்களை வினாவாக்கினால்தான் அவள் முருங்கை


• முகமது அலி

மரம் ஏறி விடுவாள்.

இந்த தேவதைகள் விஷயத்தைப் பொறுத்தவரை என்னிடம் இரு சந்தேகங்கள் தீராமலிருந்தன. பலமுறை கேட்டும் நான் சமாதானமடையக்கூடிய பதிலொன்றும் அவளிடமிருந்து வரவில்லை.

ஊரே உறங்கிக் கிடக்க, இவள் மட்டும் எப்படி விழித்திருந்து குளக்கரைக்குப் போய் தேவதைகளின் பந்தாட்டத்தைப் பார்த்திருக்க முடியும்? அந்த நேரத்தில் இவள் எழுந்து வெளியே போக அப்பா, அம்மா எப்படி விட்டார்கள்?

இது முதல் கேள்வி.

"நான் என்ன தினமுமா போறேன்? அப்படிப் போனாத்தான் அதுகள் பார்க்க விடுமா? என்னிக்கோ ஒருநாள், ரெண்டு நாள் பார்த்திருப்பேன். உனக்கொண்ணு தெரியுமா? எல்லார் கண்ணுக்கும் அவா விளையாடறது தெரியாது! தெரியக்கூடிய வாளை, வேற யாருக்கும் தெரியாம வரவழைச்சு தரிசனம் தர தேவதைகளுக்கா தெரியாது?"

இது ஒரு சரியான சமாதானமாகத்தான் அந்த விநாடியில் தோன்றும். காரணம், அவள் குரலில் உள்ள அழுத்தமும் தீர்மானமும் அவ்வாறானது. ஆனால், தனியே வந்து யோசிப்பதற்கு இந்தப் பதில் உகந்ததல்ல. சிந்தனையின் மிருதுவான இழைகளை மிக முரட்டுத்தனமாகப் பிணைத்துச் சிக்கலாக்கி விட வல்லது.

தேவதைகள் விரும்பினால், தாமே அழைத்து தரிசனம் தரும்; நல்லது. இதுகாறும் எத்தனையோ ஏங்கி, விரும்பும் எனக்கு அது வாய்ப்பதற்கான சிறு நிமித்தம் கூட நேரவில்லை என்றால் அர்த்தமென்ன? தேவதைகள் என்னை விரும்பவில்லை என்றுதானே? பிறகு விழித்திருந்து, பன்னிரண்டு மணிக்குக் குளக்கரைக்குப் போவதனால் மட்டும் என்ன பயன்? வெறும் குளத்தையும் வெறும் நீரையும் நீண்ட பகலெல்லாம் பார்த்துச் சவித்துக் கொள்ளலாம்.

"இப்படி சந்தேகப்படறதுன்னா, நான் உனக்கு எதுவும் இனிமே சொல்லலை. நீ பாட்டுக்குப் போய் கிட்டாச்சியோட கோலியாடிண்டிரு, போ!" என்று சுரீலென்று கோபம் வந்து விடும் வைதேகி அக்காவுக்கு. பிறகு அவளைச் சமாதானப்படுத்த, நான் பலமுறை மன்னிப்புக் கேட்க வேண்டி வரும். ஓரிரு சமயத்தில் அழுதே கூட இருக்கிறேன்.

அதைத்தான் அவள் எதிர்பார்க்கிறாளோ, என்னவோ.

"இனிமேல் இப்படியெல்லாம் கேட்க மாட்டேன் அக்கா. நீ பேச மாட்டேன்னு மட்டும் சொல்லிடாதேயேன்!" என்று கொஞ்சம் அழுது விட்டால் போதும்.

உடனே அருகே இழுத்து, கண்ணைத் துடைத்து விட்டு மறுபடியும் வேறொரு விளிம்பிலிருந்து கதையை ஆரம்பிப்பாள்.

"தேவதைகளெல்லாம் ரொம்பப் பரிசுத்தமானவாடா கிச்சு!"

"பெருமாள் மாதிரியா?"

"உம்! அவா, பெருமாளுக்கு கஸின் மாதிரின்னு சொல்லலாம். இப்ப உனக்கு ஜக்கு இல்லியா, அது மாதிரி."

"அதாவது, சௌரி பெருமாளோட சித்தப்பா பொண்ணுகள். சரியா?"

கொப்பளிக்கும் குறும்புடன் என் மூக்கைப் பிடித்துக் கிள்ளினாள் வைதேகி அக்கா. இனிப்பாக வலித்தது.

"சரி. அப்படித்தான் வெச்சுக்கோ. மனுஷாளா பிறந்து, ரொம்ப உத்தமியா வாழ்ந்து மறைஞ்சு போற பெண்கள்தான் இந்தக் குளத்துல தேவதைகளா மறுபிறவி எடுக்கறா."

"உத்தமின்னா?"

"படு சமர்த்துன்னு அர்த்தம். ரொம்ப நல்லவளா, தப்பே பண்ணாதவளா, அப்பாவியா இருக்கறவா. அப்படிப்பட்டவாளுக்கு, ஏதாவது கஷ்டம் வந்து மனசு உடைஞ்சு போய் இந்தக் குளத்துல பிராணனை விடறான்னு வெச்சுக்கோ, அவாதான் தேவதையா அவதாரம் எடுப்பா."

என் பரவசம் எத்தகைய உச்சநிலையைத் தொட்டிருந்தது

உலகப் புகழ் பெற்ற குத்துச்சண்டை வீரர் முகமது அலி, வால்டர் ஃ:ப் என்பவர் மீது வழக்குத் தொடர்ந்திருக்கிறார். ஏன்? அலி, இளம் வயதில் குத்துச்சண்டை போட்டபோது, அணிந்து கொண்ட உடைகள் இப்போது வால்டர் ஃ:ப்பிடம் உள்ளன. அவற்றைத் தம்மிடம் ஒப்படைக்க வேண்டும்" என்பதுதான் கேஸ்!

"அலியின் இளம் வயதில், நான் அவரது வீட்டில் வேலை செய்தேன். அவரது அம்மாவுக்குத் துணையாகத் தோட்டத்தைப் பராமரிப்பது, கார் கராஜை சுத்தம் செய்வது போன்றவற்றைக் கச்சிதமாகச் செய்வேன். என் திறமையை மெச்சி, அவரது அம்மா, அந்த உடைகளைப் பரிசளித்தார்''– இது ஃ:ப்பின் வாதம்.

''என் அம்மா பரிசளிக்கவில்லை; அவை திருடப்பட்டன'' என்கிறார் அலி. முகமது அலியின் அம்மா உயிருடன்தான் இருக்கிறார்; ஆனால் மிகவும் நோய்வாய்ப்பட்டிருக்கிறார்.

இதில் ஒரு தமாஷ் என்னவெனில், முகமது அலிக்குத் தன் இளம் வயது குத்துச்சண்டை உடைகள் ஃ:ப்பிடம் இருப்பதே தெரியாது! அவராகவே அலிக்குப் போன் செய்து, ''உங்கள் உடைகள் என்னிடம் உள்ளன. விலைக்குத் தருகிறேன். நீங்கள் எவ்வளவு தருவீர்கள்?'' என்று கேட்கவே லபக்கென்று பிடித்துக் கொண்டு விட்டார் அலி!

– எம்.



"படம் பார்த்துவிட்டு, அதன் அம்சங்களைப் பற்றி விமர்சனம் பண்ணுவதைவிட, எங்கெங்கே குறைகண்டுபிடிக்கலாம் என்றே பார்க்கிறார்கள். அதுவும் பிரபலங்கள் சம்பந்தப்பட்ட படம் என்றால், அவர்களைப் பற்றிய தமது சொந்த விருப்பு, வெறுப்புகளையும் கூடப் படவிமர்சனத்தில் புகுத்தி விடுவது இங்கே சகஜமாக இருக்கிறது. இது ஆரோக்கியமானதில்லை!"

– இப்படி விமர்சகர்களின் மேல் வருத்தம் கொண்டிருப்பவர் யார் தெரியுமா? 'கண்டுகொண்டேன் கண்டுகொண்டே'னுக்கு வசனம் எழுதியிருக்கும் எழுத்தாளர் சுஜாதா!

– பாரதி

என்பதை வருணிக்க முடியாது.

"நான் பார்க்கணுமே அக்கா! ஒரே ஒரு வாட்டியாவது பார்க்கணும்."

அவள் என்னை அருகில் இழுத்து வைத்துக் கொண்டாள்.

"நீ சமர்த்துக் குழந்தை. எனக்கு அதுல சந்தேகமேயில்லை! ராத்திரி படுக்கப் போகும் போது தேவதைகளையே மனசுல நினைச்சுண்டு, பார்க்கணும், பார்க்கணும்னு வேண்டிண்டு படு. நிச்சயமா தரிசனம் குடுப்பா, என்னிக்காவது. ஆனா ஒரு விஷயம். தப்பித் தவறிக் கூட இதை யாரிடமும் சொல்லாதே!"

மாட்டேன் என்று பலமாகத் தலையசைத்தேன்.

நாட்கள் பல கழிந்து, அன்று அந்த அதிசயம் நிகழ்ந்தது. என் உடலெங்கும் சிலீரென்று குளிர்க்காற்று படர்ந்து புல்லரிக்க, நள்ளிரவு உறங்கிக் கொண்டிருந்தபோதே, மூடிய விழிகளுக்குள் ஒரு வெண்திரை விலகியது. என் பிரக்ஞையின் அடியாழத்தில் ஒரு பரவசப் புயல் தாக்க, பிரும்மாண்டமான குளம் என் கண்முன் விரிந்தது. படிகளின் ஓரங்களில் விரலளவு தடிமனுள்ள கறுப்பு நிற மீன்கள் கும்பல் கும்பலாக மேய, சலனமற்று, இலேசாகத் ததும்பிக் கொண்டிருந்த நீர்ப்பரப்பின் நடுவே திடீரென்றொரு நீரூற்று பீறிட்டு வானைத் தொட்டு உதிர்ந்தது.

வெண்பனிச் சிதறலாய் அது மீண்டும் நீரில் பட்டுத் தெறிக்க, ஒரு பெரும் நீர்ச் சுழல் உண்டாகி, அதன் நடு ஆழத்திலிருந்து பொன் நிற உடையணிந்த தேவதைகள் உதித்தெழுந்தனர்.

உடலெங்கும் மின்சாரம் பாய்ந்தாற் போன்ற உணர்வுடன் நான் மூச்சை இறுக்கிப் பிடித்துக் கொண்டு பார்த்துக் கொண்டேயிருந்தேன்.

எனக்கும் குளத்துக்கும் நடுவே அப்போது சுமார் ஐம்பதடி இடைவெளி இருக்கும். பற்றவைத்த நெருப்புக் குச்சிகள் போன்ற ஜொலிப்புடன் நடுக்குளத்தில் அவர்கள் கூடி, ஒரு பூப்பந்தைத் தூக்கிப் போட்டு விளையாட ஆரம்பித்தார்கள்.

நீர்ப்பரப்பில் உண்டான சலனம் வர வரக் கூடுதலாகி, நூறு யானைகள் புகுந்து ஜலக்ரீடை செய்து கொள்வது போல நாலாபுறமும் நீர்த்துளிகள் பீறிட்டுத் தெறிக்க, குதூகலத்தின் அதிகபட்ச சாத்தியத்தை அவர்கள் அனுபவிப்பதைக் கண்டேன். என் சுயநினைவு முற்றிலும் தொலைந்ததொரு பரவச நிலையில் குளத்தை நோக்கித் தலைதெறிக்க ஓட ஆரம்பித்தேன்.

கைப்பிடிச் சுவர் அருகே சென்று ஒளிந்து கொண்டு அவர்களின் ஆட்டத்தைப் பார்த்துக் கொண்டே இருந்தவன், ஒவ்வொரு தேவதையையும் கூர்ந்து நோக்கிய போதெல்லாம் வியப்பில் சிலையாகிப் போனேன்.

இப்படியொரு தொழச் செய்யும் அழகும் ஜொலிப்பும் சாத்தியந்தானா! இதை தரிசிக்கும் அருகதை எப்படி எனக்கானது? நான் அவ்வளவு ஆசீர்வதிக்கப்பட்ட சிறுவனா?

பூக்களால் நெய்யப்பட்டது போன்ற அம்முகங்களைப் பார்த்துக் கொண்டே இருந்தேன். சடாரென்று என் நினைவில் ஒரு கல் பட்டாற்போலிருந்தது. பிரத்தியட்சமாக என் முன் விளையாடிக் கொண்டிருந்த தேவதைகளின் நடுவே வைதேகி அக்கா தெரிந்தாள்.

மிகுந்த துக்கம் சுமந்து விடிந்த மறுநாளைப் பற்றி நான் ஏதும் கூறப் போவதில்லை. ●

# பொன்னியின் செல்வன்

## இரண்டாம் அத்தியாயம்

## வந்தான் முருகய்யன்!

அமரர் கல்கி

சூடாமணி விஹாரத்துக்கு வெளியே கடல் பொங்கும் போது எழும் ஓசையைப் போல் மக்களின் இரைச்சல் ஒலி பெருகிக்கொண்டிருந்ததைச் சிறிது நேரம் ஆச்சாரிய பிக்ஷுவும் அருள்மொழிவர்மரும் கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

அந்தப் புத்த விஹாரமும் அதில் உள்ள பிக்ஷுக்களும் தம்மால் இந்தப் பெரும் சங்கடத்துக்கு உள்ளாகியிருப்பதை எண்ணி இளவரசர் மிகவும் மனக் கலக்கம் அடைந்தார்.

"சுவாமி! என்னால் உங்களுக்கு இந்தத் தொல்லை உண்டானதைப் பற்றி வருத்தப் படுகிறேன்" என்றார்.

"இளவரசே! தங்கள் காரணமாக இதுபோல் நூறு மடங்கு தொல்லை நேர்ந்தாலும் நாங்கள் பொருட்படுத்த மாட்டோம். தாங்களும் தங்கள் குடும்பத்தாரும் எங்களுக்குச் செய்திருக்கும் உதவிகளுக்கு இது ஒரு கைம்மாறாகுமா?" என்றார் பிக்ஷு.

"அது மட்டுமே அல்ல. இம்மாதிரி ஒளிவுமறைவாகக் காரியம் செய்வது எனக்கு எப்போதும் பிடிப்பதில்லை. நான் இங்கு இருந்துகொண்டே எதற்காக 'இல்லை' என்று சொல்ல வேண்டும்? சத்தியத்துக்கு விரோதமான இந்தக் காரியத்தில் தங்களையும் எதற்காக நான் உட்படுத்த வேண்டும்? தங்களு

டைய பரிவான சிகிச்சையினால் எனக்கு உடம்பும் நன்றாகக் குணமாகி விட்டது. இப்போதே வெளியேறிச் சென்று ஜனங்களிடம் நான் இன்னான் என்பதைத் தெரியப்படுத்திக் கொள்கிறேன். தாங்கள் எனக்கு அடைக்கலம் அளித்துச் சிகிச்சை செய்து என் உயிரையும் காப்பாற்றினீர்கள் என்பதை மக்களிடம் அறிவிக்கிறேன். இந்தச் சூடாமணி விஹாரத்துக்கு என் காரணமாக எந்தவித அபகீர்த்தியும் ஏற்படக் கூடாது'' என்றார் இளவரசர்.

"ஐயா! இதில் சத்தியத்துக்கு விரோதமான காரியம் எதுவும் இல்லை. தங்களுடைய எதிரிகள் தாங்கள் இருக்கும் இடத்தைக் கண்டுபிடிக்க முயல்கிறார்கள். இந்த நாகைப்பட்டினத்தில் அவர்கள் சென்ற இரண்டு நாளாகப் பரப்பி உள்ள வதந்தியிலிருந்தே அது நிச்சயமாகிறது. அப்படியிருக்க, தாங்கள் இங்கே இருப்பதைத் தெரிவியாமல் வைத்திருப்பதில் தவறு என்ன? அரச குலத்தினர் இம்மாதிரி சில சமயம் மறைந்திருக்க வேண்டியது இராஜரீக தர்மத்துக்கு உகந்தது. பஞ்ச பாண்டவர்கள் ஒரு வருஷம் அஞ்ஞாதவாசம் செய்யவில்லையா? அப்போது தர்ம புத்திரர் சத்தியத்துக்கு மாறாக நடந்தார் என்று சொல்ல முடியுமா?'' என்று பிக்ஷு கேட்டார்.

''குருதேவரே! தங்கள் அறிவுத்திறனும் விவாதத்திறனும் அபாரமானவை என்பதை அறிவேன். தங்களுடன் தர்க்கம் செய்து என்னால் வெல்ல முடியாது. ஆனாலும் ஒன்று சொல்லுகிறேன். பஞ்சபாண்டவர்கள் மறைந்திருக்க வேண்டியது அவர்கள் ஏற்றுக்கொண்ட 'சூள்' காரணமாக அவசியமாயிருந்தது. எனக்கு அப்படி அவசியம் ஒன்றும் இல்லை. என் விரோதிகளைப் பற்றிச் சொல்கிறீர்கள். எனக்கு அப்படிப்பட்ட விரோதிகள் யார்? எதற்காக என்னை அவர்கள் விரோதிக்க வேண்டும்? எனக்கோ இராஜ்யம் ஆளுவதில் சிறிதும் ஆசை இல்லை. இதையெல்லாம் நான் வெளியிட்டுச் சொல்லி, அப்படி யாராவது எனக்கு எதிரிகள் இருந்தாலும், அவர்களையும் சிநேகிதர்கள் ஆக்கிக்கொள்வேன். என்னால் உங்களுக்குத் தொந்தரவு இல்லாமற் போகும். மக்களும் நான் உயிரோடிருப்பது அறிந்து ஏதேனும் திருப்தி அடைவதாயிருந்தால் அடையட்டுமே? அதில் யாருக்கு என்ன நஷ்டம்?''

''இளவரசே! தாங்கள் சொல்லுவதெல்லாம் உண்மையே. தங்களுடைய நிலைமையில் நானும் அவ்விதமே எண்ணி நடந்துகொள்வேன். ஆனால் அதற்குத் தடையாக நிற்பது தங்கள் திருச் சகோதரி குந்தவைப் பிராட்டிக்கு நாங்கள் கொடுத்திருக்கும் வாக்குறுதிதான். பழையாறை இளைய பிராட்டியைப் போன்ற அறிவிற் சிறந்த மாதரசி சோழ குலத்தில் தோன்றியதில்லையென்று தாங்களே பலமுறை சொல்லியிருக்கிறீர்கள். வேறு எந்த இராஜகுலத்திலும் தோன்றியதில்லை என்பது என் கருத்து. அவர் தாம் செய்தி அனுப்பும் வரையில் தங்களை இங்கே வைத்துப் பாதுகாக்கும்படி சொல்லி விட்டுச் சென்றார். முக்கியமான காரணம் இன்றி அவர் அவ்விதம் சொல்லியிருக்க மாட்டார். சுந்தர சோழ சக்கரவர்த்தியின் குடும்பத்துக்கு விரோதமாகச் சோழ நாட்டுச் சிற்றரசர்கள் பலர் சதி செய்வதாக நாடெல்லாம் பேச்சாக இருந்து வருகிறது. மற்றொரு பக்கத்தில் பாண்டிய நாட்டைச் சேர்ந்த சிலர் இரகசியச் சதி வேலை செய்து வருவதாகவும் பேசிக்கொள்கிறார்கள். அந்தக் கூட்டத்தாருக்கு இந்தப் புத்த விஹாரத்திலுள்ள நாங்கள் உதவி செய்கிறோமோ என்று எண்ணித்தான் ஜனங்கள் ஆத்திரம் அடைந்து வாசலில் வந்து கூடியிருக்கிறார்கள். இந்த நிலைமையில் தாங்கள் வெளியேறி மக்களின் முன்னிலையில் தங்களை வெளிப்படுத்திக் கொள்வது உசிதமான காரியமா? யோசியுங்கள்! அதைக்காட்டிலும், தங்களைப் பாதுகாக்கும் முயற்சியில் எங்களுக்கெல்லாம் ஏதேனும் சங்கடம் நேர்ந்தால் நேரட்டுமே? அதற்கு நாங்கள் ஒருநாளும் பின்வாங்கப் போவதில்லை!....''



வ்வாறு தலைமைப் பிக்ஷு சொல்லிக் கொண்டிருந்த போது, இன்னொரு இளம் சந்நியாசி அங்கே பரபரப்புடன் வந்தார்.

"சுவாமி! நிலைமை மிஞ்சிப் போய் விட்டது. ஆயிரக்கணக்கான மக்கள் விஹாரத்தைச் சூழ்ந்து நின்று 'இளவரசரைப் பார்க்க வேண்டும்' என்று கூச்சலிடுகிறார்கள். 'இளவரசர் இங்கே இல்லை' என்று நாங்கள் எவ்வளவு சொல்லியும் பயனில்லை. 'நாங்களே விஹாரத்துக்குள் வந்து சோதித்துப் பார்க்க வேண்டும்' என்று கூச்சலிடுகிறார்கள். அவர்களுக்கு நாம் ஏதாவது ஒரு வழி சொல்லாவிட்டால், பலாத்காரமாக உள்ளே புகுந்து விடுவார்கள் போலிருக்கிறது!" என்றார்.

"அவர்களுக்கு நாம் என்ன வழி சொல்ல முடியும்? புத்த பகவான் அவர்களுடைய மனத்தை மாற்ற ஏதேனும் வழி கூறினால்தான் உண்டு!" என்றார் தலைமைப் பிக்ஷு.

இளவரசர் அப்போது, "குருதேவரே! எனக்கு ஒரு வழி தோன்றுகிறது. கருணை கூர்ந்து கேட்க வேண்டும். தங்கள் சீடர்கள் நான் இங்கே இல்லை என்று ஜனங்களுக்குச் சொல்லியிருக்கிறார்கள். இனி நான் ஜனங்களின் முன்னிலையில் போய் நின்றால் தங்கள் சீடர்களின் வாக்கைப் பொய்யாக்கியதாகும். அதனால் ஒருவேளை ஜனங்களின் மூர்க்காவேசம் அதிகமானாலும் ஆகலாம்" என்றார்.

"நிச்சயமாய் ஆகியே தீரும். அதன் பலனை நாங்கள் அனுபவிக்க வேண்டியதுதான்" என்றார் பிக்ஷு.

"அதைக் காட்டிலும் தங்கள் சீடர்களுடைய வாக்கை நான் மெய்யாக்கி விடுகிறேன்..."

"இளவரசே! தங்களால் கூட அது முடியாத காரியம் என்று நினைக்கிறேன். இவர்கள் சொன்னது சொன்னதுதானே? அதை எப்படி இனி மெய்யாக்க முடியும்?"

"அதற்கு வழியிருக்கிறது. ஜனங்கள் இந்த விஹாரத்துக்குள் புகுவதற்குள்ளே நான் இங்கிருந்து போய் விடலாம் அல்லவா?"

"ஆகா! எங்களைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அத்தகைய பாவச் செயலை நாங்கள் செய்ய வேண்டுமா? தங்களை வெளியேற்ற வேண்டுமா?"

"குருதேவரே! இதில் பாவமும் இல்லை. பழியும் இல்லை. இங்கிருந்து அரைக்காத தூரத்தில் ஆனைமங்கலத்தில் சோழ மாளிகை இருக்கிறது. அன்றைக்கு என் சகோதரியைப் பார்க்கச் சென்றபடி இப்போதும் உடனே கால்வாய் வழியே அங்கே போய் விடுகிறேன். பிறகு, சௌகரியமானபோது திரும்பி வந்துவிட்டால் போகிறது!" என்று சொன்னார் இளவரசர்.



ச்சாரிய பிக்ஷுவுக்கு இளவரசர் கூறிய அந்த யோசனை பிடித்திருந்ததாகத் தோன்றியது.

"ஆம், ஆம்! அப்படிச் செய்தால் தங்களை உடனே வெளிப்படுத்திக் கொள்ள வேண்டிய அவசியமில்லாமற் போகும். தங்கள் தமக்கையின் கருத்தையும் நிறைவேற்றியதாகும். ஆனால் கால்வாய் விஹாரத்திலிருந்து வெளியேறும் இடத்திலும் ஜனங்கள் நிற்கலாம் அல்லவா? அவர்கள் படகில் தாங்கள் போவதைப் பார்க்கக் கூடுமே?" என்றார்.

"குருதேவரே! அதற்கு ஓர் உபாயம் செய்ய முடியும். கூட்டத்தில் உள்ளவர்களில் யாரேனும் ஒருவன் விஹாரத்திற்குள் வந்து தேடிப் பார்த்துக் கொள்ளலாம் என்று சொல்லுவோம்" என்றார் இளம் பிக்ஷு.

"ஒருவன் வந்து பார்த்தால் போதாதா? அவன் வெளியிலே சென்று மற்றவர்களிடம் சொல்ல மாட்டானா?" என்றார் குரு.

"அவனை இங்கே கொஞ்சம் தாமதப்படுத்தி வைத்திருந்தால், அதற்குள் இருட்டி விடும். இளவரசர் வெளியேறச் சௌகரியமாயிருக்கும். அது மட்டுமல்ல; சீக்கிரத்தில் ஒரு பெரும் புயல் அடிக்கலாம் என்பதற்கு அறிகுறிகள் தென்படுகின்றன. இங்கிருந்து பார்க்கும்போதே கடல் அலைகள் மலை



போல் எழுகின்றன. கடலின் ஆரவார மும் அதிகமாகி வருகிறது. புத்த பக வானுடைய கருணை அப்படி இருக் கிறதோ, என்னமோ? பெரும் புயல் அடித்து நம்முடைய இந்தச் சங்கடம் தீர வேண்டும் என்பது பகவானுடைய சித்தமோ, என்னமோ!'' என்று கூறினார் இளம் பிக்ஷு.

“அப்படியெல்லாம் சொல்ல வேண் டாம். நம்முடைய சங்கடம் தீருவதற் காகக் கடல் கொந்தளித்துப் பெரும் புயல் வர வேண்டுமா?'' என்றார் குரு.

"சுவாமி! தங்கள் சீடர் சொல்லும் வழியைப் பரிட்சித்துப் பார்க்கலாம் என்று எனக்கும் தோன்றுகிறது. உள்ளே ஒரு தனி மனிதன் மட்டும் வந்தால், ஒரு வேளை அவனிடம் நான் பேசி அவன் மனத்தை மாற்றுவது சாத்தியமாகலாம்" என்றார் இளவரசர்.

"அந்த யோசனையும் என் மனத்தில் இருக்கிறது. இரண்டு தினங்களுக்கு முன்பு கோடிக்கரையிலிருந்து ஒரு படகோட்டியும் அவன் மனையாளும் விஹாரத்தின் வாசலில் வந்து இளவரசரைப் பற்றி விசாரித்தார்கள். இளவரசர் இங்கேதான் இருக்க வேண்டும் என்று சொன்னார்கள். படகோட்டியின் மனையாள் பெருங்கூச்சல் போட்டாள்...!"

"ஆகா! அப்படிப்பட்ட படகோட்டி யார்? அவன் பெயர் என்னவென்று தெரியுமா?" என்றார் இளவரசர்.

"ஆம்; தன் பெயர் முருகய்யன் என்று சொன்னான். கோடிக்கரைத் தியாக விடங்கர் மகன் என்று கூறினான்..."

"அவன் எனக்கு நன்கு தெரிந்தவன். என் விருப்பத்துக்கு விரோதமாக எதுவும் செய்ய மாட்டான். அவனை ஏன் என்னிடம் அழைத்து வரவில்லை..."

"அவன் பெண்டாட்டியினால் நமது இரகசியத்தைக் காப்பாற்ற முடியாது என்று எண்ணினோம். இப்போது அவனும் அவன் மனையாளும் மக்களின் கூட்டத்தில் இருக்கிறார்கள்..."

"பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று. படகோட்டி முருகய்யனை மெதுவாக இங்கே அழைத்து வந்து விடுங்கள். நான் இட்ட கோட்டை அவன் தாண்ட மாட்டான். இருட்டிய பிறகு திரும்பி வந்து அவனே என்னைப் படகில் ஏற்றி ஆனை மங்கலத்துச் சோழ மாளிகைக்கு அழைத்துப் போய் விடுவான்!" என்றார் இளவரசர்.

ஆச்சாரிய பிக்ஷு, "இளவரசே! இந்தக் காலத்தில் யாரையும் பூரணமாக நம்பி விடுவதற்கில்லை. இந்தப் படகோட்டியும் அவனது மனையாளுந்தான் இரண்டு நாளாக இந்தப் பட்டினத்தில் தங்களைப் பற்றிய வதந்தியைப் பரப்பியிருக்க வேண்டும் என்று கருதுகிறேன்."

"அப்படியேயிருந்தாலும் அதனால் பாதகமில்லை. எப்படியும் யாரேனும் ஒருவனை விஹாரத்துக்குள் அழைத்து வர வேண்டும் அல்லவா? அவன் கொஞ்சம் பெண்டாட்டி சொல்லுகிறபடி ஆடுகிறவன்தான். ஆனாலும் என் விருப்பத்துக்கு மாறாக மனையாள் சொல்வதைக் கூடக் கேட்க மாட்டான். முடியுமானால், அவனையே அழைத்துக் கொண்டு வாருங்கள்!" என்றார் இளவரசர்.

ஆச்சாரிய பிக்ஷுவின் சம்மதத்துடன் இளைய பிக்ஷு வெளியேறினார். அவர் சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் பெரிய பிக்ஷு, "இளவரசே! என் மனம் ஏனோ நிம்மதியாகவே இல்லை. நானும் வெளியிலே சென்று பார்த்து வருகிறேன். ஜனங்களுடைய மனோ நிலை எப்படி இருக்கிறது என்பதை நேரில் அறிந்து வருகிறேன். என்னுடைய பிசகினால் இந்தப் புராதனமான சூடாமணி விஹாரத்துக்கும் கேடு வரக்கூடாது. தங்களுக்கும் தீங்கு எதுவும் நேரக்கூடாது!" என்று சொல்லிவிட்டு வெளியே சென்றார்.

## மூன்றாம் அத்தியாயம்

# கடல் பொங்கியது!

விஹாரத்துக்கு வெளியே ஆச்சாரிய பிக்ஷு கண்ட காட்சி அவருக்குக் கதிகலக்கம் உண்டாக்குவதாயிருந்தது. ஆயிரக்கணக்கான மக்கள் திரண்டு வந்து நின்று கொண்டிருந்தார்கள். அவர்களுடைய தோற்றமும் அவர்கள் போட்ட கூச்சலும் அவர்கள் ஆவேசங்கொண்டவர்கள் என்பதைக் காட்டின. அந்த ஆவேசத்தைக் குரோத வெறியாகச் செய்வது மிக எளிதான காரியம். பலர்

கைகளில் வாள், வேல், தடி முதலிய ஆயுதங்களை வைத்திருந்தார்கள். இன்னும் சிலரின் கையில் கடப்பாரைகள் இருந்தன. பிக்ஷுக்கள் வழிக்கு வராவிட்டால், விஹாரத்தையே இடித்துத் தரைமட்டமாக்கி விடுவது என்று அவர்கள் உத்தேசித்திருந்தனர் போலும்.

அதற்கு வேண்டிய காரணம் இல்லாமலும் போகவில்லை. பராந்தக சக்கரவர்த்தியின் காலம் முதல் அடிக்கடி சோழ நாட்டுக்கும் ஈழ நாட்டுக்கும் யுத்தம் நடந்து வந்தது. சோழ நாட்டு வீரர் பலர் இலங்கைப் போர்களில் மடிந்திருந்தார்கள். ஏதாவது ஒன்றைப் பிடிக்கவில்லையென்றால், அதைச் சேர்ந்த மற்றவையும் பிடிக்காமற் போவது மக்களின் இயல்பு அல்லவா? இலங்கைப் போர்கள் காரணமாகச் சோழ மக்களுக்கு ஏற்பட்டிருந்த ஆத்திரம் அத்தீவில் வியாபகமாயிருந்த பௌத்த மதத்தின் மேலும் ஓரளவு திரும்பியிருந்தது. ஏதாவது ஒரு சிறிய காரணம் ஏற்பட்டால் போதும்; - தமிழகத்தில் மிஞ்சியிருந்த பௌத்த விஹாரங்கள் மீதும் அவற்றில் வாழ்ந்த பிக்ஷுக்கள் மீதும் பழி தீர்த்துக் கொள்ளப் பாமர மக்கள் சித்தமாயிருந்தார்கள்.

அத்தகைய சந்தர்ப்பம் இப்போது ஏற்பட்டு விட்டதாக ஆச்சாரிய பிக்ஷு கருதினார். யாரோ தீய நோக்கம் கொண்டவர்கள் இவ்விதம் பாமர மக்களின் ஆத்திரத்தைத் தூண்டி விட்டிருக்கிறார்கள். புத்த பகவானுடைய கருணையினாலேதான் இந்தப் பேராபத்திலிருந்து மீள வேண்டும்...!

ஆச்சாரிய பிக்ஷுவைப் பார்த்ததும் அந்த ஜனக்கூட்டத்தின் ஆரவாரம் முன்னைவிட அதிகமாயிற்று.

''பொன்னியின் செல்வரைக் கொடுத்து விடுங்கள்; இல்லாவிடில் விஹாரத்தை இடித்துத் தரைமட்டமாக்கி விடுவோம்'' என்பவை போன்ற மொழிகள் ஏக காலத்தில் ஆயிரக்கணக்கான குரோதம் நிறைந்த குரல்களிலிருந்து வெளியாகிச் சமுத்திர கோஷத்தைப் போல் கேட்டது. அதே சமயத்தில் கடலின் பேரோசையும் அதிகமாகிக் கொண்டிருப்பதை ஆச்சாரிய பிக்ஷு கவனித்துக்கொண்டார். இளம் பிக்ஷு கூறியது உண்மைதான். அளவிலாத வேகம் பொருந்திய கொடும்புயல், கடற்கரையை நோக்கி வந்துகொண்டிருக்கிறது. அதி சீக்கிரத்தில் புயல் கரையைத் தாக்கப் போகிறது. இந்த மக்களால் ஏற்படும் அபாயத்துக்கு பிழைத்தாலும் புயலின் கொடுமையிலிருந்து விஹாரம் தப்பிப் பிழைக்க வேண்டுமே என்ற கவலை பிக்ஷுவுக்கு ஏற்பட்டது.

இதற்குள் வாலிப பிக்ஷு கையமர்த்திச் சமிக்ஞை செய்து ஆத்திரம் கொண்ட மக்களின் கூட்டத்தில் சிறிது இரைச்சல் அடங்கும்படி செய்திருந்தார்.

"மகா ஜனங்களே! எங்கள் தலைவரை அழைத்து வந்திருக்கிறேன். சற்று நிம்மதியாயிருங்கள். நீங்கள் இத்தனை பேரும் இந்த விஹாரத்துக்குள் ஒரே சமயத்தில் புக முடியாது அல்லவா! உங்களில் யாராவது ஒருவரையோ, இரண்டு பேரையோ குறிப்பிடுங்கள். அவர்கள் விஹாரத்துக்குள் வந்து தேடிப் பார்க்கட்டும்! திரும்பி வந்து அவர்கள் சொல்வதை நீங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும்! இது உங்களுக்குச் சம்மதந்தானே? உங்களில் யார் என்னுடன் விஹாரத்துக்குள் வருகிறீர்கள்?'' என்று வினவினார்.

கூட்டத்தில் நூற்றுக்கணக்கானவர்கள் ''நான் வருகிறேன்,'' ''நான் வருகிறேன்'' என்று கூச்சலிட்டார்கள்.

இளம் பிக்ஷு மறுபடியும் கையமர்த்தி ''எல்லோரும் சேர்ந்து கூச்சலிடுவதினால் என்ன பயன்? யாராவது ஒருவரைத் தேர்ந்தெடுங்கள். நான் யோசனை சொல்லுகிறேன். சமீப காலத்தில், சென்ற ஒரு மாத காலத்துக்குள், பொன்னியின் செல்வரைப் பார்த்தவர் உங்களில் யாராவது இருந்தால் சொல்லுங்கள். அப்படிப்பட்டவரை நான் அழைத்துப் போகிறேன். இளவரசர் அடையாளம் கண்டு கொள்ளவும் சௌகரியமாயிருக்கும்!'' என்றார்.

கூட்டத்தின் முன்னணியில் நின்று கொண்டு ஒவ்வொரு தடவையும் பெரும் கூச்சல் போட்டுக்கொண்டிருந்த ராக்கம்மாள், ''இதோ நாங்கள் பார்த்திருக்கிறோம்'' என்று கூவினாள்.

படகோட்டியைப் பார்த்து இளம் பிக்ஷு ''அப்பனே! இவள் கூறுவது சரியா?'' என்று கேட்டார்.

முருகய்யன், ''சுவாமி! இவள் கூறுவது முழுதும் சரியல்ல; இவள் இளவரசரைச் சமீபத்தில் பார்க்கவில்லை. நான் சென்ற ஒரு மாதத்துக்குள்ளே ஈழ நாட்டில் பொன்னியின் செல்வரைப் பார்த்தது உண்மை. நான் அறியாமல் அவருக்குச் செய்த அபசாரத்துக்காகக் காலில்விழுந்து மன்னிப்பும் கேட்டுக்கொண்டேன். அச்சமயம் அவர் கருணையுடன் என்னைப் பார்த்துப் புன்னகை புரிந்தது நேற்று நடந்ததுபோல் என் மனத்தில் பதிந்திருக்கிறது. அவரை நான் சுலபமாக அடையாளங் கண்டு கொள்ள முடியும்'' என்று சொன்னான்.

''அப்படியானால் நீதான் இந்த வேலைக்குத் தகுதியானவன். உன் மனையாள் சொன்னதிலும் அவ்வளவு தவறு கிடையாது. நீ பார்த்தது இவள் பார்த்தது போலத்தான் என்று எண்ணிச் சொல்லியிருக்கிறாள். இப்போதும் நீ இந்த விஹாரத்துக்குள் தேடிப் பார்த்துவிட்டு வந்து சொன்னால் இவள் ஒப்புக்கொள்வாள். பிக்ஷுக்கள் தவம் செய்யும் புத்த விஹாரத்துக்குள் பெண் பிள்ளைகளை விடுகிறதில்லையென்பது உன் மனையாளுக்குத் தெரிந்துதானிருக்கும். ஆகையால், நீ வா இங்கே!'' என்று இளம் பிக்ஷு கூறினார். பிறகு விஹாரத்தின் முன் வாசற்படிகளில் இறங்கிச் சென்று முருகய்யனுடைய ஒரு கரத்தைப் பற்றி அழைத்துக்கொண்டு மறுபடியும் படிகளில் ஏறினார். மக்களைப் பார்த்து, ''இதோ இந்தப் படகோட்டி முருகய்யன் சமீபத்தில் இளவரசரைப் பார்த்திருக்கிறானாம். இவனை உள்ளே அழைத்துப்போகிறேன். விஹாரம் முழுதும் தேடிப் பார்த்துவிட்டுத் திரும்பி வந்து சொல்வான். உங்கள் எல்லாருக்கும் இது சம்மதந்தானே?'' என்றார்.

மக்களின் கூட்டத்திலிருந்து சம்மதக் குரல் அவ்வளவு வேகத்துடன் வரவில்லை. சிலர் ''சம்மதம்'' என்று முணு முணுத்தார்கள். மற்றவர்கள் ஒருவரோடொருவர் ''இதில் ஏதாவது மோசம் இருக்குமோ?'' என்று இரகசியமாகப் பேசிக்கொண்டார்கள். அவர்கள் இரகசியம் பேசிய குரல்கள் சேர்ந்து கடலின் இரைச்சலுடன் போட்டியிட்டன.

இளம் பிக்ஷு அதைக் கவனித்துவிட்டு, பெரிய குரலில், ''மகா ஜனங்களே! இதோ எங்கள் ஆச்சாரியர் இருக்கிறார். உங்களுக்கு ஏதேனும் கேட்க வேண்டியது இருந்தால் அவரைக் கேட்டுக்கொள்ளுங்கள். அதற்குள் இந்த மனிதனை நான் அழைத்துப் போய் விஹாரத்தைச் சுற்றிக் காண்பித்துவிட்டு வருகிறேன்'' என்று சொல்லிப் படகோட்டி முருகய்யனை அழைத்துக்கொண்டு சென்றார்.

கம்பீரமான தோற்றத்துடனும் சாந்தம் குடிகொண்ட முகத்துடனும் பொலிந்த ஆச்சாரிய பிக்ஷுவைப் பார்த்ததும் மக்களின் மனத்தில் சிறிது பயபக்தி உண்டாயிற்று. அவரிடம் அதிகப்பிரசங்கமான கேள்வி எதுவும் கேட்பதற்கு யாரும் துணிவு கொள்ளவில்லை.

ஆச்சாரிய பிக்ஷு சற்று நேரம் அந்த ஜனக்கூட்டத்தைப் பார்த்துக்கொண்டிருந்தார். பின்னர், அவர்களுக்குப் பின்னால் சற்றுத் தூரத்தில் தெரிந்த கடலையும் நோக்கினார்.

''மகா ஜனங்களே! நீங்கள் எல்லாரும் இங்கே வந்து கூடியிருப்பதின் நோக்கத்தை அறிந்துகொண்டேன். சக்கரவர்த்தியின் திருக் குமாரரும் பொன்னியின் செல்வருமான இளவரசர் அருள்மொழிவர்மரிடம் உங்களுக்கெல்லாம் எவ்வளவு அன்பு உண்டு என்பது இன்றைக்கு எனக்கு நன்றாய்த் தெரிந்தது. உங்களைப் போலவே அடியேனும் பொன்னியின் செல்வரிடம் அன்புடை

யவன்தான். அருள்மொழிவர்மர் கடலில் முழுகிவிட்டார் என்ற செய்தி வந்த அன்று காலையில் நான் இதே இடத்தில் நின்று கண்ணீர் அருவி பெருக்கினேன். புத்த தர்மத்தில் பற்றுக்கொண்டவர் எவரும் அருள்மொழிவர்மரிடம் அன்பு கொள்ளாமல் இருக்க முடியாது. புத்த தர்மத்துக்கும் புத்த பிக்ஷுக்களுக்கும் அவர் அத்தகைய மகத்தான உபகாரங்களைச் செய்திருக்கிறார். பவுத்தர்களின் புண்ணிய க்ஷேத்திரமாகிய அனுராதபுரத்தில் புத்த மன்னர்களின் காலத்தில் இடிந்து தகர்ந்து பாழான விஹாரங்களையும் ஸ்தூபங்களையும் திருப்பணி செய்து செப்பனிடுவதற்கு ஏற்பாடு செய்தவர். அப்படிப்பட்ட உத்தமரான இளவரசருக்கு எந்த வகையிலும் தீங்கு நேர நாங்கள் உடந்தையாக இருக்க முடியுமா? இளவரசருக்கு ஒன்றும் நேராமல் இருக்க வேண்டும். அவரைக் கடல் கொண்ட செய்தி பொய்யாயிருக்க வேண்டும் என்று நாங்கள் பிரார்த்தனை செய்த வண்ணம் இருந்தோம். உங்களையெல்லாம் விடப் பொன்னியின் செல்வரிடம் நாங்கள் அன்புடையவர்



களாயிருப்பதற்குக் காரணங்கள் உண்டு..."

இச் சமயத்தில் கூட்டத்தில் ஒருவன் குறுக்கிட்டு, "அதனாலேதான் எங்களுக்கு அச்சமாயிருக்கிறது. உங்களுடைய அன்பு அபரிமிதமாகப் போய் எங்கள் இளவரசரின் தலையை மொட்டையடித்துக் காவித் துணி கொடுத்துப் பிக்ஷுவாக்கி விடுவீர்களோ என்று பயப்படுகிறோம்!" என்றான்.

அவனைச் சுற்றி நின்றவர்கள் பலர் இதைக் கேட்டதும் கலீர் என்று கேலிச் சிரிப்புச் சிரித்தார்கள்.

ஆச்சாரிய பிக்ஷுவுக்கு எப்படியோ அச்சமயம் ஒரு ஆவேசம் ஏற்பட்டுவிட்டது. இந்தச் சந்தர்ப்பத்தில் மக்களின் சந்தேகத்தைத் தீர்த்து வைப்பதற்கு ஒரே ஒரு நிச்சயமான வழி மட்டும் உண்டு என்பதை அவர் உள்ளம் உணர்த்திற்று. உடனே முன்பின் யோசிக்காமல் தம் உள்ளத்தில் தோன்றியதைப் பின்வரும் மொழிகளில் சபதமாக வெளியிட்டார்:-

"சக்கரவர்த்தியின் திருக்குமாரரும் பொன்னியின் செல்வருமான இளவரசர் அருள்மொழிவர்மரைப் புத்த சமயத்தை மேற்கொள்ளும்படி நான் கோர மாட்டேன். அவரே முன் வந்தாலும் ஏற்றுக் கொள்ள மாட்டேன். உலகை ஆளப் பிறந்தவரும் உங்கள் அன்பைக் கவர்ந்தவருமான கோமகனைத் தலையை மொட்டையடித்துக் காவித் துணி அளிக்கும் கைங்கரியத்தை நான் ஒரு நாளும் செய்ய மாட்டேன். அதற்கு உடந்தையாகவும் இருக்கமாட்டேன். இவ்வாறு புத்த பகவானுடைய பத்ம சரணங்களின் மீது ஆணையாகச் சபதம் செய்கிறேன்! புத்தம் கச்சாமி! தர்மம் கச்சாமி! சங்கம் கச்சாமி!"

இடி முழக்கம் போன்ற கம்பீரத்துடன் உணர்ச்சி ததும்பக் கூறிய இந்த மொழிகளைக் கேட்டதும் அங்கே கூடியிருந்த அத்தனை மக்களின் உள்ளங்களும் ஒரு பெரிய மாறுதலை அடைந்தன. பலர் கண்களில் கண்ணீர் ததும்பியது. சிறிது நேரம் நிசப்தம் நிலவியது.

ஆச்சாரிய பிக்ஷு தொடர்ந்து கூறினார்:-

"சோழ நாட்டு மக்களின் கண்ணுக்குக் கண்ணான இளவரசரைக் குறித்து நீங்கள் எல்லாரும் இவ்வளவு சிரத்தை கொண்டிருப்பது இயல்புதான். பொன்னியின் செல்வரைக் குறித்த கவலை இப்போது உங்களுக்குத் தீர்ந்து போயிருக்கலாம். இனிமேல் உங்கள் குடும்பம், வீடு, வாசலைப் பற்றிச் சிறிது கவலை கொள்ளுங்கள். மகா ஜனங்களே! இதுவரையில் நாம் இந்தப் பக்கத்திலேயே கண்டும் கேட்டுமிராத கொடும்புயல் நம்மை நெருங்கிக்கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. அதோ, உங்கள் பின்பக்கமாகத் திரும்பிப் பாருங்கள்!"

ஜனங்கள் திரும்பிப் பார்த்தார்கள். பிக்ஷு கூறியபடியே அவர்களுடைய வாழ்க்கையில் என்றுமே காணாத அதிசயமான காட்சியைக் கண்டார்கள். அதிசயமான காட்சி மட்டுமன்று; பயங்கரமான காட்சியுந்தான்.

கடலானது பொங்கி மேலுயர்ந்து வானத்தில் மேலே மேலே வந்து கொண்டிருந்த கரிய கொண்டல்களைத் தொட்டுக்கொண்டிருந்தது. அந்தக் கரிய நிறத் தண்ணீர் மலையானது நின்ற இடத்தில் நிற்கவில்லை. மேலே மேலே நகர்ந்து வந்துகொண்டிருந்தது. ஜனங்கள் நின்ற இடத்திலிருந்து பார்க்கும்போது அந்த மலையானது அவர்கள் இருக்குமிடம் வரையில் வந்தால் அவர்கள் மட்டுமல்ல, சூடாமணி விஹாரமே முழுகிப் போவது திண்ணம் என்று தோன்றியது.

இந்தக் காட்சியைப் பார்த்து மக்கள் பிரமித்து நின்றபோது, ஆச்சாரிய பிக்ஷு மறுபடியும் "அதோ, நீங்கள் எல்லாரும் வசிக்கும் நாகைப்பட்டினத்தைப் பாருங்கள்!" என்று சொன்னார்.

நாகைப்பட்டினம் நகரம் சூடாமணி விஹாரத்துக்குச் சிறிது வட திசையில் அமைந்திருந்தது. வெகு தூரத்துக்கு வெகு தூரம் பரவியிருந்தது. கடற்கரையையடுத்துப் பண்டக சாலைகள், சுங்கம் வாங்கும் கட்டடங்கள் முதலி

யவை இருந்தன. அவற்றுக்கு அப்பால் ஜனங்கள் வசிக்கும் வீடுகள் ஆரம்பமாகிக் கிழக்கு மேற்கிலும் தெற்கு வடக்கிலும் சுமார் அரைக் காத தூரத்துக்கு மேல் பரவியிருந்தன.

கடல் பொங்கிப் பண்டக சாலைகளும், சுங்கச் சாவடிகளும் இருந்த இடத்தையெல்லாம் தாண்டிக்கொண்டு வந்து பட்டினத்தின் தெருக்களிலும் புகுவதற்கு அச்சமயம் ஆரம்பித்திருந்தது.

கடலில் இருந்த படகுகளும் நாவாய்களும் எங்கேயோ ஆகாசத்தில் அந்தரமாகத் தொங்குவது போல் தண்ணீர் மலைகளின் உச்சியில் காட்சி அளித்து அப்படியும் இப்படியும் ஆடிக்கொண்டிருந்தன. படகுகளின் பாய் மரங்கள் பேயாட்டம் ஆடிச் சுக்கு நூறாகப் போய்க்கொண்டிருந்தன.

"மகா ஜனங்களே! ஒரு காலத்தில் காவேரிப்பட்டினத்தைக் கடல் கொண்டது என்று கேள்விப்பட்டிருக்கிறோம். அம்மாதிரியான விபத்து நமது நாகைப் பட்டினத்துக்கு நேராமல் புத்த பகவான் காப்பாற்றுவாராக! ஆனாலும் நீங்கள் உடனே திரும்பிச் சென்று உங்கள் குழந்தை குட்டிகளையும் உடைமைகளையும் கூடுமானவரை காப்பாற்றிக் கொள்ள முயலுங்கள்!" என்று ஆச்சாரிய பிக்ஷு தழதழத்த குரலில் கூவினார்.



தைக் கேட்டதும் அந்த ஜனக் கூட்டமானது கடல் அலை போலவே விரைந்து நகரத்தை நோக்கி நகரலாயிற்று. முன்னணியில் நின்றவர்கள் ஓடத் தொடங்கினார்கள். பின்னால் நின்றவர்கள் அவர்களைத் தொடர்ந்து ஓடினார்கள். முதலில் கூட்டமாக நகர்ந்தார்கள்; பிறகு நாலாபுறமும் சிதறி ஓடினார்கள். சில நிமிட நேரத்திற்குள், சற்று முன்னால் பெரும் ஜனத்திரள் நின்று கொண்டிருந்த இடம் வெறுமையாகக் காட்சி அளித்தது.

படகோட்டி முருகய்யனின் மனையாள் ராக்கம்மாள் மட்டும் நின்ற இடத்திலேயே நின்று "என் புருஷன்! என் புருஷன்!" என்று கத்தினாள்.

"தாயே! உன் புருஷனுக்கு ஒன்றும் ஆபத்து நேராது. பத்திரமாகத் திரும்பி வந்து சேருவான். நீ உன்னைக் காப்பாற்றிக் கொள்!" என்றார் பிக்ஷு.

"இல்லை, இல்லை! என் புருஷனை விட்டு விட்டு நான் எப்படிப் போவேன்? நானும் கோவிலுக்குள் வருகிறேன்" என்றாள் ராக்கம்மாள்.

"கூடாது, அம்மா, கூடாது! புத்த சந்நியாசிகள் வசிக்கும் விஹாரத்துக்குள் பெண்பிள்ளைகள் வரக்கூடாது! உனக்குத் தெரியாதா?" என்றார் பிக்ஷு.

இச்சமயத்தில் அந்த மாபெரும் ஜனக் கூட்டத்திலே ஓடாமல் பின்தங்கி நின்று கொண்டிருந்த மனிதன் ஒருவன் ராக்கம்மாளை அணுகி வந்தான். அவள் காதோடு ஏதோ சொன்னான். அவளுடைய கரத்தைப் பிடித்துக் கரகர வென்று இழுத்தான். அவள் அவனுடன் வேண்டா வெறுப்புடன் போகத் தொடங்கினாள்.

"ஆகா! இந்த மனிதன் யார்? இவனுக்கும் இந்தப் பெண்ணுக்கும் என்ன உறவு?" என்று எண்ணியவண்ணம் ஆச்சாரிய பிக்ஷு விஹாரத்துக்குள் சென்றார். பொன்னியின் செல்வர் இருந்த இடத்தை அணுகினார். முருகய்யன் இதற்குள் அதிசயமெல்லாம் நீங்கப் பெற்றவனாய் இளவரசர் கூறுவதைப் பக்தியுடன் கேட்டுக்கொண்டிருந்தான்.

"முருகா! இன்றிரவு நீ திரும்பி வந்து என்னைப் படகில் ஏற்றி ஆனைமங்கலத்துக்கு அழைத்துப் போக வேண்டும்" என்று இளவரசர் கூறினார்.

ஆச்சாரிய பிக்ஷு, "இளவரசே! இரவு வரையில் காத்திருக்க வேண்டியதில்லை. ஜனக் கூட்டம் கலைந்து விட்டது. தாங்கள் இப்போதே புறப்பட்டுப் போகலாம்" என்று சொன்னார்.

பின்னர், வெளியில் நடந்தவற்றைச் சில வார்த்தைகளில் கூறினார்.

"சுவாமி! ஜனங்கள்தான் கலைந்து போய் விட்டார்களே நான் எதற்காகப் போக வேண்டும்?" என்றார் இளவரசர்.

"அவர்கள் திரும்பி வர மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்? மேலும், பிக்ஷுக்களாகிய எங்கள் வாக்கை மெய்யாக்குவதாகச் சற்று முன் சொன்

னீர்கள் அல்லவா? அதை நிறைவேற்றி அருள வேண்டும்!" என்றார் பிக்ஷு.

உண்மை என்னவென்றால், பொங்கி வரும் கடல் அந்தச் சூடாமணி விஹாரத்தைச் சிறிது நேரத்துக்கெல்லாம் முழுக அடித்துவிடும் என்று பிக்ஷுவின் உள்ளத்தில் ஒரு பீதி உண்டாகியிருந்தது. ஆகையால் இளவரசரை அவசரமாக வெளியேற்ற விரும்பினார். ஆனை மங்கலம், கடற்கரையிலிருந்து கிழக்கே சற்றுத் தூரத்தில் இருந்தது. ஆகையினால் பொங்கி வரும் கடல் அவ்வளவு தூரம் போய் எட்ட முடியாது. எட்டினாலும் அங்குள்ள மிகப் பெரிய சோழ மாளிகை மூழ்கி விடாது.

இளவரசர் பிக்ஷுவின் கருத்தை ஏற்றுக்கொண்டார். உடனே படகு கொண்டு வருமாறு கட்டளை பிறந்தது.

இதற்கிடையில் அங்கே கூடியிருந்த புத்த பிக்ஷுக்களைப் பார்த்து ஆச்சாரிய பிக்ஷு "நாம் கருணையே வடிவமான புத்த பகவானைச் சேர்ந்தவர்கள். இப்போது நாகைப்பட்டினத்து மக்களுக்குப் பெரும் சோதனை நேரிட்டிருக்கிறது. கடல் பொங்கி நகரத்துக்குள் வேகமாகப் புகுவதைக் கண்டேன். புயலின் வேகத்தினால் வீடுகளின் கூரைகள் சிதறிப் பறக்கின்றன. மரங்கள் தடதடவென்று முறிந்து விழுகின்றன. நாகைப்பட்டினத்திலும் அக்கம் பக்கத்திலும் வசிக்கும் மக்களில் வயோதிகர்களும் குழந்தைகளும் எத்தனையோ பேர் தப்பிக்கும் வகை அறியாது தவித்துக்கொண்டிருப்பார்கள். நீங்கள் அனைவரும் நாலாபுறமும் சென்று உங்கள் கண் முன்னால் கஷ்டப்படுகிறவர்களுக்கு உங்களால் இயன்ற உதவிகளைச் செய்யுங்கள். குழந்தைகளையும் வயோதிகர்களையும் முதலில் கவனியுங்கள். சமுத்திர ராஜனின் கோபத்திலிருந்து எத்தனை பேரைக் காப்பாற்றலாமோ, காப்பாற்றுங்கள்! நான் வயதானவன். இங்கேயே இருந்து மாலை நேரத்துப் பூஜையைக் கவனித்துக் கொள்கிறேன்" என்றார்.

இதைக் கேட்டதும் பிக்ஷுக்கள் அங்கிருந்து அகன்று சென்றார்கள்.

கால்வாயில் படகு வந்து சேர்ந்தது. இளவரசர் ஆச்சாரிய பிக்ஷுவுக்கு வணக்கம் செலுத்தி விடைபெற்று அதில் ஏறிக்கொண்டார். முருகய்யனும் ஏறிப் படகு தள்ளத் தொடங்கினான்.

படகு கண்ணுக்கு மறையும் வரையில் பிக்ஷு அதையே பார்த்துக் கொண்டு நின்றிருந்தார். அவருடைய முகத்தைச் சுற்றி அபூர்வமான ஜோதி ஒன்று பிரகாசப்படுத்திக்கொண்டிருந்தது.

## நாலாம் அத்தியாயம்

# நந்தி முழுகியது

படகு கால்வாயில் போய்க்கொண்டிருந்தபோது இளவரசர் நிமிஷத்துக்கு நிமிஷம் கால்வாயின் நீர் மட்டம் அதிகமாகிக்கொண்டிருப்பதைக் கவனித்தார்.

படகு தத்தளித்துக்கொண்டிருந்தது. முருகய்யன் அதைச் செலுத்துவதற்கு வெகு பாடுபட்டுக்கொண்டிருந்தான்.

புயலின் வேகமும் வினாடிக்கு வினாடி அதிகமாகிக் கொண்டிருந்தது. இருபுறமும் மரங்கள் சடசடவென்று முறிந்து விழுந்துகொண்டிருந்தன.

நந்தி மண்டபத்தை நெருங்கிப் படகு வந்தது. இளவரசர் அந்த மண்டபத்தைப் பார்த்தார். நந்தியின் தலைக்கு மேலே தண்ணீர் வந்திருந்தது. இதிலிருந்து நீர் மட்டம் எவ்வளவு உயர்ந்திருந்தது என்று நன்கு தெரிய வந்தது.

"முருகய்யா! படகைச் சிறிது நிறுத்து" என்று இளவரசர் கூறினார். முருகய்யன் படகை நிறுத்தினான். ஆனால் அதன் ஆட்டத்தை நிறுத்த முடியவில்லை.

இளவரசர் படகிலிருந்து தாவிக் குதித்து நந்தி மண்டபத்தில் இறங்

கினார். பின்னர் அதன் அருகில் விழுந்திருந்த ஒரு மரத்தைப் பிடித்துக்கொண்டு மண்டபத்தின் மேல் சிகரத்தின் மீது ஏறினார். அங்கேயிருந்து சுற்று முற்றும் பார்த்தார். கால்வாய்க்குக் கீழ்ப்புறம் முழுதும் ஒரே ஜலப் பிரளயமாக இருந்தது. தென்னந்தோப்பில் பாதி மரங்களுக்கு மேல் அதற்குள் விழுந்து விட்டிருந்தன. இடைவெளி வழியாகப் பார்த்தபோது கடல் பொங்கி அந்தத் தென்னந்தோப்பின் முனை வரையில் வந்து விட்டதாகத் தெரிந்தது.

வடக்கே, சூடாமணி விஹாரம் இருந்த திசையை அருள்மொழிவர்மர் நோக்கினார். விஹாரத்தின் வெளிப் படிக்கட்டுகள் வரையில் கடல் பொங்கிப் பரவியிருந்தது தெரிந்தது.

பொன்னியின் செல்வருடைய மனத்தில் அப்போது ஓர் எண்ணம் உதயமாயிற்று. அது அவருடைய உடல் முழுதும் சிலிர்க்கும்படி செய்தது.

"முருகய்யா! படகைத் திருப்பிக் கொண்டு போ! விஹாரத்தை நோக்கி விடு!" என்றார் இளவரசர்.

அதிகமாகப் பேசிப் பழக்கமில்லாதவனும் இளவரசரிடம் அளவற்ற பக்தி கொண்டவனுமான தியாகவிடங்கரின் மகன், ஏன் என்று கூடக் கேளாமல் படகைத் திருப்பிச் சூடாமணி விஹாரத்தை நோக்கிச் செலுத்தினான்.

வரும்போது ஆன நேரத்தைக் காட்டிலும் போகும்போது சிறிது குறைவாகவே நேரமாயிற்று. ஆனால் இளவரசருக்கோ ஒவ்வொரு வினாடியும் ஒரு யுகமாக இருந்துகொண்டிருந்தது.

படகு விஹாரத்தை அடைந்தபோது பொங்கி வந்த கடல் ஏறக்குறைய விஹாரம் முழுவதையும் சூழ்ந்துகொண்டிருந்தது. நீர் மட்டம் மேலே மேலே ஏறிக்கொண்டுமிருந்தது.

ஈழ நாட்டிலுள்ள விஹாரங்களைப் போல் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரம் அக்காலத்தில் அவ்வளவு கம்பீரமாகவோ உயரமாகவோ அமைந்திருக்கவில்லை. இன்னும் கொஞ்சம் தண்ணீர் மேலே ஏறினால் விஹாரத்தின் மண்டப சிகரம் கூட முழுகி விடும் என்ற நிலைமை ஏற்பட்டிருந்தது.



ளவரசர் படகிலிருந்து தாவித் தண்ணீரில் முழுகாமலிருந்த ஒரு மண்டபத்தின் மேல் தளத்தில் குதித்தார். அங்குமிங்கும் பரபரப்புடன் ஓடினார். விஹாரத்தின் அடித்தளத்துக்கு அவர் போகாமல் மேல் மாடங்களில் ஒவ்வொரு பகுதியாகத் தேடிக் கொண்டு வந்தார். மேல் மாடங்களிலேயே சில இடங்களில் மார்பு அளவு தண்ணீரில் அவர் புகுந்து செல்ல வேண்டியதாயிருந்தது. மேலும் மேலும் ஏமாற்றம் ஏற்பட்டுக் கொண்டிருந்தது. கடைசியில், கௌதம புத்தரின் கம்பீரமான உருவச்சிலை அமைந்திருந்த இடத்துக்கு வந்து சேர்ந்தார். அந்தச் சிலையின் மார்பு அளவுக்குத் தண்ணீர் ஏறியிருந்தது. அங்கே இளவரசர் நின்று நன்றாகச் சுற்று முற்றும் பார்த்தார். தண்ணீரில் குனிந்தும் பார்த்தார். அவருடைய வாயிலிருந்து எழுந்த மகிழ்ச்சியும் வியப்பும் கலந்த 'ஆஹா!' ஒலி அவர் தேடி வந்ததை அடைந்துவிட்டார் என்பதற்கு அறிகுறியாக இருந்தது.

ஆம்; புத்தர் சிலையின் அடியில் தண்ணீருக்குள்ளே பகவானுடைய பத்ம சரணங்கள் இரண்டையும் இறுக்கிக் கட்டிக்கொண்டு ஆச்சாரிய பிக்ஷு உட்கார்ந்துகொண்டிருந்தார்.

பொன்னியின் செல்வர் தண்ணீரில் முழுகிப் பிக்ஷுவின் கரங்கள் இரண்டையும் சிலையிலிருந்து பலவந்தமாக விடுவித்து விட்டு அவரைத் தூக்கி எடுத்தார். தண்ணீருக்குள்ளே பிக்ஷுவைத் தூக்குவது இலேசாக இருந்தது. தண்ணீருக்கு வெளியே வந்த பிறகு அவ்வளவு இலேசாக இல்லை. ஆஜானுபாகுவும் நல்ல பலிஷ்டருமான அந்த பிக்ஷுவின் உடல் கனம் இளவரசரைத் திணறச் செய்தது.

"முருகய்யா! முருகய்யா!" என்று குரல் கொடுத்தார்.

"இதோ வந்தேன்!" என்று சொல்லிக் கொண்டே முருகய்யன் படகைக் கொண்டு வந்தான்.

பொன்னியின் செல்வர் ஆச்சார்ய பிக்ஷுவைத் தூக்கிக்கொண்டு படகை நோக்கி விரைந்து சென்றார். அவருடைய கால்கள் தடுமாறின.

(தொடரும்)

# ஆங்கிலமே அருகில் Vaa!

அப்படி ஒரு ஆளை என் லைஃப்ல நான் பார்த்ததேயில்லீங்க. பிடிவாதம்னா அப்படியொரு பிடிவாதம். தான் பிடிச்ச முயலுக்கு மூணு கால்தான்னு சாதிப்பார். அதாங்க, எங்க ஊர் அய்யாசாமியைப் பத்தி தான் சொல்றேன்.




அவரை எல்லாருமே 'AA' ன்னு தான் கூப்பிடுவோம். அதென்ன 'AA' ன்னு கேக்கறீங்களா?

Adamant Ayyaswamyங்கறதைத்தான் சுருக்கமா AA ன்னு சொல்வோம்.

adamant ன்னா பிடிவாதமான (பிடிவாத குணம் கொண்ட)ன்னு அர்த்தம்.

இது போல நம்மைச் சுத்தியிருக்கறவங்களோட குணங்களைப் பத்தி நாம comment அடிப்பது வழக்கம்.



- பாவம் அவன் ரொம்ப அப்பாவி.
- எங்க மானேஜர் ரொம்ப கண்டிப்பானவர்.
- முதலாளி ரொம்ப நேர்மையானவர்.
- அவ ரொம்ப பொறாமை புடிச்சவ.
- எங்க பக்கத்து வீட்டுக்காரி ரொம்ப வாயாடி.
- அவன் ரொம்ப புத்திசாலி.
- அந்த ஆளு சரியான சிடுமூஞ்சி
- அவன் சரியான ஏமாத்துப் பேர்வழி.
- அவர் ரொம்ப தைரியசாலி.
- அவர் ஒரு குழந்தையாட்டமா. (குழந்தை உள்ளம் கொண்டவர்)

இது போல மத்தவங்களோட குணத்தைக் குறிப்பிடும் பொருத்தமான இங்கிலீஷ் வார்த்தை என்னங்கறதை முதல்ல தெரிஞ்சுக்கணும்.

'அவன் ரொம்ப அப்பாவி' – கள்ளம் கபடம் எதுவுமில்லாத, அதாவது எதையும் ஈஸியா நம்பிடற குணம் கொண்டவங்களை நாம 'அப்பாவி'ன்னு சொல்லு






வோம்.

சரி, இந்த அப்பாவிங்கறதை இங்கிலீஷ்ல எப்படிச் சொல்றது?

'innocent' ன்னா வெகுளி, அப்பாவின்னு அர்த்தம்.

'she is very innocent' – அவள் ரொம்ப வெகுளி (அப்பாவி)

ஒருத்தர் ரொம்ப கண்டிப்பானவரா இருந்தா 'strict'ங்கற வார்த்தையை யூஸ் பண்ணலாம்.

'our manager is very strict' – எங்க மானேஜர் ரொம்ப 'கண்டிப்பானவர்'ன்னு சொல்லலாம்.

'முதலாளி ரொம்ப நேர்மையானவர்' – நேர்மையானங்கறதை honest (ஹானஸ்ட்)னு சொல்லலாம்.

the boss is very honest. முதலாளி ரொம்ப நேர்மையானவர்.

நம்பிக்கை வையுங்கள். அவரை நம்பி நீங்க எதையும் ஒப்படைக்கலாம். ரொம்ப நம்பகமானவர் என்று நாம் சொல்வதுண்டு.

இது போன்று நமது நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களைப் பற்றிக் குறிப்பிட 'reliable' என்ற வார்த்தையைப் பயன்படுத்தலாம்.

he is reliable என்றால் அவர் நம்பகமானவர் என்று அர்த்தம்.

''பொறாமை பிடித்த''ங்கறதை jealous (ஜெலஸ்)ன்னு சொல்றதுண்டு.

'she is very jealous' அவள் மிகவும் பொறாமை குணம் கொண்டவள்.

'அவளுக்கு என் மீது பொறாமை'ன்னு சொல்லணும்னா 'She is jealous of me' ன்னு சொல்லுங்க.

சரி, இப்போ உங்க பக்கத்து வீட்டுக்காரி ரொம்ப வாயாடின்னு சொல்ல ஆசைப்படறீங்க. இதை எப்படிச் சொல்றது?

முதல்ல பக்கத்து வீட்டுக்காரிங்கறதை எப்படிச் சொல்வீங்க?

'neighbour'ன்னா பக்கத்து வீட்டில் வசிப்பவர்னு அர்த்தம். ஆனா பக்கத்து வீட்டுல வசிக்கும் பொண்ணுங்கறதை எப்படி சொல்றது? இதை the lady next doorன்னு சொல்லலாம்.

சரி, வாயாடிங்கறதை எப்படிச் சொல்வீங்க? 'talkative' (டாகடிவ்)ன்னா வாயாடி.

The lady next door is talkative. பக்கத்து வீட்டில் வசிக்கும் பெண் சரியான வாயாடி.

## வி. ராஜகோபாலன்

எப்பொழுது பார்த்தாலும் தொண தொணவென்று பேசிக் கொண்டிருக்கும் வாயாடிகளை 'chatter box' என்று சொல்வதுண்டு.

she is a chatter box. அவள் சரியான வாயாடி.

அவன் ரொம்ப புத்திசாலிங்கறதைச் சொல்ல இங்கிலீஷ்ல நிறைய வார்த்தைங்க இருக்கு. நீங்க எதை வேணும்னாலும் use பண்ணலாம். எல்லாத்தையும் சொல்றேன். உங்க இஷ்டப்படி நீங்களே select பண்ணிக்குங்க.

clever, brilliant, wise, talented, bright, smart இன்னும்கூட நெறய இருக்கு.

He is very clever.

He is very brilliant ன்னு உங்க இஷ்டப்படி எந்த வார்த்தையை வேணும்னாலும் use பண்ணிக்குங்க.

சரி. அந்த ஆளு சரியான 'சிடுமூஞ்சி'ன்னு சொல்ல நினைக்கிறீங்க. இதை எப்படி சொல்றதுன்னு யோசிக்க வையுங்க.

அடுத்த வாரம் பார்க்கலாம்.

(தொடரும்)

சசி வாரியர். கேரளாவைச் சேர்ந்த எழுத்தாளர். ஏற்கெனவே இரண்டு நாவல்கள் எழுதியுள்ள இவரது உண்மை + கற்பனை கலந்த மூன்றாவது புத்தகம்தான் 'ஹாங்மேன்'ஸ் ஜர்னல்.' இது, மரண தண்டனை விதிக்கப்பட்ட குற்றவாளிகளை, தூக்கில் போடும் பணியைச் செய்து வந்த கேரளாவைச் சேர்ந்த ஜனார்த்தனம் பிள்ளை என்பவரது கதை. பரபரப்பாக விற்பனையாகிக் கொண்டிருக்கிறது இந்தப் புத்தகம். அண்மையில், லேண்ட்மார்க் புத்தகக் கடையில், வாசகர்களை நேருக்கு நேர் சந்திக்க வந்திருந்தார் சசி வாரியர். விரைவில் கோயம்புத்தூரில் செட்டில் ஆக இருக்கும் அவரிடம் பேசினோம்.

**"இது போல ஒரு புத்தகம் எழுதும் எண்ணம் உங்களுக்கு எப்படி ஏற்பட்டது?"**

"வைகிங் புத்தக நிறுவனம்தான் இப்பணியை என்னிடம் ஒப்புவித்தது. மீரட்டைச் சேர்ந்த ஒருவர், மரண தண்டனைக் குற்றவாளிகளைத் தூக்கில் போடும் பணியைச் செய்து வந்தார். அவரைச் சந்தித்து, அவரது அனுபவங்களின் அடிப்படையில் ஒரு புத்தகம் எழுதித் தரும்படிக் கேட்டது வைகிங் நிறுவனம். நான், தென்னிந்தியாவிலேயே அப்படி ஒருவர் கிடைத்தால், அவரை வைத்து எழுதுவதாகக் கூறிவிட்டு, இங்கேயே தேட ஆரம்பித்தேன். திருவாங்கூர் சமஸ்தானத்தில், இப்படிப்பட்ட பணியைச் செய்தவர்தான் ஜனார்த்தனம் பிள்ளை. அவரைப் பற்றியது தான் இந்தப் புத்தகம்."

**"ஜனார்த்தனம் பிள்ளையைச் சந்தித்த அனுபவம் எப்படி இருந்தது?"**

"துரதிர்ஷ்டவசமாக, நான் அவரைச் சந்திக்க முடியாமல் போய்விட்டது. நான் இந்தப் புத்தகப் பணியைத் தொடங்குவதற்கு முன்னாலேயே, 94ம் வருடமே அவர் மறைந்துவிட்டார். 1940 தொடங்கி, அடுத்த முப்பது வருடங்களில் நூற்றுப் பதினேழு பேரைத் தூக்கில் போட்டவர் அவர். அவரது விதவை மனைவி, சகோதரர்கள், பிள்ளைகள், பெண்கள் மற்றும் குடும்பத்து உறவினர்கள் என்று பலரைச் சந்தித்துப் பேசினேன். நிறைய விஷயங்களைச் சொன்னார்கள்."

**"இந்தப் புத்தகத்தில் கற்பனையும் உண்மையும் எந்த விகிதத்தில் கலந்துள்ளன?"**

"ஜெயில், தூக்குமேடை, ஒருவரைத் தூக்கில் போடுவதற்கு முன் தூக்குமேடை எப்படித் தயார் செய்யப்படுகிறது, தண்டனை எப்படி நிறைவேற்றப்படுகிறது, அதன்பின் என்ன நடக்கிறது. அந்தச்சமயத்தில் மற்றவர்கள் எப்படி நடந்துகொள்ளுவார்கள், அவருடைய குடும்பத்தினரின் ரியாக்ஷன் இவை எல்லாம் நிஜம். தூக்குப் போடுபவரது மனநிலை – தண்டனையை நிறைவேற்றுவதற்கு முன்பு, நிறைவேற்றுகிறபோது, நிறைவேற்றிய பின்பு எப்படி இருக்கும் என்பது நான், என்னை ஜனார்த்தனம் பிள்ளையாக நினைத்துப் பார்த்து, கற்பனை கலந்து எழுதியது."

**"புத்தகம் எழுதியபோது ஏற்பட்ட மறக்க முடியாத அனுபவங்களைச் சொல்லுங்களேன்."**

"சுசீந்திரத்தில், ஜனார்த்தனம் பிள்ளையின் தூரத்து உறவினர் ஒருவர் இருப்பதாக அறிந்து, அவரைத் தேடிக் கண்டுபிடித்தேன்.



அவருடன் பேசியபோது, "தூக்குத் தண்டனை நிறைவேற்றி, சம்

# தூக்குக்

பாதித்த ஒருவரைப் பற்றி புத்தகம் எழுதுவதெல்லாம் தேவையில்லாதது. மூன்றாவது மனிதரான நீங்கள், அவரைப் பற்றி எதற்காக அக்கறை காட்ட வேண்டும்? புத்தகம் எழுத வேண்டிய அவசியமில்லை. வேண்டுமானால், சுசீந்திரம் கோவிலைப் பற்றி நானே நிறைய தகவல்கள் சொல்கிறேன். ஒரு புத்தகம்

# கயிறின் மகிமை!

எழுதுங்கள். பகவானைப் பற்றி எழுதினால் புண்ணியமாவது கிடைக்கும்" என்று என்னை அதைரியமூட்டினார். ஆனால் நான் அதை சீரியஸாக எடுத்துக் கொள்ளவில்லை.

திருவனந்தபுரத்தில் உள்ள 'பூஜப்புர' ஜெயிலுக்குப் போய் பார்க்க விரும்பினேன். ஜெயில் அதிகாரிகளை அணுகி அனுமதி கேட்டபோது, அனுமதி கோரும் கடிதம் எழுதிக் கொடுங்கள். ஜெயில் துறை ஐஜிக்கு அனுப்பி, அனுமதி கிடைத்தபின், நாங்கள் அனுமதிக்கிறோம். நீங்கள் சுமார் ஆறு மாதம் போலக் காத்திருக்க வேண்டும்" என்று கூறி விட்டனர். ஏற்கனவே ஜனார்த்தனம் பிள்ளையைப் பற்றிப் பல கட்டுரைகள் வெளியிட்ட 'மாத்ருபூமி' மலையாளப் பத்திரிகையில் முக்கிய பொறுப்பில் இருந்த என் உறவினர் ஒருவரிடம் என் பிரச்னையைக் கேஷுவலாகக் கூறியபோது, அவர் மூலம் அனுமதி கிடைத்தது.

ஜனார்த்தனம் பிள்ளையின் குடும்பத்தினரைச் சந்தித்துப் பேசிக்கொண்டிருந்த போது, அவருடைய சகோதரர், உங்களுக்குத் திருமணம் ஆகி விட்டதா? குழந்தைகள் உண்டா? என்றெல்லாம் கேட்டார். நான் 'ஆம்' என்றவுடன் வீட்டுக்குள்ளே சென்று, எதையோ கொண்டு வந்து "இதை வீட்டுக்கு எடுத்துச் செல்லுங்கள்" என்றார். அவர் கொடுத்தது, நாலு அங்குல நீளமுள்ள கயிறு. அந்தக் தூக்குக் கயிறின் துண்டினைக் கொடுத்துவிட்டு, "குழந்தைகள் படுத்துத் தூங்கும் தொட்டில் அல்லது கட்டிலில் இந்தக் கயிறைக் கட்டி வைத்தால், காத்து, கருப்பு அண்டாது; குழந்தை ஆரோக்கியமாக இருக்கும்" என்றார். அவரது இந்தச் செய்கை என்னை நெகிழ வைத்து விட்டது. பலர், இந்தத் தூக்குக் கயிற்றின் மகிமை பற்றி அறிந்து இவர்கள் வீடு தேடி வந்து, பணம் கொடுத்து தூக்குக் கயிறின் துண்டுகளை வாங்கிக்கொண்டு போவதுண்டாம்.

தூக்கு மேடையை நேரிடையாகப் பார்ப்பதற்காக, ஜெயிலின் மரண தண்டனைக் கைதிகளுக்கான தனிமை சிறைப் பகுதிக்குப் போயிருந்தேன். அங்கே மரணத் தண்டனைக்குத் தேதி குறிக்கப்பட்ட குற்றவாளி அடைபட்டிருந்த அறையைத் தாண்டிச் சென்றேன். கம்பிகள் இன்றி, முழுமையாக மூடப்பட்டிருந்த அந்த சிறை அறையின் சாவித் துவாரம் வழியே உள்ளே பார்த்தேன். சாவை எதிர்நோக்கி, துக்கம் பொங்க, சோகமாய் உள்ளே கைதி அமர்ந்திருப்பான் என நினைத்த எனக்கு, உள்ளே ஏதோ பீச்சில் காற்று வாங்குவதுபோல, தலைக்குக் கையை முட்டுக் கொடுத்தபடி பீடி பிடித்துக் கொண்டு அவன் படுத்துக் கொண்டிருந்தான்! அவனைப் பார்த்ததும் எனக்கு லேசான அதிர்ச்சி!"

"இந்தப் புத்தகம் எழுதியபோது, உங்களுக்கு மனசு வலித்ததா?"

"ஒவ்வொரு தடவையும், சின்னப் பிசகு இன்றி, மனிதர்களைத் தூக்கில் போட்டு, மரணம் ஏற்படுத்திய ஜனார்த்தனம் பிள்ளைக்கு ஆரம்பக் காலத்தில் மனச்சங்கடம் இருந்தாலும், நாளடைவில், நம் தொழில் இது; இதைச் செய்வது நம் கடமை; இதிலே பாவம் ஏதும் இல்லை என்று அவர் நினைக்கத் தொடங்கி விட்டார். என் மனதும், ஜெயிலுக்குப் போய் வந்த பின்பும், ஜனார்த்தனம் பிள்ளையின் குடும்பத்தினரிடம் பல மணி நேரம் பேசிய சமயங்களிலும் கனமாக இருந்ததை நான் ஒளிக்க விரும்பவில்லை!"

"மரண தண்டனை ஒழிக்கப்பட வேண்டும் என்று குரல் எழுந்து கொண்டிருக்கிறதே! அது பற்றி உங்கள் கருத்து என்ன?"

"பாகிஸ்தானில், நூற்றுக்கணக்கான குழந்தைகளைக் கொடூரமாய்க் கொன்று குவித்தானே ஒருவன்! அவனுக்கு மரண தண்டனை தவிர வேறு என்ன தண்டனை தர முடியும்? ஆக, மரண தண்டனையை முற்றிலும் ஒழிப்பதில் எனக்கு உடன்பாடில்லை. சில மனிதாபிமானமில்லாத கொடூரமான செயல்களுக்கு மரண தண்டனையைவிடத் தகுந்த தண்டனை வேறு எதுவும் இருக்க முடியாது என்பது என்னுடைய அபிப்ராயம்!"

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

மங்கள நாயகி சற்று அன்சைஸில் இருப்பாள். பூமியீர்ப்பு விசை போன்ற சமாசார உபத்திரவங்களால் அவள் இயல்பாகவே தரை பார்த்து நடக்க வேண்டியிருந்தது. ஒடுக்கமான அல்ல; ஆனால் அடக்கமான பெண்.

தனியே யோசிக்குந்தோறும் அவளுக்கு அன்புச்செல்வியின் காதல் உறுத்திக் கொண்டிருந்தது. காதல் காலங்காலமான சீசனல் ஜுரம் என்பது அவளது தீர்மானமான முடிவு.

அதை உலகம் கொண்டாடுவது அவளுக்கு ஆச்சரியமாய் இருந்தது.

உலகத்துக்குப் பொய் பிடிக்கிறது. போதை பிடிக்கிறது. கனவு பிடிக்கிறது. கற்பனை பிடிக்கிறது. பைத்தியமும், காதலும்.

எந்தப் பைத்தியம் தன்னைப் பைத்தியம் என்று ஒத்துக் கொண்டிருக்கிறது? ஒத்துக் கொள்ளத் தெரிந்தது எப்படிப் பைத்தியமாகும்?

ஆயினும் இவளை அப்படி ஒரேடியாக எதையாவது சொல்லி மனதை நோகடிக்கவும் அவள் மனம் சம்மதிக்கவில்லை. ஆகவேதான் அவள் அன்புச்செல்வியின் காதல் கடிதங்களை அப்படியே அவளிடம் தந்ததும். ஒருமுறை ஆர்வக் கோளாறு காரணமாக அவள் ஒரு கடிதத்தைப் பிரித்துப் படித்தாள். அத்தனை வரிகளும் அபத்தக் களஞ்சியம். கற்பனையின் விசித்திர விகாரம். கீழே பெயர் பார்த்தால் எவனோ அசோக். சரித்திரப் பெயர்கொண்ட மகாபுருஷன். காதல் சரித்திரம் காண்கிற பாயைப் பிறாண்டி. அவனா உன் பாய் பிரண்டடி...? என்று அன்புச்செல்வியின் மீது அவளுக்கு ஆத்திரம் வந்தது. பார்க்கிலும் பீச்சிலும் காதலரின் அரைமயக்க நிலையைப் பயன்படுத்தி எத்தனை சிறுவர்கள் விற்காத ஊசல் சுண்டலைக் கூட அவர்கள் கையில் திணித்துக் காசு பண்ணி விடுகிறார்கள்.

**தங்கச் சங்கிலி பரிசு!**

**இத் தொடர்கதையை வாரம் ஒரு எழுத்தாளர் என்று பத்து எழுத்தாளர்கள் எழுதுகிறார்கள். கவனமாகப் படித்து வாருங்கள். கடைசி வாரத்தில் ஒரு கேள்வி உங்களுக்காகவே தயாராக இருக்கிறது. சரியாக பதிலளிப்பவர்களுக்குப் பரிசாகக் காத்திருக்கிறது தங்கச் சங்கிலி! பலர் சரியாக எழுதியிருந்தால் குலுக்கலில் ஒருவர்! பரிசளிப்பு விஷயத்தில் ஆசிரியர் தீர்ப்பே இறுதி.**

வார்டன் எச்சரித்தபோதே அசோக்கிற்கு கோவிந்து மேல்தான் சந்தேகம். ஒருவேளை இவன் குளியலறையில் எழுதியிருக்க மாட்டான் என அவன் நினைத்தான். குளியலறைகளிலும், ஆட்டோக்களிலும் மூன்றாந்தர வாசகங்கள் எழுதுகிறவனா கோவிந்து? எப்பேர்ப்பட்ட கவிஞன் அவன். எப்பேர்ப்பட்ட பாடகன். தனிமையிலே இனிமை காண முடியுமா... என்று அவன் நெக்குருகப் பாடியதில் என் பேனாவே எழுத எடுத்த போது ராயல்புளூ மையை வெளியே கொட்ட ஆரம்பித்து விட்டதே.

அசோக் சாதாரணமாகவே சற்று சாய்த்துத்தான் நடப்பான். பிறவியே அப்படி. அவன் தலைமுடிகள் சற்று குச்சி குச்சியாக நிற்கும். இருட்டில் பெருச்சாளி போலவும் சிறிது வெளிச்சத்தில் முள்ளம்பன்றி போலவுமான தலை. சே, நண்பனைப் பற்றி



# 8

**இந்திரா சௌந்தர்ராஜன்**

எப்படியெல்லாம் நினைக்கிறோம். படுத்த படி கண்மூடிக் கிடந்தான் கோவிந்து.

வர வர நண்பனிடம் அவன் பேசுவதே கூடக் குறைந்து போயிருந்தது. அவன் வாயைத் திறந்து பாடினாலே அந்தக் குரலுக்குப் பாதி பேர் ஓட்டமெடுத்தார்கள். மீதிப் பேரோ அந்த வாய் நாற்றத்துக்கு ஓட்டமெடுத்தார்கள். 'ஏண்டா? என் பாட்டுக்கு என்னடா?' என்று பொருமிய கோவிந்துவை அசோக்தான் பொறுமையாய் சமாதானப்படுத்தி, வேளைதோறும் பல் தேய்க்கப் பழக்கினான்.

அசோக்கின் நடவடிக்கைகள் நாளுக்கு நாள் பேதலித்துக் கொண்டிருந்தன. என்னென்னவோ எழுதுகிறான். கிழிக்கிறான். திரும்பவும் எழுதுகிறான். பாடம்தான் எழுதிப் பார்க்கிறானாக்கும் என்று பார்த்தால் அடச்சே, கடிதம்! காதல் கடிதம்! சரி, அதையும் எழுதிக் கசக்கித்தானே எறிகிறான், என்று பார்த்தால், கசக்கி பக்கத்து ஹாஸ்டல் சுவர் தாண்டி எறிகிறான்!

முதலில் காக்கை உச்சந்தலையை எச்சந்தலையாக ஆக்கி விட்டதாகத்தான் மங்களம் நினைத்தாள். தலையைத் தட்டிக் கீழே விழுந்தது. தொண்ணூற்றி ஒன்பதாவது கடிதம், நூறாவது என்று ஃபேன் சுற்றுவதை எண்ணினாற்போல் ஒரு பைத்தியக்காரக் கணக்கு வேறு.

வரவர அன்புச்செல்வியும் மாறியிருந்தாள். சரியாக உடையுடுத்துவ

தில்லை. சாப்பிடுவ தில்லை. உறங்குவது மில்லை. கண் கீழ்க் கரு வளையம். மை போட்ட கண் அல்ல அது - சோர்வு போட்ட கண் வரிகள். அவனோடு பழைய கலகலப்புடன் பேசுவதும் இல்லை. கொஞ்ச நாள் குழப்பமாய் இருந்தது. புரியாமல் இருந் தது. கடைசியில் பார்த் தால்,

காதல் மனிதர்களை எப்படியெல்லாம் அம்மிக் குழவியாய் ஆட்டுவிக் கிறது.

செய்வதையும் செய்து விட்டு எதுவும் தெரியாத மாதிரி நடிக்கிறானா ராஸ் கல்... என்று கோவிந்து மேல் அசோக்குக்குக் கோபங் கோபமாக வந் தது. என்னைப் பார்த்த வுடன் ஏ.எம். ராஜா சாய லில் இருப்பதாக பாவித் துக் கொண்டு பாட ஆரம் பிக்கிற நண்பனா இவன், என்றிருந்தது. அந்த எக்ஸ்ட்ரா அமைதி. ஏதோ அவர்களுக்குள் நிகழ்ந்து விட்டதாக உணர்ந்த கணம் அது.

மங்களநாயகியின் அள வான உடைகளே அன்புச் செல்விக்கு அன்சைஸாக இருக்கும். அவளது அன் சைஸ் உடைகளை இப் போது அன்புச்செல்வி அணிந்து கொண்டிருந் தாள். அன்பின் உடைகள் தோய்க்கக் கிடந்தன. பொதுவாகப் பரீட்சை என்றும் சோர்வு கருதியும் அவள் தன் துணிகளைத் துவைக்காமல் டிமிக்கி கொடுத்து விடுவதுண்டு. அவள் திரும்பி வரும் போது அவை சுத்தமாக இஸ்திரி போட்டுக் காத் திருக்கும். மறு நாள் நேரடி யாகக் கல்லூரிக்குப் போட்டுக் கொண்டு போய்விடலாம். ஏனெ னில் அவளது உடைகள் மங்களநாய கிக்குச் சற்றும் பொருந்தாதவை. ஆகவே அன்புவின் உடைகளை மங் களம் எடுத்துப் போட்டுக் கொள்கிற பயமே இவளுக்கு இல்லை.


• லக்ஷ்மா

அன்புச்செல்வி திடீரென்று மங்களத் தின் போக்கில் சில பல மாற்றங்களை கவ னித்தாள். அசோக்கின் கடிதங்களை முதலில் எடுத்து வந்து தந்தவளே அவள்தான்... என்றாலும் என்ன ஆயிற்று?

சின்ன வயதில் இருந்தே தான் குண்டு என்கிற காம்ப் ளெக்ஸ் கொண்ட மங்களம் ஒதுங்கியே யாரிடமும் பழகினா லும் அறைத் தோழியான அன்புச் செல்வியிடம் மனந்திறந்து பேசுவாள். சிரிப்பாள். அன்புச் செல்வியின் அபத்தக் கடி ஜோக்குகள் அவளுக்குப் பரவசமாய் இருந்தன. மற்றவர்கள் அவள் ஜோக்குகளுக்கு விழுந்தடித்துக் கொண்டு ஓடினார் கள். மங்களநாயகியால் அப்படி ஓட முடியவில்லை. அவள் சரீரம் அப்படி.

சே, மங்களம் இப்படி ஒரு கடிதம்... அதுவும் ஜெராக்ஸ் அனுப்பும் ஈனப்பிறவியா அவள். அப்படி இருக்காது என்றே இருந்தது அவளுக்கு. இருந்தாலும் பின் எப்படி என் வீட்டுக் குத் தெரிந்தது? அனுப்பியது யார்? யார்?

கேட்கலாமா? கேட்டு விடலாமா?

என்னவோ யோசனை குடைகிறது அசோக்கிற்கு, என்று புரிந்தது கோவிந்துவுக்கு. தாகத்தை அடக்கித் தூக்கம் வந்து போல் கிடந்தான். அப்படி நடிக்க நடிக்கத்தான் சனியன் தாகம் அதிகரித்தது. சே, நண்பன் முன்னாடியே நடிக்க ஆரம்பித்து விட்டோமே என்றிருந்தது. வெட்கமாய் இருந் தது. அவன் மட்டும் என்ன? எப்படி கோந்தாய் ஒட்டிக் கொண்டிருந்தவன் எனை மறந்து, எனைத் துறந்து, எத்தனை விலகிப் போய்விட்டான்.... ஹா, அவனோடு பழைய நண் பனாய் அமர்ந்து பேசி, பாடி, சிரித்து எத்தனை நாளாயிற்று.

அசோக்கிற்கு வார்டன் கூப்பிட்டு எச்சரித்தது தாள முடியாதிருந்தது. கோவிந்து நிச்சயம் தூங்குவதாய் நடிப்பது அவனுக்குத் தெரிந்தது. நடிக்கிறான்... நாயே, என்று அவனை அறைந்து எழுப்ப ஆத்திரம் குமுறியது. அடக்கிக் கொள்ளப் பார்த்தான்.

எப்படிக் கேட்பது? எங்கே, எப்படி ஆரம்பிப்பது? இவ ளிடமா? என் பிரிய சிநேகிதியிடமா? சண்டை போட்டால் பிரியா சிநேகிதி பிரிகிற சிநேகிதி ஆகி விடுவாளே, என்றிருந் தது அன்புவுக்கு. ஆனாலும் இவள்தான். இவளேதான் ஜெராக்ஸ் அனுப்பியிருப்பாள். வேறு யார்? இந்த ஒற்றை அறையில் அவளை விட்டால் வேறு யார்? அறையில் இருக் கும் இரட்டைக் கட்டிலில் கூடப் படுக்க இடம் இல்லாமல் மங்களம் கட்டிலில் படுத்தால் அன்பு தரையில் அல்லவா படுக்க வேண்டியிருக்கிறது?

இவளேதான் அனுப்பியிருப்பாள்... வேறு யார்? இவளா சிநேகிதி? அத்தனையும் நடிப்பு.

சட்டென்று பலசரக்குக் கட்டி வந்த பொட்டலம் பிரித் தாற்போல அசோக் ஆரம்பித்தான். குரலில் கண்டிப்புடன்,

**சுஷ்மான்னா சும்மாவா?**

மறுபடியும் மத்திய அமைச்சரவை விரிவாக்கம் பற்றிய பேச்சு அடிபட ஆரம்பித்திருக்கிறது. குறைந்தபட்சம் நாலு பேருக்கு. கேபினெட் அந்தஸ்தில் பதவி தரவேண்டும் என்கிற அளவுக்கு. சிலருக்கு வேலைப் பளு உள்ளது.

'நிச்சயம் மந்திரி பதவி உண்டு' என்று குறிப்பிடப்படுபவர் சுஷ்மா ஸ்வராஜ். காரணம், பி.ஜே.பி. தலைமை உத்தரவிட்டது என்ற ஒரே காரணத்துக்காகக் கடைசி நிமிடத்தில் சொல்லியும் தேர்தலில் அவர் போட்டியிட்டதுதான். அநேகமாக நம் ஊர்க்காரரான சண்முகத்துக்கு மேலே, கேபினெட் அமைச்சராக சுஷ்மா நியமிக்கப்படுவார் என்கிறது பிரதமரின் அலுவலகப் பட்சி!

— எம்.

---

'டேய் எழுந்திரு...'

கோவிந்துவுக்கு ஆச்சரியம். மனசுக்குள் அவன், காலையும் நீயே மாலையும் நீயே, டூ ஓ க்ளாக் நீயே த்ரீ ஓ க்ளாக் நீயே, என்று பாடிக் கொண்டிருந்தான். என்ன விகாரக் குரல் இது....

சட்டென்று விரைப்பாகி, 'என்னா மரியாதை தேயுது?' என்று எழுந்து கொண்டான். 'டாய் கிய்ன்னா தாடை எகிறிடும்... வாய் வெத்திலை பாக்கு போட்டுக்கும்' என்று சூடாய் மயிலாப்பூர் வீதிகளின் திடீர் கடைகளில் கிடைக்கும் திடீர் மிளகாய் பஜ்ஜி போல ஆரம்பித்தான்.

''அந்தக் கதைல்லா வேணா... நான் நடிக்கல. நான் ஒண்ணும் மாறல... நீதான் மாறிட்டே— நீதான் என்னமோ மாதிரிப் பேசறே' என்றாள் மங்களம். அதைச் சொல்லுமுன் அவள் கண்ணில் கண்ணீர் வந்து விட்டது. அவள் அழ ஆரம்பித்தால் அறையே வெள்ளத்தில் மூழ்கும் அபாயம் உண்டு.

ஏண்டா ஆரம்பித்தோம் என்றாகி விட்டது, அன்புவிற்கு.

ஒருவேளை அவள் சொல்வதெல்லாம் உண்மைதானோ? நாம்தான் மாறி விட்டோமோ?

'என்னைப் பத்தி என்ன வேணாப் பேசு. என் காதலைப் பத்திப் பேசாதே...'என்றான் அசோக்.

''அட போடா. வெங்காயக் காதல். ஆனானப்பட்ட நாய்க்கே, மத்த மிருகங்களுக்கே அது சீசனல் சமாசாரம். மனுசனுக்கு அது ஆகப் பெரும் விஷயம். இல்ல?'' என்றான் ஆத்திரமாய். 'காதல் என்ட்ட உன்னை எத்தனை பொய் சொல்ல வெச்சிருக்குது நினைச்சிப் பார். எத்தனை பாவனை செய்ய வெச்சிருக்குது? இப்ப என்ட்டியே கோபப்பட வெச்சிருக்குது... நினைச்சிப் பார். யோசிச்சிப் பார்... நாம எப்படி ஒட்டு உரசலாப் பழகிட்டிருந்தோம். அப்பாட்டியே ஒழுங்காப் படிக்கிறதாப் பொய்க் கடுதாசு வேற...''

''ஹா அப்படி வா... மச்சான் என்ன தெகிரியம் இருந்தா நீ என் ஐயாவுக்கு ஜெராக்ஸ் அனுப்புவே?''

''ஜெராக்ஸா?''

''ஜெராக்ஸ் தெரியாது? எக்ஸ் ஈ ஆர் ஒ எக்ஸ்...''

''அட அது தெரியும்... என்ன ஜெராக்ஸ்? ஏது ஜெராக்ஸ்?''

ஆ, இவன் நிஜமாகவே முழிக்கிறான்... அசோக்கிற்கு அந்தக் கணம் கோபம் அடங்கியது. இவனையா, இந்த நண்பனையா சந்தேகித்தேன்... இழக்க இருந்தேன்...

கோவிந்து எழுந்து வந்தான்.

''டேய் என்னை மறந்திட்டியாடா? வேணான்டா இந்தப் பாழாப் போன காதல்... அது வாழ்வின் சிறு பகுதிடா. அதுவும் பாசி மாதிரி... காலை ஊனி நடக்காட்டி பிறகு நாம சரியா நடக்கவே முடியாமப் பண்ணிரும். வாழ்க்கையையே திசை திருப்பி விட்டிரும்....''

அசோக் அவனைப் பார்த்தான். ''அப்டின்றே?'' என்றான்.

''அப்டின்றே?'' என்றாள் அன்புச்செல்வி.

''அப்புறம் உன்னிஷ்டம். நான் சொல்றதைச் சொல்லிட்டேன்'' என்றாள் மங்களம்.

''இன்னியோட காதலுக்கு மங்களம் பாடிரு. நட்புதான் கடைசிவரை கூட வரும். நிலைத்து நிற்கும். காதல் அல்ல!''

''இதெல்லாம் எப்ப நீ கத்துக்கிட்டே?'' என்று கேட்டாள் அன்புச்செல்வி சிரித்தபடி.

கேட்டான் அசோக் சிரித்தபடி.

''மடோனா சொல்லிக் கொடுத்தாள்.'' என்றான் கோவிந்து.

''மடோனா போஸ்டரை மட்டுமா நீ கிழித்தாய். என் காதலையும்...'' என்றான் கவிதைச் சாயலில்.

''கொஞ்சம் பொறு'' என்று யோசனையுடன் பாத்ரூமுக்குள் புகுந்து கொண்டான் அசோக்.

(தொடரும்)

# தடால்... தடால்... டர்ர்ர்... டமால்..... ரூம்... ரூஷ்... க்ரீச்.....

'சினிமேனியா' என்ற அந்தத் திரையரங்கினுள்ளே நுழைந்தவுடனே, "என் இனிய டூரிஸ்ட்களே!" என்று அமானுஷ்யக் குரல் கேட்கிறது. மாருதி கார் சீட்டிங் போல முன்னேயும், பின்னேயும் தலா இரண்டுபேர் அமரும்படி ஒரு பாக்ஸ். இதுபோல வரிசைக்கு நாலு பாக்ஸ். மொத்தம் ஆரேழு வரிசைகள். பாக்ஸின் கீழே குனிந்து பார்த்தால் குண்டக்க மண்டக்க வயர்களும், மற்ற சமாசாரங்களும்.

உட்கார்ந்தவுடன், 'தயவு செய்து சீட் பெல்ட்டைப் போட்டுக் கொள்ளுங்கள். இருக்கையின் முன் பக்கமுள்ள கைப்பிடியை இருக்கமாகப் பிடித்துக் கொள்ளுங்கள்!' என்று பயமுறுத்தும் அறிவிப்புகள். அதுமட்டுமா? கர்ப்பிணிகள், குழந்தைகள், இதயவலிக்காரர்கள் உள்ளே நுழையக் கூடாது என்று வருத்தமுடன் தெரிவிக்கும் அறிவிப்பு, நுழைவாயிலிலேயே வைக்கப்பட்டுள்ளது.

தம்பதியாக டிக்கெட் வாங்கிக் கொண்டுவந்த இருவரிடம், நுழைவாயிலில் டிக்கெட் கிழிக்கும் நபர், "அறிவிப்பைப் பார்த்துவிட்டுத்தானே டிக்கெட் வாங்கினீர்கள்?" என்று கேட்க, கணவர், "எஸ், எஸ்.. எனக்கு ஹார்ட் பிராப்ளம் ஏதுமில்லை" என்றார்.

"நான் உங்கள் மனைவியைத் தான் மீன் பண்ணினேன்" என்றபோது "அவள் கர்ப்பமில்லை. உடல்வாகே அப்படித்தான்" என்று தர்மசங்கடத்துடன் சொல்லிவிட்டு "ஜிம்முக்குப்போ என்றால் கேட்டால்தானே! இப்படி ஒரு கமென்ட் தேவையா?" என்று மனைவியை செல்லமாய்க் கோபித்துக் கொண்டார்.

அரங்கம் பாதிதான் நிறைந்திருந்தாலும் சரியான நேரத்துக்குப் படம் ஆரம்பித்துவிட்டது.

அதற்குமுன் மறுபடியும் ஹார்ட் பிராப்ளம், கர்ப்பிணி பற்றிய எச்சரிக்கை.

கும்மிருட்டு. திரையில் நரைதாடியுடன் ஒரு பெரிசு தோன்றியது.



"நீங்கள் தப்பு செய்துவிட்டீர்கள். இங்கே வரக்கூடாது என்ற எச்சரிக்கையை உதாசீனப்படுத்திவிட்டீர்களே! வேண்டாம்.. தயவு செய்து திரும்பிப் போய்விடுங்கள்!'' என்று படுகேஷுவலாகப் பேசினார். சில விநாடி அமைதியாய் உற்றுப் பார்த்துவிட்டு, "ம்.. எனக்கென்ன வந்தது.. போங்கள்!" என்று சொல்லி, கேட்களை ஸ்டீரியோ எபெக்ட்டில் தள்ளிவிட, நமது இருக்கையில் சின்ன ஜெர்க்!

நாம் திகைக்கிறபோதே, விரிகிறது கண்ணெதிரே தண்டவாளம். நிலக்கரிச் சுரங்கம்போலும். நாம் உட்கார்ந்திருக்கிற நாலுசீட் பாக்ஸுக்கு, சக்கரம் மாட்டி, தண்டவாளத்தில் நகருவது போலத் தோன்றுகிறது. சில நிமிடங்களில், வேகம் பிடித்து தடதடவென்று ஓட்டம். நமக்கோ தண்டவாளத்தில் ஓடும் உணர்வு! காரணம், நாம் அமர்ந்துள்ள இருக்கைகளும் மேலே, கீழே, பக்கவாட்டில் என்று ஆடுவதுதான்.

தடதடவென்று ஓடிக் கொண்டே இருக்கும்போது, எதிரே ஏதோ குறுக்கே வந்துவிட, ஒரு சடன் பிரேக். நம் இருக்கையும் ஒரு குலுங்கு குலுங்கி நிற்கிறது. நாம் முன் சீட்டில் முட்டிக் கொள்ளாமல் தப்பித்தது பெரிய விஷயம்தான்!

மறுபடி ஒரு ஜெர்க்குடன் புறப்பாடு. சூடுபிடிக்கிறது வேகம். தலைதெறிக்க ஓடினால் அம்மாடி! அந்தரத்தில் தொங்கிக் கொண்டிருக்கும் தண்டவாளத்திலும் தப்பித்துப் போனால், ஐயையோ!

தண்டவாளம் முடிகிறது. அடுத்து பாதாளம் போலப் படுகுழி! பொத் என்று நிலை தடுமாறிக் கீழே விழுந்து விட்டதுபோலவும், விழுந்து, அடிபட்டு, உடம்பு முழுவதும் வலிப்பதுபோலவும் உணர்வு!

மறுமுனையில் மறுபடி அதே கிழவனார். "நான் சொன்னதைக் கேட்டுக் கொண்டு, சும்மாவே இருந்திருக்கலாம் என்று தோன்றுகிறதா? இட்ஸ் ஓகே! ஆல் ஃபார் ஃபன்! ஒரு ஜாலிப் பயணம்!'' ("யோவ்! கிழவனாரே! இது வாய்யா ஜாலிப்பயணம்?" என்று கத்தலாம் போல இருந்தது!)

**ப**டம் முடிந்து லைட் எரிந்தது. பாதிபேர், இடத்தை காலி செய்துவிட்டு, வியர்க்க வியர்க்க வெளியேறிவிட்டார்கள் - பயம்.

மறுபடியும் லைட் அணைய, அடுத்தப்படம் ஆரம்பமானது. இது விண்வெளிப் பயணம். ஆரம்பித்த விநாடியே நாமும் விண்வெளியில் பறப்பதுபோன்ற எண்ணம் வந்து விடுகிறது. அதிலும் இன்னொரு விண்கலத்தைத் துரத்துவது, வேறு ஒன்றுடன் மோதுவது, இன்னும் சில மோதல்களைக் கடைசி விநாடியில் சைடு வாங்கித் தவிர்ப்பது என்று எல்லா ஜாலங்களும் உண்டு. பதினைந்து நிமிடங்களுக்கு வேறு ஒரு கிரகத்துக்குப் போய் வந்த உணர்வு நம்மை முழுமையாக ஆக்கிரமித்துக் கொள்ளுகிறது!

இரண்டு படங்களும் முடிந்து வெளியில் வருகிறபோது, மனத்துக்குள் மிகப் பெரிய குழப்பம்.

படக்காட்சிகளுக்கு ஏற்ப, இருக்கையில் மூவ்மென்ட்களை டிசைன் செய்திருப்பார்களா? மூவ்மென்ட்களுக்கு ஏற்ப படம் எடுத்திருப்பார்களா?

சாலமன் பாப்பையா குழுவினரை சிங்கப்பூருக்கு அனுப்பி சினிமேனியாவைக் கண்டு களித்துவரச் சொல்லி, அதன் அடிப்படையில் ஒரு பட்டி மன்றமே நடத்தலாம்!

— எஸ். சந்திரமௌலி

# வெற்றிக்கு வழி

ஆம்! அதிர்ஷ்டமான பெயர் அமைத்தால் நீங்களும் கோடீஸ்வரர் ஆகலாம். பணம், பதவி, யாவும் கிட்டும். வெற்றிமேல் வெற்றிகளைக் குவிப்பீர்கள். இவ்வுலகில் அனுபவிக்கத்தக்க அனைத்து சுகபோகங்களையும் அனுபவிக்கலாம் என்று ஆணித்தரமாக அடித்துக் கூறுகிறார் கோவை மாவட்டம் அன்னூர் பு.புளியம்பட்டி அருகில் உள்ள கணுவக்கரையில் வசிக்கும் ஜோதிட விஞ்ஞானி கே.ஆர். பிரபாகர்ராஜ் அவர்கள். இவரது கருத்துக்கள் பின்வருமாறு:-



ஒரு மனிதனின் வெற்றிக்கும் தோல்விக்கும் மூலகாரணமாக இருப்பது பெயரும், கையெழுத்துமே ஆகும். ஒருவருடைய பெயரை முழுவதுமாக மாற்றத் தேவை இல்லை. சிறு திருத்தம் மட்டும் செய்தால் போதும். அதிர்ஷ்டப் பெயரால் மனித வாழ்வில் ஏற்படும் அனைத்துப் பிரச்சினைகளுக்கும் மிக நல்ல முறையில் தீர்வுகாண முடியும்.

அதிர்ஷ்டப் பெயர் அமைக்க நியூமராலஜி, நேமாலஜி, சைன், தொழில் வசியம், சிக்னேச்சராலஜி பெயர் வசியம், ஆர்க்கோலஜி, கிராபாலஜி, ப்யூசராலஜி போன்ற 9 வகையான காரணிகளையும் 12 வகையான இயக்கங்களையும் ஆதாரமாக வைத்து பெயர் சூட்டினால் பிரபலம் உண்டாகும். இது பூரணமாக விஞ்ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட சாஸ்திரமாகும். அதிர்ஷ்டப் பெயர் எண் சாஸ்திரப்படி முறையாகப் பெயரை மாற்றினால் உடனே அதிர்ஷ்டம் உண்டாகும்.

அதிர்ஷ்டப் பெயரை அமைத்துக் கொண்டால் அன்பான மனைவி (நல்ல மனைவி) அறிவுள்ள குழந்தைகள் வசதிமிக்க வீடு, வளமான தொழில், குறைவில்லாச் செல்வம் ஆரோக்கியமான உடல், இன்பகரமான வாழ்வு போன்ற அனைத்து அதிர்ஷ்டங்களையும் அள்ளித் தரும். தொழில் முடக்கம் வியாபார மந்தம் உத்தியோகத்தில் இடையூறு, கணவன் மனைவியர்க்கிடையே ஒற்றுமை இல்லாமை, செக்ஸ் கோளாறு, மனக்குழப்பம், போதைப் பொருளுக்கு அடிமை ஆகுதல், செய்வினை மாந்திரீக பாதிப்பு, தீய சக்தியால் பாதிப்பு திருமணத்தடை, குழந்தைபாக்கியம் இல்லாமை, முன்னேற்ற தடை, புகழ் இல்லாமை, மனநோய் போன்ற எண்ணற்ற வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கும் இக்கலையின் மூலம் நிரந்தரத் தீர்வு காண முடியும்.

பெயர் மாற்றத்தால் பெருஞ்செல்வர் ஆகலாம். பெயரை எந்த வயதிலும் அதிர்ஷ்டமாக மாற்றி வெற்றிகளைப் பெறலாம். முறையாகப் பெயர் அமைத்தால் முன்னேற்றம் உண்டாகும். தாங்களே பெயர் மாற்றி குழம்பி வாழ்வில் பெருந்துன்பத்தை அடைந்தவர்கள் ஏராளம். RAJINI KANT (ரஜினிகாந்த்) என்ற பெயரையோRAMBA (ரம்பா) என்ற பெயரையோ எல்லோருக்கும் வைக்க முடியாது. இது பொருந்தி வருபவர்களுக்கு மட்டுமே வைக்க வேண்டும். அப்போதுதான் அதிர்ஷ்டம் தரும்.



AJITH(அஜீத்) என்ற பெயரையும் SIMRAN(சிம்ரன்) என்ற பெயரையும் ஆய்வு செய்தால் இதில் வசியம் இருக்கும். யாருக்கு எந்தப் பெயர் பொருந்தும் என்று நன்கு ஆய்வு செய்து பெயர் அமைத்தால் அதிர்ஷ்டம் உண்டாகும். செய்கின்ற தொழில் எதுவாக இருந்தாலும் அத் தொழிலில் வசியம் இருக்க வேண்டும். அப்படி தொழில் வசியம் இருந்தால் தான் தொழிலில் பெரும் பணம் சம்பாதிக்க முடியும்.

ஒரு மனிதனுக்கு விடாமுயற்சி, அயராத உழைப்பு, தர்ம குணம், தன்னம்பிக்கை போன்ற குணங்கள் இருந்தும் வாழ்வில் வெற்றி பெற முடியவில்லையெனில் அதிர்ஷ்டம் இல்லை என்பது நன்கு தெரிகிறது. இல்லாத அதிர்ஷ்டத்தை பெற இக்கலை வழிகாட்டும்.

வெற்றிபெற துடிப்பவர்களுக்கு இது ஒரு சிறந்த வழிகாட்டியாகும். இதை பயன்படுத்துபவர்கள் அனைவரும் வெற்றியுடன் வாழலாம். என்னால் சவால்விட்டு நிரூபிக்க முடியும். இக்கலையின் மூலம் எம்மிடம் அதிர்ஷ்டப் பெயர் அமைத்தவர்கள் அனைவரும் இன்று வெற்றி பெற்றுக் கொண்டிருக்கிறார்கள். உடலின் காந்த சக்தி உயிர்ப்பு சக்திக்கு தக்கவாறு பெயரையும் கையெழுத்தையும் அமைத்தால் அபரிமிதமான அதிர்ஷ்டங்கள் கிட்டும்.

**உங்கள் வெற்றிக்கு வழிகாட்டும்**
**ஜோதிட மாமேதை கே.ஆர். பிரபாகர்ராஜ்**
**நியூமராலஜி-நேமாலஜி-சைன்-தொழில் வசியம்**



எம்.ஜி.ஆர்., சிவாஜி கணேசன், ரஜினி காந்த், பாக்கியராஜ், விஜய், சூர்யா, குஷ்பு, ரம்பா, சிம்ரன், ரோஜா, விஜயகாந்த் போன்ற சினிமா துறையினர்களும் பெயர் மாற்றத்திற்குப் பின்பு பிரபலமானவர்களே ஆகும். பெயரில் வசியம் கோபுராம்சம் இருக்க வேண்டும்.

அரசியலில் வெற்றி, சினிமாவில் புகழ், விளையாட்டில் சாதனை, தொழிலில் மேன்மைகிட்டும். அந்த கால இராஜ ராஜ சோழன், அக்பர், புத்தர், மகாவீரர், அசோகர், பொற்கை பாண்டியன், நெப்போலியன், பாரதியார், பாரதிதாசன், கண்ணதாசன், இந்திராகாந்தி, வீரமாமுனிவர், செவ்வேல் சேரன், ஆதிசங்கரர், காஞ்சி பெரியவர் போன்றோரும் பெயர் மாற்றத்திற்குப் பின்பு பிரபலமானவர்களே ஆகும்.

அதிர்ஷ்டப் பெயர் சாதாரண மனிதனையும் பெரிய சாதனையாளராக ஆக்கக் கூடியது. கையெழுத்தால் தலை எழுத்தை வெல்லலாம்.

ஆண்-பெண் எந்த தேதியில் பிறந்தவராக இருந்தாலும் அவர்கள் திருமணம் செய்த நாளின் கூட்டு எண், திருமணத் தேதி, மாதம், வருடம் மூன்றையும் கூட்டி வரும் எண் 2.4.5.7.8 வரும் நாளில் கண்டிப்பாக திருமணம் செய்யக் கூடாது. அப்படி செய்தால் சோதனைகளும், போராட்டங்களும் நடக்கும். இதிலிருந்து விடுபட மறு மாங்கல்ய பூஜை அதிர்ஷ்ட நாளில் செய்து கொண்டால் குடும்ப வாழ்க்கை சந்தோஷமுடனும், வெற்றியுடனும் இருக்கும்.

அதிர்ஷ்டப் பெயர், எண் சாஸ்திரம் எக்காலத்திலும் மாறாத சக்தி கொண்டது. பெயரையும் இடும் கையெழுத்தையும் வளமாக்கிக் கொண்டால் என்றென்றும் வெற்றிகள்தான். இக்கலையின் மூலம் நான் சவால்விட்டு நிரூபித்துக் காட்டிய அறிவியல் விஞ்ஞான சாஸ்திரமாகும்.

இவர் எழுதிய (உலகின் No:1 நியூமராலஜி நூல்)

**''அதிர்ஷ்ட பெயர் எண் சாஸ்திரம்''**

என்னும் புத்தகத்தை வாங்கிப் படியுங்கள். எல்லா ஊர் புத்தக கடைகளிலும் கிடைக்கும். (தபால் மூலம் பெற ரூ. 300/- M.O. செய்யுங்கள். வெளிநாட்டினர் ரூ.1000/- அனுப்புங்கள்.)

**அதிர்ஷ்ட விஞ்ஞான ஜோதிடர்**

**கே.ஆர். பிரபாகர்ராஜ் எம்.ஏ.,**
**நல்லாந்தோட்டம், கணுவக்கரை (அஞ்சல்).**
**புஞ்சைபுளியம்பட்டி (வழி) - 638 459.**
**கோவை மாவட்டம்.**
**போன்: (04254) 87258, (098422)-13566.**
**விடுமுறை: செவ்வாய், வியாழன்**

**நீங்களும் அதிர்ஷ்டம், புகழ், வெற்றி பெறலாம்.**

# பேச்சாளர் நடிக்கப் போகிறார்கள்!

• சமயச் சொற்பொழிவு ஸ்பெஷலிஸ்டான சுகி.சிவம் டி.வி. தொடரில் நடிக்கிறார். இவருக்கு நடிக்க அழைப்பு வந்தது சற்றும் எதிர்பாராத விஷயம். ஏவி.எம். தயாரிக்கும் 'வாழ்க்கை' தொடரில் ரொம்ப பாசிடிவ் ஆன, நல்ல ஆலோசனைகள் சொல்லும் ஒரு கேரக்டர். இதில் யாரை நடிக்க வைக்கலாம் என்ற பேச்சு வந்தபோது, ஏவி.எம். சரவணனின் சாய்ஸ் சுகி.சிவம். அவர் நடிக்க ஒப்புக் கொள்வாரா என்ற சந்தேகம் எழுந்தது. அவரிடமே கேட்டார்கள். அவர் சொன்ன பதில்: "நான் அந்தக் கேரக்டரில் நடித்தால் நன்றாக இருக்கும் என்று நீங்கள் கருதினால் நான் மறுக்காமல் செய்து கொடுக்கிறேன்." அப்படியே நடித்துவிட்டார்.

நடிப்பு அனுபவம் எப்படி? "மேடையில் மைக் முன்னே பேசுகிறேன். டி.வி. சீரியலில் கேமரா முன்னே பேசுகிறேன். பெரிதாக வித்தியாசம் இல்லை. மேடையில் நானே தொடர்ந்து பேசிக் கொண்டிருப்பேன். இங்கே எனக்குரிய வசனங்களை மட்டும் பேசுகிறேன்."

• டி.வி. சீரியல்களுக்குக் கதை, வசனம் எழுதிக் கொண்டிருக்கும் தேவிபாலா, விரைவில் ஒரு டி.வி. சீரியலை இயக்கப்போகிறார் என்று ஒரு தகவல். தேவிபாலாவிடமே கேட்டபோது, "என்னை இயக்கச் சொல்லி சில பெரிய தயாரிப்பாளர்கள் கேட்கிறார்கள் என்பது வாஸ்தவம்தான். ஆனால் நான் அதற்குத் தயாராக இல்லை.



• பாரதிராஜா

அதே சமயம் டைரக்ஷன் மீது எனக்கு ஈடுபாடு இருக்கிறது. எதிர்காலத்தில் டைரக்ட்



இந்த வாரம் குட்டித் தகவல்கள் இந்த வாரம் குட்டித் தகவல்கள் இந்த வாரம் குட்டி



• 'உங்களுக்காக'

செய்வது நிச்சயம்" என்கிறார்.

● சின்னத்திரையில் கலக்கிக் கொண்டிருப்பவர் ஸ்வர்ணமால்யா. அவர் நடிக்க ஒப்புக் கொண்ட முதல் டீ.வி. தொடர் 'மதுமிதா'. அவரது குடும்ப நண்பர் ஒருவர் தயாரிப்பாளர். அவர் கேட்டதன் பேரில் நடிக்க ஒப்புக் கொண்டார். 'என்னடா, மதுமிதா என்று ஒரு டீ.வி. தொடர் பார்த்ததாகவே நினைவில்லையே' என்கிறீர்களா? அந்தத் தொடர் தயாரிப்பு பாதியிலேயே நின்று போய் விட்டதால், இன்னமும் ஒளிபரப்பாகவே இல்லை!

● 'இந்தியத் தொலைக்காட்சிகளிலேயே முதல் முறையாக' தமிழ் சினிமாக்களை ஒளிபரப்பிவரும் சன் டீ.வி. வட்டாரம், பாரதிராஜாவின் தாஜ்மகால் படத்தை வாங்கி ஒளிபரப்பப் பெரும் முயற்சி செய்கிறது. ஆனால் பாரதிராஜா, பிடி கொடுக்கமாட்டேன் என்கிறார்.

● அபஸ்வரம் ராம்ஜியும், ஒய்.ஜி. மகேந்திரனும் இரண்டு டாக் ஷோக்களுக்குத் தயாராகி வருகிறார்கள். ஒன்றின் தலைப்பு: பேச்சுக் கச்சேரி. இன்னொன்றின் தலைப்பு : பேச்சால் அடிப்போம்.

● தினசரி தொடர்கள், வாராந்திரத் தொடர்கள் போல இல்லாமல், வித்தியாசமாக சனி, ஞாயிறு இரண்டு நாட்களில் மட்டும் வாராவாரம் ஒரு தொடர் வந்து கொண்டிருக்கிறது. பெயர் 'உங்களுக்காக'. என்.கே.விஷன் தயாரிப்பு. இணைபிரியாத மூன்று தோழிகளின் கதை. அவர்களுடைய பெற்றோர்களின் நட்பை மையமாக வைத்து, பின்னப்பட்ட சம்பவங்களின் அடிப்படையில், கிராபிக்ஸ் யுக்திகளுடன் மேல்மருவத்தூர் 'செவ்வாடைக்காரி' செய்யும் அற்புதங்களும் சினிமாவுக்குரிய எபெக்ட்டுடன் வந்திருக்கிறது என்கிறார் டைரக்டர் கிருஷ்ணசாமி.

● டீ.வி. தொடர்களில், தன் கேரக்டருக்குத் தானே டப்பிங் பேசுவதில் பெரும்பாலானவர்கள் ஆர்வம் காட்டுவதில்லை. காரணம், சம்பளம் நடிப்பதற்கு மட்டும் தான். டப்பிங்கிற்கு வந்து போனால் வெறும் கன்வேயன்ஸ் மட்டுமே தருவது தான் வழக்கம். இதனால் டப்பிங்கிற்கு வருகிற நேரத்தை நடிப்பதற்கு ஒதுக்கினால் வருமானம் கூடுமே என்று நினைக்கிறார்கள், நடிக, நடிகையர். டப்பிங் பேசுகிற கலைஞர்கள் பிழைத்துப் போகட்டும் என்கிற நல்ல மனசும் காரணம் என்று சொல்லிக் கொண்டாலும் தப்பில்லை.

— கௌதம்ராம்

குருப் பெயர்ச்சியைக்
கண்டு கலங்காதீர்கள்.
நீங்கள் எந்த
ராசிக்காரராக
இருந்தாலும்
குரு பகவானின் அருள்
உங்களுக்கு உண்டு.



இந்த இதழுடன்
பூஜிக்கப்பட்ட
குரு யந்திரம்
அன்பளிப்பு.

**இலவசம்**

**ஸ்கந்தகுரு கவசம்**

கையடக்கப் புத்தகம்

குமுதம் பக்தி ஸ்பெஷல்

ஜூன்
2000

தற்போது விற்பனையில்

● கி. இசக்கிமுத்துவேல், கல்லிடைக்குறிச்சி

? கணிப்பொறி குற்றத்திற்காக மூன்று ஆண்டு சிறைத் தண்டனை மற்றும் இரண்டு லட்ச ரூபாய் அபராதம் அளிக்க இந்திய அரசு எடுத்த முடிவு குறித்து...?

! கணிப்பொறிக் குற்றம் என்பது பலரகப்பட்டது. வைரஸ் பரப்புகிற குற்றம் எனில் இந்த தண்டனை போதும். கெட்டிக்காரத்தனமான வேறு பல உலகமகா மோசடிகள் கம்ப்யூட்டர் மூலம் நடக்கக் கூடும் என்பதை எண்ணிப்பார்த்து மத்திய, மாநில அரசுகள் முன் எச்சரிக்கையாக இருப்பது அவசியம்.

● எம்.அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி

? விசுவாசம், எஜமான விசுவாசம் - என்ன வித்தியாசம்?

## நீங்கள் கேட்டவை - தராசு



• தரமோ தரம்!

! வாலாட்டுவது விசுவாசம். எஜமான் வீட்டுக்கு வரும் அந்நியரை மிரட்டுவதும் கடிக்கப்போவதும் எஜமான விசுவாசம்!

● முத்து வெங்கிட ஆனந்தன், வந்தவாசி.

? அ.தி.மு.க.வில் தொடர்ந்து 'நாடகம்' நடந்துகொண்டிருக்கிறதே, அதன் தலைமை 'சசிகலா' வசம் வருமா...?

! அவர் கையில் எப்போதோ வந்துவிட்டது என்கிறார்கள். தெரியாத மாதிரி கேட்கிறீர்களே, மு.வெ. ஆனந்த்?

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம் ❑

? காங்கிரஸ் கட்சியை பலப்படுத்த தராசு ஒரு யோசனை சொல்லக் கூடாதா?

! அதைச் சொல்லத்தான் ஆரம்பித்தேன். ஆனால் பாருங்கள், எடிட்டோரியலில் நான்தான் சொல்வேன், நான்தான் சொல்வேன் என்று ஏகப்பட்ட கோஷ்டிச் சண்டை!

● கே.ஏ. காளிமுத்து, காரை.

? காங்கிரஸ் தனது தவறான கொள்கைகள் மூலம் தமது நாட்டைப் பாழடித்தது என்று தமிழ்நாடு பா.ஜ.க. தலைவர் கிருபாநிதி கூறியிருக்கிறாரே?

! 'இன்னும் எத்தனை நாட்களுக்குத்தான் இந்தப் பழைய பாட்டையே பாடுவீர்கள்? நீங்கள் என்னய்யா செய்கிறீர்கள், நாட்டை முன்னேற்ற?' என்று மக்கள் கேட்க ஆரம்பித்திருக்கிறார்கள்!



• திராவிட தாகம்

• குதிரையா கொடுத்தது?

● வெ. நீலா, மன்னை

? முன்னாள் முதல் அமைச்சர் செல்வி ஜெயலலிதா குதிரைப் பந்தயத்தின் மூலம் சம்பாதித்த பணம் என்கிறாரே?

! ஜெயலலிதா 'ஜாக்பாட்' அடித்ததை யாரும் தப்புச் சொல்ல முடியாது. ஆனால் அவருக்கு அப்போதே ஒரு சூதாட்ட மனப்பான்மை இருந்திருக்கிறது என்பதுதான் கவனிக்க வேண்டிய விஷயம். வேறு சில குறைபாடுகளுடன் இதுவும் சேர்ந்து கொள்கிறது.

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்.

? 'தி.மு.க., அ.தி.மு.க. மட்டும்தானா...? த.மா.கா. கூட திராவிடக் கட்சிதான்...!' என்று, மூப்பனார் கூறியிருக்கிறாரே...?

! தன்மானத்துக்கு டாட்டா காட்டியபோதே தேசியத்துக்கும் குட்பை சொல்லிவிட்டார்கள் போலும்.

● ப. ராம்முருகன், சென்னை.

? சாதிய அரசியல் இலக்கியத்தைப் பீடித்திருக்கிறது என்று வருந்துகிறாரே வண்ண

# 'குதிரை' கொடுத்த

நிலவன்?

! மிகவும் உண்மை. இன்று வெளிவரும் பல நாவல்களும் சிறுகதைகளும் எழுத்தாளர்கள் எழுதுவது போலவே இல்லை. யாரோ சாதி சங்கத் தலைவர்கள் எழுதுவது போலத்தான் உள்ளன. சாதி அரசியல் வியாதி என்றே வண்ணநிலவன் கூறியிருக்கலாம்.

● மு. இரவிச்சந்திரன். சேலம் - 9

*? 'சாராயம் வித்து என் மனைவி சம்பாதித்த சொத்து' என கோர்ட்டில் வாக்குமூலம் கொடுக்கிறாரே மாஜி அ.தி.மு.க. அமைச்சர் சத்தியமூர்த்தி?*



• ரிடயர்...



• ... ஆகலாம்?

! அ.தி.மு.க. அமைச்சரவையில் அமைச்சர்களின் தரம் எப்படியிருந்தது என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு.

● சுகந்தி நாகராஜன், தேவூர். ★

*? 'நாம் இருவர்.. நமக்கு இருவர்' காணாமல் போய் 'நாம் இருவர்... நமக்கு ஒருவர்' வந்தது.. இனி..?*

! 'நாமே இருவர், நமக்கெதற்கு இன்னொருவர்?'

● அ. சங்கரன், பெங்களூர்.

*? பிஜி. தீவில் இந்திய வம்சாவழிப் பிரதமர் மகேந்திர பால் மற்றும் சில அமைச்சர்கள் பிணைக் கைதிகளாக்கப்பட்டு விட்டார்களே?*

!அங்கு இந்திய வம்சாவழி பிரதமரின் ஆட்சி கவிழ்க்கப்பட்டது என்பதைவிட, ஜனநாயக ரீதியில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆட்சி கவிழ்க்கப்பட்டது என்பது தான் முக்கியம். இதற்கு பலமான எதிர்ப்பு பிஜி தீவிலேயே உருவாகியுள்ளது. மீண்டும் மக்களாட்சியே அங்கு மலரும் என்று நம்புவோம்.

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.

*? தனியாக விளையாட மகேஷ் பூபதி முடிவு செய்துள்ளாரே?*

! இணைந்திருந்து இருவருமாகச் சாதித்ததைத் தனித்திருந்து தனித்தனியே சாதிக்க முடியாது. இதைவிட இருவரும் ஒரு சேர ஒரே சமயத்தில் ரிடயர் ஆவதாக அறிவித்திருக்கலாம். கௌரவமாக இருந்திருக்கும். ஏதோ ஈகோ பிரச்னை விளையாட்டில் விளையாடியிருக்கிறது.

● என். பாலகிருஷ்ணன், மதுரை.

*? சென்னை வெயிலை எப்படி சமாளிக்கிறீர்கள்?*

! ஸ்வெட்டர், மப்ளர் போதாதென்று ஒரு சால்வையையும் போர்த்திக் கொண்டுதான்!

● ப. லஷ்மி நரசிம்மன், கோவை

*? வாழ்வில் முன்னேற உழைப்பு, முயற்சி தவிர வேறு என்ன தகுதி வேண்டும்?*



• ருசியில் வாழ்பவர்

! அதுவாக வரக் காத்திராமல், வாய்ப்பு எங்கே இருக்கிறது என்று தேடிக் கண்டு பிடித்துப் பயன்படுத்திக் கொள்ளும் ஆற்றல் வேண்டும். அண்மையில் காலமான கிருஷ்ணா ஸ்வீட்ஸ் 'சேர்மன்' என்.கே.மகாதேவன் அப்படிப்பட்ட ஒருவர். ஒன்றுமில்லாத நிலையிலிருந்து உயர்ந்து கிருஷ்ணா ஸ்வீட்ஸுக்கு அகில இந்திய ரீதியில் வாடிக்கையாளர்களை உருவாக்கி, சாதனை புரிந்தவர். தரம் அவரது தாரக மந்திரம். அவர் காலமானாலும் அவரது ஸ்பெஷல் ஃபார்முலா தயாரிப்பான 'மைசூர்பா'வின் ருசியில் அவர் என்றும் வாழ்ந்து கொண்டிருப்பார்.

❑ ரூ.50 பரிசு பெறுபவர் :
**க.நா. இராஜேஸ்வரன்,**
தெற்கு வீதி,
மொரட்டுப்பாளையம்
அஞ்சல்,
ஈரோடு - 638 752

★ ரூ.25 பரிசு பெறுபவர் :
**சுகந்தி நாகராஜன்**
1089, விஎஸ்.காலனி,
தேவூர் - 611 109
நாகை மாவட்டம்

# ரிசொத்தாமே?




**'சிவகாமியின் சபதம்'**

**கையடக்கப்பதிப்பின் மாபெரும்**

**வெற்றியினைத் தொடர்ந்து**

**அமரர் கல்கி அவர்களின்**

# அலைஓசை

**1064 பக்கங்கள் 4 பாகங்களில்**

**கையடக்கப் பதிப்பு**

**விலை ரூ.160/-**

**சலுகை விலை ரூ. 90/-**

மனிதர்களாகப் பிறப்பவர்கள் எல்லோருமே கொடூர வில்லன்களாகவோ அல்லது மிக நல்ல கதாநாயகர்களாகவோ உலகில் தோன்றுவதில்லை. அவரவர் குண இயல்புகளுக்கு ஏற்ப ஒவ்வொரு மனிதரிடமும் நற் குணங்கள், தீய குணங்கள் இரண்டும் உள்ளன. அவை வெளிப்படும் சந்தர்ப்பங்களுக்கு ஏற்ப வில்லனாக வோ கதாநாயனாகவோ தோற்றமளிக்கிறான்.

இதனை உணர்த்தும் வகையிலும், நாவல் உலகிற்கென ஒரு சம்பிரதாயப் போக்கைத் தகர்க்கும் விதத்திலும் வித்தியாசமான முறையில் அலை ஓசைக் கதையை அமைத்துள்ளார் கல்கி. 1934 ஜனவரியில் பீகார் பூகம்பம் என்ற ஆழ்ந்த அதிர்ச்சி அலையுடன் ஆரம்ப மாகும் இந்தக் கதை, இந்திய தேசிய இயக்கத்தின் வரலாற்றையே கதைக்குப் பின்னணியாக அமைத் திருப்பது தான் இந்நாவலின் சிறப்பாகும். அந்த இயக்கம் இந்நாவலின் கதாபாத்திரங்களை எப்படியெல்லாம் பாதித்தது என்பதைப் படிக்கும் போது அந்தக் காலத்திலேயே நாம் இருப்பது போன்ற உணர்வு வரும்.

கல்கிக்கே உரிய பாணியில், மர்மம், மலைப்பு, திடீர்த் திருப்பங்கள், எதிர்பாராத வியப்புகள், காதல் ஏற்படுத்தும் இன்ப துன்பங்கள், நவரசங்கள், உயிரோடு உலவும் மாந்தர்கள், இயற்கையான உரை யாடல்கள், நன்மை பயக்கும் தத்துவக் கருத்துக்கள் எல்லாம் சீராக, செம்மையாகப் பொருந்திய கதை.

இந்நாவலில் வரும் பாத்திரங்களான தாரிணியும் லலிதாவும் சீதாவும் சூரியாவும் சௌந்தரராகவனும் பட்டாபிராமனும் சேர்ந்து பேசிக் கொண்டு அவரவர் களுடைய ஆசாபாசங்களையும், உள்ளக் கிளர்ச்சிகளையும் வெளியிட்டு ''அலை ஓசை''யை எழுதியிருக்கிறார்கள் எனக்கல்கி அவர்களே தன் முகவுரையில் தெரிவிக்கிறார்.



★ தமது 30 ஆண்டுகால தமிழ்ப்பணியில் மிகச்சிறந்ததாக இந் நாவலினைக் கருதினார் கல்கி. (முன்னுரை பக்கம் 12)

★ மேலும் "நான் எழுதிய நூல்களுக்குள்ளே ஏதாவது ஒன்று, ஐம்பது அல்லது நூறு வருஷம் நிலைத்து நிற்கத் தகுதியுடை தென்றால், அது அலை ஓசை தான்" என்ற தமது நம்பிக்கை யையும் தெரிவித்துள்ளார் கல்கி அவர்கள். (முன்னுரை பக்கம் 8)

★ இந்தியாவின் தலைசிறந்த பரிசுகளில் ஒன்றான சாகித்திய அகாதமி பரிசைப் பெற்ற முதல் தமிழ் நூல் இது.

★ ரஷ்யமொழியில் மொழிபெயர்க்கப்பட்டு, நான்கே நாட்களில் ஐம்பதாயிரம் பிரதிகள் விற்பனையான நூல் இது.

★ மனிதநேயத்தைப் போதிக்கின்ற நாவல் இது.

★ மதக்கலவரத்தால் ஏற்படுகிற கொடுமைகளையும் விவரிக்கின்ற நாவல் இது.

தபாலில் பெற : கடிதம் எழுதுக. (M.O அனுப்ப வேண்டாம்) நான்கு பாகங் களையும் V.P.P யில் அனுப்புகிறோம். தபால் மற்றும் கட்டுச் செலவு சேர்த்து ரூ.115 மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூலைப் பெற்றுக் கொள்ளுங்கள். கடிதம் எழுத வேண்டிய முகவரி : வர்த்தமானன் பதிப்பகம், ஏ. ஆர். ஆர். வளாகம், 141, வடக்கு உஸ்மான் சாலை, தி. நகர், சென்னை- 17. (பனகல் பார்க் அருகில்).

நேரில் ரூ. 90 மட்டும் செலுத்தி 4 பாகங்களையும் உடனே பெற்றுக் கொள்ளலாம். நேரம் : காலை 9.30 - மாலை 6.30 வரை இடைவேளை யின்றி. ஞாயிறு விடுமுறை.

**சாகித்திய அகாதமி பரிசைப் பெற்ற முதல் தமிழ் நூலான இந்த " அலை ஓசை " தமிழகம் முழுவதும் பரவ வேண்டும் என்ற நோக்கத்தோடு தான் ரூ.160 மதிப்புள்ள இந்நூலினைச் சலுகை விலையாக ரூ.90 க்குத் தருகிறோம்.**



"மிஸ்டர்! உங்க பாட்டிய ஆபீஸுக்குக் கூட்டிட்டு வர வேணாம்னு சொன்னா, கேக்கவே மாட்டேங்கிறீங்களே...?"

"என்ன சார் செய்யறது? பாட்டி கதை சொன்னாத்தான் எனக்குத் தூக்கமே வருது...!"

— பொன். கமலா கதிரேசன்

"நீ ஆச்சர்யமான பிறவி கமலா..."

"அப்படீங்களா?"

"ஆமா... சாதாரணமா அழகு, அறிவு இருக்கிறவங்களுக்குத் தான் 'திமிர்' இருக்கும். ஆனா உன்கிட்டயும் அது இருக்கே...!"

— சி. நாச்சிமுத்து



# சிரி சிரி

"நேத்து ஆபீஸ்ல மானேஜருக்கும், எனக்கும் சண்டை...!"

"அப்புறம்...?"

"அப்புறமென்ன? ஒரு மணிநேரத் தூக்கம் கெட்டுடுச்சு...!"

— ஜூனியர் சக்தி









"டி.வியில் அந்த க்ரைம் தொடர் நேத்து பயங்கர சஸ்பென்ஸ்ல முடிஞ்சிருக்கு!"

"அப்படியா, கதை எப்படிப் போகுது?"

"யாருக்குத் தெரியும்? டைட்டில் ஓடினதும் ஆஃப் ஆன கரண்ட் ஸீரியல் முடிஞ்சுதான் திரும்பி வந்துச்சு!"

— உ. ராஜாஜி





"ஏன் டாக்டர், என் வயிற்றில் ஆபரேஷன் தழும்புக்கு மேலே சின்னதா 'உ'ன்னு கத்தியால கிழிச்ச தழும்பு தெரியுதே, ஏன்?"

"இதுதான் எனக்கு முதல் ஆபரேஷன். அதனால பிள்ளையார் சுழி போட்டேன்!"

— சீர்காழி கே.ஆர்.வி



"என்னோட ஆளு, சுத்த மண்டுவா இருக்கார்."

"என்னாச்சு?"

"ஓடிப் போயிடலாமான்னு கேட்டா, இல்ல... ஆட்டோல போயிடலாம்கிறார்!"

— அய்.எஸ்.பி. கேது

"காயத்ரி...! உன் அப்பாவுக்கு நம் காதலைத் தெரிவித்து விட்டாயா...?"

"இல்லை அன்பே...!"

"ஏன்...?"

"சொன்னால் உன்னையே கல்யாணம் செய்துக்கச் சொல்லி வற்புறுத்துவார்...!"

— ஜூனியர் சக்தி



## மே 31 முதல் ஜூன் 6 வரை

# நடக்குமென்பார், நடக்கும்!



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

வார ஆரம்பம் சாதாரணமாத்தான் இருக்கும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் அவசியம். குடும்பத்துல சலசலப்பு, கருத்து வேறுபாடுகள் இருக்கும். மனத்தில் ஏதாவது குழப்பம் இருக்கலாம். வார பின்பகுதியில் நிலைமை மாறும். முக்கியமான சில காரியங்கள் நிறைவேறும். வியாபாரிகளுக்கு ஆதாயம் உண்டு. பத்திரிகை, கணிதம், எழுத்து, விஞ்ஞானத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு நல்ல வளர்ச்சி இருக்கு. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குத் திருப்பம் உண்டு.



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

கலைத் துறையைச் சேர்ந்தவங்க வளர்ச்சியடைவாங்க. பொருளாதாரப் பிரச்னை இருக்காது. சுப காரியங்களுக்கான செலவு கூடும். நண்பர்கள், சொந்தக்காரங்க உதவுவாங்க. வேற மொழி மதக்காரர்களால சந்தோஷம் உண்டாகும். பார்ட்டி, ஜாலின்னு சுத்தறதுக்கு வாய்ப்பு இருக்கு. எதிலும் பதற்றப்படாதீங்க, நிதானம் அவசியம். புனிதமான காரியங்கள்ல பங்கு பெற வாரப் பின் பகுதியில் சான்ஸ் இருக்கு.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

எதிர்ப்புகள் கட்டுக்குள் அடங்கி இருக்கும். நல்லவங்க உங்களுக்கு உதவ முன் வருவாங்க. நல்ல காரியங்கள்ல ஈடுபட சந்தர்ப்பம் வரும். பொருளாதாரம் திருப்திகரமா இருக்கும். பண நடமாட்டம் அதிகரிக்கும். கல்யாணமாகாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு வரும். பார்ட்னர்ஷிப்புல தொழில் பண்றவங்களுக்கு நல்ல லாபம் வரும். வெளியூர், வெளிநாட்டுத் தொடர்புகளால சுமாரான பலன் கிடைக்கும். ஆன்மீகவாதிகள், மதபோதகரா இருக்கறவங்களுக்கு மரியாதை கூடும். கலைத்துறையில் உள்ளவங்க சுபிட்சம் அடைவாங்க.



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

உங்க திறமை, அறிவு வெளிப்படற நேரம் இது. எந்தக் காரியத்தையும் திறமையா செஞ்சு முடிப்பீங்க. குடும்பத்துல மகிழ்ச்சி, குதூகலம் ஏற்படும். பண நடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. பல இடங்கள்ல இருந்து பொருள்கள் வரும். வேலை இல்லாதவங்களுக்கு வேலை வாய்ப்பு தேடி வரும். வன இலாகா, காடு, மலை தொடர்பான இடங்களில் வேலை பார்க்கிறவங்களுக்கு ஊதிய உயர்வு இருக்கு. வீடு, மனை, நிலம், வாகனம் இந்த விவகாரங்கள்ல லாபம் இருக்கு.



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

உங்களோட சுயபலம் அதிகரிக்கும். எடுத்தக் காரியங்கள் வெற்றி பெறும். எதிரிகள் ஓடி ஒளிவாங்க. நண்பர்கள், உறவினர்கள் தொடர்பு நன்மை தரும். வாகன சம்பந்தமான விவகாரங்கள்ல நல்ல பலன் கிடைக்கும். மத்தவங்க உங்களைப் புகழ்ற மாதிரி உங்க நடவடிக்கை இருக்கும். மதிப்பு, மரியாதை அதிகமாகும். வீட்ல சுப காரியங்கள் நடக்க சந்தர்ப்பம் கூடி வரும். குடும்பத்துல மகிழ்ச்சி நிலவும்.



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

இதுவரை இருந்த மந்தமான நிலை போய் சந்தோஷ வாரம் ஆரம்பிச்சிருக்கு. எதிர்ப்புகள் குறையும். சின்ன சின்னப் பிரச்னைகள் ஏற்பட்டாலும் சமாளிச்சுடுவீங்க. புதிய முயற்சிகள் இப்போது வேண்டாம். ரியல் எஸ்டேட் விவகாரங்கள்ல எச்சரிக்கையா இருப்பது அவசியம். ஸ்பெகுலேஷன்லயும் எச்சரிக்கை தேவை. யார்ட்டயும் வெளிப்படையா பேசி பழகாதீங்க.. கலைத் துறையில உள்ளவங்களுக்கு வரவேற்பும் பாராட்டும் கிடைக்கும். வெளிநாட்டிலேர்ந்து உற்சாகமான செய்தி வரும்.



**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

உங்கள் அறிவாற்றல், சாமர்த்தியம் கூடும். புனிதமான கார்யங்கள்ல ஈடுபடுவீங்க. மாணவர்களோட திறமை வெளிப்படும். கணிதம், எழுத்து, பத்திரிகைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றமான

வாரம். பொருளாதாரப் பிரச்னை இருக்காது. வெளியூர்லயிருந்து நல்ல தகவல் வந்து சேரும். எதிலயும் பதற்றம், அலைச்சல் கூடாது. பேச்சில் இனிமையைத் தடவிக்குங்க. பயணத்தைத் தவிர்த்திடறது நல்லது.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

உங்க திறமையும் உழைப்பும் வீண் போகாது. எதிர்ப்புகள் ஒரு கட்டுக்குள் இருக்கும். மனம் பக்திமார்க்கத்துல இலயிக்கும். நிர்வாகத் துறையில இருக்கறவங்களுக்கு முன்னேற்றம் இருக்கு. துணிச்சலான காரியங்கள்ல ஈடுபட சந்தர்ப்பம் வரும். எப்போதோ நினைச்ச காரியம் இப்ப நடக்கும். வீடு, மனை, விவகாரங்கள்ல அனுகூலமான போக்கு நிலவும். கலைத்துறையில் இருக்கறவங்க விழிப்போடு இருப்பது அவசியம். கொடுக்கல் வாங்கல்ல எச்சரிக்கை தேவை.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

உங்க திட்டங்கள் தடையில்லாம நடக்கும். மதிப்பும் மரியாதையும் கூடும். எதிரிகள் ஓடிப் போவாங்க. குடும்பத்துல சுபகாரியங்கள் நடக்கும். வீட்ல விசேஷம் நடக்கும். கலைத் துறையைச் சேர்ந்தவங்க நிலை உயரப் பெறுவாங்க. கம்ப்யூட்டர், எலக்ட்ரானிக்ஸ், விஞ்ஞானத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு இது நல்ல நேரம். தாங்கள் நினைச்சது நடக்கும். அரசியல்வாதிகளுக்கு நல்ல வரவேற்பு கிடைக்கும். பொருளாதாரம் சாதாரணமாத்தான் இருக்கும். சிக்கனம் அவசியம். பயணத்துல கவனமா இருப்பது நல்லது.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

எதிலயும் விழிப்போடு செயல்படுங்க. வார முன் பகுதியில சின்னச் சின்னப் பிரச்னை இருக்கும். இதெல்லாம் வாரப் பின்பகுதியில சரியாயிடும். எதிலயும் அவசரம் காட்டாதீங்க. பொறுமை அவசியம். வீண் அலைச்சலைத் தவிர்த்துடுங்க. எந்தவொரு காரியத்தையும் ஒருமுறைக்குப் பலமுறை யோசிச்சு செய்யறது நல்லது. புதியவங்ககிட்ட பழகும்போது எச்சரிக்கை தேவை. புதிய முயற்சிகள்ல இப்ப முதலீடு செய்ய வேண்டாம். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு வளர்ச்சிப் பாதை தென்படும். வாரப் பின்பகுதியில பண வரவு கூடும்.

# அக்னிசர்மா பக்கம்



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உங்க திட்டத்தை எப்பாடுபட்டாவது நிறைவேற்றிடுவீங்க. தொழிலாளர்கள், விவசாயிகளுக்கெல்லாம் நல்ல வாய்ப்புகள் வரும். எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்களுக்குப் பாராட்டும் புகழும் கூடும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு உற்சாகமான சூழ்நிலை உருவாகும். மாணவர்கள் திறமை வீண் போகாது. வெளிநாட்டுத் தொடர்பால நல்ல செய்தி வரும். எதிர்ப்புகள் குறையும். பண விஷயத்துல கவனமா இருங்க. செலவு அதிகமாகும். எதிலயும் இப்ப முதலீடு செய்ய வேண்டாம்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

எடுத்த காரியம் வெற்றி பெறும். புதிய முயற்சிகள் கூடி வரும். பொருளாதார நிலை சீராகவே இருக்கும்.



**மிதுன ராசிக்காரரான கலைஞருக்கு எதிர்ப்பில்லாம எந்தக் காரியமும் ஜோரா நடக்கற வாரம் இது.**

நிர்வாகத் திறமை வெளிப்படும். காவல், சட்டம், இராணுவத் துறைகளைச் சேர்ந்தவங்க பாராட்டைப் பெறுவாங்க. வீடு, மனை, நிலம் இந்த வகையில ஆதாயம் அதிகரிக்கும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு வெற்றி வாய்ப்புகள் ஜாஸ்தி.



# ஸ்கூட்டர்

ஸ்கூட்டர் என்று ஏன் அதற்குப் பெயர் வைத்தார்களோ தெரியாது. வெறும் அரையடி அகலத் தகரம். ரொம்பப் பழசான சிவப்பு நிறத்தில் இருக்கும். ஒரு காலை அதன் மேல் வைத்து மறு காலை உந்தித் தள்ள, விர்ரென்று புறப்பட்டுவிடும். கவனமாய் மறுகாலைத் தூக்கி நிலை நிறுத்திக் கொள்ளாவிட்டால் குடை சாய்ந்து விழ வேண்டியதுதான். மும்பை ஃபிளாட்டின் குறுகலான பால்கனியில் ராஜு நிறைய பெயர்த்துக் கொண்டிருக்கிறான். முகவாய், மூக்கு, ஒரு முறை மேல் வரிசையின் இரண்டரை பற்கள்! பால் பற்களானதால் வேறு முளைத்துவிட்டன.

இப்போது வாங்கியிருப்பதும் ஸ்கூட்டர்தான். ஐம்பதாயிரம் கடனை தவணை தவறாது கட்டாவிட்டால் பல் பெயர்ந்துவிடாது. எனினும் அதன் வரிசை அமைப்பைக் காட்டி வாய்தா கேட்பதெல்லாம் அவனால் ஆகாத காரியம். ஏழு வயதில் முகவாயில் தையல் போட்டபோதுகூட அழாதவன் அல்லவா.

அவன் வைராக்யத்தால் மட்டுமே வாழ்க்கை எளிமையாகிவிடவில்லை. ஐந்து வயதில் ஒரு பெண் குழந்தையும் மூன்றில் ஆணும் இருக்கும் வீட்டில் வகை வகையான அழுகை ஒலிகளுக்குக் குறைவேது? இரண்டு அங்குல நீளத்துக்குப் பற்பசை பிதுக்கித் தரவில்லை என்று குமாரும் கணக்கு நோட்டில் அட்டை கிழிந்துபோனதற்காக ஆர்த்தியும் அழுதால் உள்ளுக்குள் சிரித்துக் கொண்டே சமாதானப்படுத்திவிட முடிகிறது.

சமாளிக்க முடியாதது, 28 வயதுப் பெண்ணின் கண்ணீர் - அதுவும் அவள் வாழ்க்கைப்பட்டவளாக இருந்துவிடும்போது.

ஆசைகள், தேவைகளைக் கடந்து முந்திக்கொண்டு ஓடி ஏமாற்றச் சுவரில் மோதி நிற்கும்போது வலிக்கிறது.

"எத்தனை வருஷமா சொல்றேன்.. ஒரு ஸ்கூட்டர் வாங்குங்கன்னு...?"

கல்யாணமான ஆறு மாதத்திலேயே இந்த வசனம் கேட்க ஆரம்பித்துவிட்டதாகத் தோன்ற, ஒரு கட்டத்தில் சலித்துப் போனான். சக்திக்கு மீறிய கடனில் ஸ்கூட்டர்.

ஆனந்த விநாயகர் முன் நிறுத்தி, கும்பிட்டு வேண்டினான். தவணைகளைத் தவறாமல் செலுத்த அருள் கோரும் பிரத்யேக சுலோகம் ஏதேனும் இருக்கிறதா...?

வாசலில் நிறுத்தி, இறங்காமல் ஹாரன் அடித்தபோது கொஞ்சம் மிதப்பாகவே இருந்தது.

வனிதா வெளியே வந்து பார்த்து "ஹை!" என்றாள். ஆர்த்தி ஓடி வந்து கஷ்டப்பட்டுப் பின்னிருக்கையில் ஏறிக் கொண்டாள்.

"அம்மா! தம்பியைக் கொண்டாந்து முன்னால நிக்க வையி... நீ என் பின்னால ஏறிக்கோ... சின்ன ரவுண்ட் போலாம்பா ப்ளீஸ்!.."

குமார் தூக்கம் கலையாமல் நடந்து வந்து ஆவலாய் முன்னால் ஏறி நின்றுகொண்டது.

பிசுக்குக் கையால் அவன் தொப்பையை வளைத்தபடி ஆர்த்தி கலகலவென்று சிரித்தாள். காலிடுக்கில் குமார் தலையைப் பின் பக்கமாய் அண்ணாந்து "அப்பா ஸூக்கர்!" என்றான்.

ஸ்கூட்டரில் ஏறுமுன் மனைவி கேட்டாள். "ஒரு லிட்டர் பெட்ரோல் என்ன விலைங்க..?"



மலர்







# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்


72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர், (வழி) தாம்பரம், சென்னை-63.

**Tel & FAX: 2376129**

**E.mail: sspeetam@md3.vsnl.net.in, sspeetam@hotmail.com**

**Please visit our website at: www.intamm.com/sspeetam**


## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர் ! வணக்கம், தங்களுக்கு அனைத்து நலன்களும் உண்டாக பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் பிரார்த்திக்கின்றோம்.

தங்களின் அன்பினாலும், ஆதரவினாலும், குருகுலத்தில் 150 மாணவ, மாணவியர்கள் நல்ல முறையில் படித்து வருகின்றார்கள். குருகுல மாணவர்களின் முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு ஒரு உயர்நிலைப்பள்ளியும் மற்றும் கம்ப்யூட்டர் பயிற்சி மையமும் துவக்கப்பட்டுள்ளது.

* குருகுல மாணவர்களோடு உங்களுடைய மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ளுங்கள்.

* குருகுல மாணவர்களின், உணவு மற்றும் இதர செலவுகளுக்கு, கல்வி கற்பதற்கு கம்ப்யூட்டர் பயிற்சி பெறுவதற்கு, கட்டிடம் கட்டுவதற்கு, மற்றும் நிரந்திர வைப்பு திட்டத்திற்கு தங்களின் மேலான நன்கொடைகளை அளிக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (150 பேருக்கு) | ரூ | 1000/- |
| • மதிய உணவு | ரூ | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ | 1,000/- |
| • பிஸ்கட், மற்றும் பால் வழங்குதல் | ரூ | 750/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு கம்ப்யூட்டர் பயிற்சி (ஓராண்டிற்கு) | ரூ | 3,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ | 9,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ | 2,00,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

தங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque/ DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்

# அம்மாடி! 1000 கோடி!



• நாயுடு



• ஜஸ்வந்த்

இந்தியா முழுவதிலும் உள்ள அனைத்துப் பல்கலைக் கழகங்களைத் தகவல் பரிமாற்றத்துக்காக கம்ப்யூட்டர் மூலம் இணைக்க ஒரு திட்டம் உருவாக்கப்பட்டுள்ளது. அதன்பின், சீக்கிரமே நாடெங்கும் உள்ள நிதி நிறுவனங்கள், பள்ளிகள், மருத்துவமனைகள் என அனைத்தையும் இணைக்கப் போகிறார்கள். இந்தத் திட்டத்துக்கு, 'சாங்கிய வாஹினி' என்று பெயர். இத்திட்டம் நிறைவேற்றப்பட்டால், தகவல் பரிமாற்றம் மிக விரைவாகவும், மிகக் குறைந்த செலவிலும் நடக்கும். (அதாவது, தேசிய அளவில் ஒரு தனி இன்டர்நெட் மாதிரி).

இந்தத் திட்டத்தைச் செயல்படுத்தப் போவது யார்?

மத்திய அரசின் டெலிகாம் சர்வீசஸ் துறையும், அமெரிக்காவில் உள்ள 'ஐயூ நெட்' என்ற நிறுவனமும்தான்! இந்திய அரசு தன் பங்குக்குப் பண முதலீடு செய்ய, அமெரிக்க நிறுவனம், இந்த வசதியை ஏற்படுத்துவதற்கு அவசியமான கருவிகளைக் கொண்டு வரும்.

அமெரிக்காவில் வசிக்கும் ராஜ் ரெட்டி, வி.எஸ். அருணாசலம் என்ற இரு இந்தியர்கள் தான், இந்தக் கூட்டு முயற்சி உருவாகக் காரண கர்த்தாக்கள். ராஜ் ரெட்டி, அமெரிக்க அதிபர் கிளின்டனின் தகவல் தொழில்நுட்ப ஆலோசனைக் கமிட்டியின் உறுப்பினர். அருணாசலம், இந்திய பாதுகாப்பு அமைச்சகத்தில் விஞ்ஞான ஆலோசகராக இருந்து விட்டு, அமெரிக்கா சென்றவர். ராஜ் ரெட்டி, ஆந்திர முதல்வர் சந்திரபாபு நாயுடுவுக்கு நெருக்கமானவர். அவர் மூலமே இந்த 'டீல்' நடந்திருப்பதாகக் கூறப்படுகிறது.

இந்த சாங்கிய வாஹினி திட்டம், வெற்றி பெறுமா என்பது பற்றி யாருக்குமே சந்தேகம் இல்லை. ஆனால், அதை 'ஐயூ.நெட்' நிறுவனத்தைக் கொண்டு செயல்படுத்த முடிவு எடுத்திருப்பதுதான் பெரும் சர்ச்சையைக் கிளப்பியுள்ளது.

'ஐயூ.நெட்' ஒரு சாதாரண கம்பெனி. அக்கம்பெனி ரிஜிஸ்தர் ஆனதே '99 ஜனவரியில்தான்.

அது மட்டுமின்றி, ஒப்பந்தத்தில் அமெரிக்கக் கம்பெனி சார்பில் கையெழுத்திட்டவர் அதில் பணிபுரிகிறவரே இல்லை!

இந்தத் திட்டத்துக்கு, மத்திய அரசின் பச்சைக் கொடி கிடைத்ததும் அசாதாரணமானது தான்! இதுபோன்ற திட்டங்களுக்கு அனுமதி வழங்கும் அதிகாரம் படைத்த குழுவின் தலைவர் மத்திய அமைச்சர் ஜஸ்வந்த்சிங். ஆனால், அந்தக் குழுவின் 'ஒரு குறிப்பிட்ட' கூட்டம் தலைவர் ஜஸ்வந்த் சிங் வராத சூழ்நிலையில், இணைத் தலைவரான சந்திரபாபு நாயுடு தலைமையில் நடந்து முடிந்தது!



• பிரமோத்மகாஜன்

அக்கூட்டத்தில் ராஜ் ரெட்டி, அருணாசலம் இருவரும் நேரடியாகப் பங்கேற்காமல், வீடியோ கான்பிரன்ஸ் முறையில், அமெரிக்காவில் இருந்தபடியே தங்கள் கருத்துக்களைத் தெரிவித்தார்கள். இத்திட்டத்துக்கு அனுமதி வழங்கப்பட்டவிதம் குறித்து மத்திய தகவல் தொழில்நுட்பத் துறை அமைச்சர் பிரமோத்மகாஜன் கூட அதிருப்தி தெரிவித்திருக்கிறார்!

அமெரிக்காவில், தகவல் தொழில்நுட்பத்தில் முன்னோடிகளான நிறுவனங்கள் நிறைய இருக்கிற போது, முன் அனுபவமில்லாத சிறிய கம்பெனியால் திட்டத்தைத் திறம்படச் செயல்படுத்த முடியுமா என்று அலசி, ஆராயாமலேயே ஒப்பந்தம் போட்டிருப்பதுதான் இன்றைய சர்ச்சை!

எல்லாம் சரி; திட்டத்தின் மொத்த மதிப்பீடு எவ்வளவு தெரியுமா?

ஆயிரம் கோடி ரூபாய்!

இத் திட்டம் பற்றிப் பலருக்கும் இன்னமும் முழுமையாகத் தெரியவில்லை. அடுத்த பாராளுமன்றக் கூட்டத் தொடரில் எதிர்க் கட்சிகள் இதை எடுத்துக் கொண்டு, அரசுக்கு நெருக்கடி கொடுக்கக்கூடும் என்கிறது புது தில்லி வட்டாரம்.

— மானஸா

அருண் சரண்யா

19

வங்கிக்குள் நுழைந்த போது பிரசாத்தைப் பார்க்காமல் இருக்க வேண்டும் என்று தோன்றியது. கூடவே பார்க்க வேண்டுமென்றும். பழைய அவமானத்தைப் பொருட்படுத்தாமல் தனக்கு மீண்டும் அவன் உதவ முன்வந்தது சுவாதிக்கு சிறிது நெகிழ்ச்சியை ஏற்படுத்தியது. காசோலையைக் கொடுத்துப் பணம் பெற்றுக் கொண்டாள்.

"உங்க தம்பி எப்படியிருக்கான்?" என்று கேட்டார், ஓர் ஊழியர். சென்றமுறை வந்திருந்த போது இவரைப் பார்த்திருந்தாள் முன்னால் தவறாகக் குற்றம்சாட்டினாள் என்பது நினைவுக்கு வந்தது. "பரவாயில்லே" என்றாள் புன்னகையுடன்.

பிரசாத்துக்கு அன்று கவுண்டரில் ட்யூட்டி இல்லை. "வேறு ஏதாவது உதவி வேணுமா?" என்று அவன் உண்மையான கரிசனத்தோடு கேட்டபோது கொஞ்சம் பரிதாபம் ஏற்பட்டது. "உங்களால் முடிந்தால் ஒரு ஐந்து நிமிஷம் என்னோடு வெளியே வர முடியுமா?" என்றாள்.

முகத்தில் பளிச் பரவ, "ஐம்பது நிமிடங்கள் கூட இருக்கத் தயார்" என்றபடி கிளம்பினான். யாரோ, "நம்ம பிரசாத்துக்கு மச்சம்டா" என்று திருவாய் மலர்ந்தருளியது காதில் விழுந்தது.

வெளியே வந்தவுடன், "கேட்டீங்க இல்லே? எனக்கேது மச்சம்? முதல் கா த ல தோல்வி தே வ

தால்
ஜாதியாச்சே
நான்.”

சுவாதிக்கு சங்கடமாக இருந்தது. “அப்படியெல்லாம் சொல்லாதீங்க” என்றாள்.

“அப்படின்னா எனக்கு வாய்ப்பு இருக்குன்னு நினைக்கறீங்களா?”

நல்லவேளையாக அவன் மேலும் பேசுவதற்குள் அருகில் ஒரு உணவகம் தென்பட அதற்குள் நுழைந்தார்கள்.

“இங்கே ஃப்ரூட் சாலட் நல்லாயிருக்கும். சாப்பிடலாமா?” என்றான். சம்மதித்தாள்.

ஐஸ்க்ரீம் மீது வைக்கப்பட்டிருந்த பழத்தை பிரசாத் ஸ்பூனில் எடுக்க, அது நழுவிக் கீழே விழுந்தது. “பார்த்தீங்களா, கைக்கு எட்டியது வாய்க்கெட்டவில்லை” என்றான். சிலேடை

இனியும் தள்ளிப் போட வேண்டாமென்று முடிவெடுத்தாள். “பிரசாத் உங்களுக்கு என் அம்மாவைப் பற்றித் தெரியும். ஆனால் என்னைப் பற்றி, நான் எந்தப் பின்னணியில் வளர்க்கப்பட்டேன் என்பது பற்றித் தெரிந்திருக்க வாய்ப்பில்லை. ஏன், எங்கம்மாவுக்கே தெரியாத பகுதி அது” என்று தொடங்கியவள் எந்த முக்கிய விஷயத்தையும் விடாமல் தன் கடந்த காலத்தைக் கூறினாள். டேராடூனிலிருந்து காசிக்குப் பயணம் செய்து, அவள் சென்னைக்கு வந்து சேர்ந்தபோது பிரசாத்தின் கண்கள் கலங்கியிருந்தன.

“உங்க காதலை நான் ஏத்துக்காததைத் தயவுசெய்து அவமானமாக நினைக்காதீங்க. எனக்கு நட்பு தேவை. உதவி தேவை. ஒரு நல்ல நண்பனாகவும் உங்களால் இருக்க முடியும்ங்கிற நம்பிக்கை எனக்கு உண்டு. என் எதிர்பார்ப்பை நிறைவேற்றுவீங்களா பிரசாத்?” என்று அவள் கேட்க, “நிச்சயமாக சுவாதி” என்றான். பிறகு, “நேரே வீட்டுக்குத்தானே?” என்றான்.

“இல்லை. கோமளா ஆன்ட்டியின் கடைக்குப் போயிட்டுப் போகலாம்னு இருக்கேன்.”

“அப்படியா? நான் வேணா என் மோட்டார் பைக்கிலே டிராப் செய்யட்டுமா?”

அவன் கண்களில் தெரிந்த வியப்பைப் புரிந்து கொண்டு, “ரெண்டு மாசத்துக்கு முன்னே புக் பண்ணது. நேற்றுதான் டெலிவரி எடுத்தேன்” என்றான்.

மீண்டும் வங்கி வாசலை அடைந்தபோது அங்கு நிறுத்தப்பட்டிருந்த தன் புத்தம் புதிய மோட்டார் பைக்கை பெருமிதத்துடன் சுட்டிக்காட்டினான்.

“கோமளா ஆன்ட்டியைப் பார்க்க நான் பஸ்ஸிலேயே போயிடுவேன். ஆனா நீங்க எனக்கு வேறொரு உதவி செய்யணும்.”

“சொல்லு” என்றான் ஒருவித எதிர்பார்ப்புடன்.

“மோட்டார் பைக் ஓட்ட எனக்குக் கத்துக் கொடுக்கணும்.”

“சுவாதி, இது மொபெட் இல்லே. மோட்டார் பைக்.”

“தெரியும் பிரசாத். நீங்க பேசிக்கிட்டிருப்பது சாதாரணப் பெண்கிட்டே இல்லே. நாளைய பைலட்கிட்டம் என்பது நினைவிருக்கட்டும். விமானம் ஓட்டப் போகிறேன், மோட்டார் பைக் ஓட்டக் கூடாதா?”

“ஓகே. நாளைக்கே பயிற்சியை ஆரம்பிச்சிடலாம்.”

கடைக்குள் நுழைந்தவுடனேயே கோமளா அதீத ஆனந்தத்துடன், “வெல்கம் பைலட் சுவாதி” என்று வரவேற்றாள். பிறகு அங்கு தயாராக வைக்கப்பட்டிருந்த ஒரு பூங்கொத்தை அவளிடம் நீட்டி, “உன் லட்சியம் அற்புதமாக் நிறைவேற வாழ்த்துக்கள்” என்றாள். கைதட்டினாள்.

நிறைவாக இருந்தது. கூடவே கொஞ்சம் கூச்சமாகவும். “இன்னிக்குத்தான் பைலட் பயிற்சிக்கான விண்ணப்பத்தை வாங்கி வந்திருக்கேன். இப்போதைக்கு உங்களைத்தான் என் அம்மாவாக நினைக்கிறேன். ஆசீர்வதிங்க” என்றபடி அவள் காலில் விழுந்தாள்.

கண்களில் தொடங்கி தெறித்த கண்ணீரை அடக்க முயலாமல், அவளை மனசார ஆசீர்வதித்தாள் கோமளா.

“அக்கா” என்று ஓடிவந்து கட்டிக் கொண்டான் முன்னா. முதல் கேள்வியாக அவன் தன் சம்பந்தப்பட்ட எதையும் கேட்காமல், “உங்கம்மா வந்துட்டாங்களா?” என்று கேட்டது நெகிழ்ச்சியாக இருந்தது. “நாளைக்கு வந்துடுவாங்க” என்றாள்.

“முன்னாதான் அவன் வகுப்பிலே லீடர் தெரியுமா?” என்று விடுதிப் பொறுப்பாளர் கூற, ரொம்பப் பெருமையுடன் தலையசைத்தான்.

தான் வாங்கி வந்த ஆரஞ்சுப் பழங்களை சுவாதி அவனிடம் கொடுக்க, அவன் அதை மற்ற சிறுவர்களுடன் பகிர்ந்து கொள்வதற்காக உள்ளே ஓடினான். “இதை நாங்க சாப்பிட்டு முடிச்சிட்டு வரோம். அதுக்குள்ளே போயிடாதீங்க” என்ற கூக்குரலுடன்.

“முன்னா எப்படி நடந்துக்கிறான்?” என்ற சுவாதியின் கேள்விக்கு, “அவனாலே இங்கே யாருக்கும் எந்தப் பிரச்னையும் இல்லே” என்று புரிந்து கொண்டு பதிலளித்தார் காப்பாளர்.

“டாக்டர்கள் என்ன சொல்றாங்க? முன்னா எப்போ முழுக்க குணமடைவானாம்?” சுவாதிக்குத் தெரிந்துதான் இருந்தது. இதுபோன்று மனநோயால் பாதிக்கப்பட்டவர்கள் இவ்வளவு சீக்கிரமாகவெல்லாம் முழுக்க குணமடைய முடியாது என்பதும். எனவே தனது இந்தக் கேள்விகள் அபத்தமானவை என்பதும். என்றாலும் அவள் தவிப்பு கேள்விகளாக வெளிப்பட்டுவிட்டது.

“எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் குணமாயிடும்னு நம்புவோம்மா. டாக்டர்களும் நம்பிக்கை கொடுத்திருக்காங்க” என்றார் கனிவாக.

கிளம்பும் போது எந்தவித வருத்தமும் இல்லாமல் முன்னா சந்தோஷமாக கையசைத்து விடைகொடுத்தது ஒருவிதத்தில் நிம்மதியாகவும், மறுவிதத்தில் சங்கடமாகவும் இருந்தது.

மேல் நாடுகளில், சிறு நகரங்களுக் கிடையிலான விமானப் போக்குவரத்து சர்வ சாதாரணம். இது, இங்கே நடை முறைக்கு ஒத்துவருமா என்று பார்க்க சமீபத்தில் ஜெட்ஏர்வேஸ் பஞ்சபாண்டவர் மாதிரி ஐந்து சின்ன விமானங்களை வாங்கி, ஒன்றை சென்னை-ஹைதராபாத்-சென்னை மார்க்கத்தில் அறிமுகப்படுத்தியிருக் கிறது. விமானம்தான் சின்னதே தவிர, வசதிகள் எல்லாம் போயிங் ரேஞ்சுக்கு இருக்கிறது. ஒன்றரை மணிக்குள்ளாக, சென்னையையும் ஹைதராபாதையும்





இணைத்துவிடுகிறது! ‘அடடா, அதற்குள் ஊர் வந்து விட்டதா!’ என்று ஏங்க வைக்கிற அளவுக்கு விமானத்தினுள்ளே அப்படியொரு கனிவான சேவை!

- எஸ்.வி.என்.

"இதுதான் த்ராட்டிங். இந்தக் கீயைத் திருப்பினால் என்ஜின் ஸ்டார்ட் ஆகும்'' என்றபடி பாலபாடத்தைத் தொடங்கினான் பிரசாத்.

"அதெல்லாம் இருக்கட்டும், ப்ரேக் எங்கே, இதுவா அதுவா?'' என்று அவள் இரண்டு ஹாண்டில்களையும் பார்த்தபோது பிரசாத்துக்கு சிரிப்பு வந்தது. "மோட்டார் பைக்குக்கு கால் ப்ரேக்தான்'' என்று சிரித்து விட்டு, "வண்டியை உதைத்து ஸ்டார்ட் செய்யணும். அதெல்லாம் கஷ்டமான வேலை. உன் சக்தியை இப்போ அதிலே செலவழிக்க வேணாம். நான் ஸ்டார்ட் செய்து தரேன்'' என்று பிரசாத் கூற, சுவாதி மறுத்தாள்.

"ஊஹூம்!நானே அதையும் கற்றுக் கொள்கிறேன்'' என்று புன்னகைத்தபடி சுவாதி லாவகத்துடன், அதே சமயம் உறுதியாக ஸ்டார்ட்டரை உதைக்க, ஒரே உதையில் என்ஜின் தயார் நிலையை அடைந்தது.

பிரசாத் இதை எதிர்பார்க்கவில்லை என்பது அவன் முகத்திலேயே பளிச்சென்று தெரிந்தது. "அடுத்தது என்ன செய்யணும்னா'' என்றவாறு பிரசாத் வண்டியை நெருங்கவும், வண்டியைப் பார்த்தபடியே அவள் ஒதுங்க முயற்சிக்கவும் இருவரும் மோதிக் கொண்டார்கள்.

இரண்டாவது மோதல்! பிரசாத்தின் முகத்தில் பரவசம் தோன்ற, திட்டமிட்டே அந்த பிரம்மாஸ்திரத்தை எய்தாள் சுவாதி.

"அன்னைக்கு ஒரு லெட்டரை போஸ்ட் மேனிடமிருந்து வாங்கிப் படித்து விட்டு கிழிச்சுப் போட்டீங்களே, அது யாருகிட்டேயிருந்து வந்த கடிதம்?'' என்று கேட்டாள்.

(தொடர்ந்து பறக்கும்)






# பஸ் ஏறி ரத்தம் கொடுங்கள்!

சென்னை எழும்பூர் மாண்டியத் ரோடில், சௌகரியமான இடம் பார்த்து, அந்த பஸ்ஸை நிறுத்துகிறார்கள். அக்கம் பக்கத்தில் உள்ள அலுவலகங்களுக்குத் தகவல் சொல்லப்படுகிறது. அடுத்த அரைமணி நேரத்தில், நாலைந்து பேர் வந்து தம் பெயரைக் கொடுக்கிறார்கள். பிளட் பிரஷர், எடை போன்ற ஃபார்மாலிடிகளை முடித்துவிட்டு, அந்த பஸ் ஸின் உள்ளே. இன்னொரு பகுதிக்குப் போகிறார்கள். ரத்ததானம் செய்கிறார்கள். சுமார் ஒரு மணி நேரம் கழித்து பஸ் அங்கிருந்து புறப்பட்டு வேறு இடம் நோக்கிச் செல்கிறது.

இந்த மொபைல் 'ரத்தவங்கி' சேவையைத் தொடங்கியிருப்பவர்கள், ஜீவன் ரத்தவங்கிக்காரர்கள்.

''ரத்ததானம் செய்வது என்பது ஒரு ஐந்து நிமிட வேலைதான். அதற்குமுன்பு உள்ள பார்மாலிடிகள் மற்றும், ரத்தம் கொடுத்தபின் சற்று நேரம் இளைப்பாறுவது, எல்லாம் சேர்த்தால்கூட அரை மணிக்கு மேல் ஆகாது. ஆனால், ரத்ததானம் செய்ய விரும்புகிறவர்கள், தம் இடத்திலிருந்து வந்து போவது இருக்கிறதே, அது தான் நேரம்பிடிக்கிற சமாசாரமாக உள்ளது. ரத்த தானம் செய்பவர்களிடம் நடத்தப்பட்ட சர்வேக்களில், போதிய அளவில் ரத்ததானம் செய்யப் பலரும் முன்வராததற்கு இதுவும் ஒரு முக்கியக் காரணம் என்று தெரியவந்தது. அதுதான், இப்படியொரு சேவையை நடைமுறைப் படுத்திவிட்டோம்'' என்கிறார் இதன் இயக்குனர் டாக்டர் சீனிவாசன்.

-கௌதம்

# பாலும் படமும்

வரலொட்டி ரெங்கசாமி

"**சா**ர், இந்தப் படத்தைப் பாருங்க. அந்தச் சின்னப் பொண்ணோட சட்டைல இருக்கற கிழிசல் அவளோட வறுமையைக் காவியமாச் சொல்லுது. அந்தப் பொண்ணு பாக்கற பார்வை நம்பளை எப்படித் தாக்குது பாருங்க!"

"இந்தப் படத்தைப் பாருங்க! எருமை மாட்டு மேல உட்கார்ந்திருக்கற பையன் முகத்துல இருக்கற சந்தோஷத்தை அப்படியே தத்ரூபமா படம் பிடிச்சிருக்காங்க."

"அதெல்லாம் இருக்கட்டும் சார். என்னைக் கேட்டா இந்தப் படத்துக்குத்தான் ஃபர்ஸ்ட் ப்ரைஸ் கொடுக்கணும்னு சொல்லுவேன்."

இப்போது எல்லோரும் அந்தக் கருப்பு வெள்ளைப் படத்தைக் கூர்ந்து பார்த்தார்கள். ஒரு புகைப்படப் போட்டியின் நீதிபதிகள் குழுதான் இப்படி ஒவ்வொரு படமாக அலசி ஆராய்ந்து கொண்டிருந்தது.

"இந்தப் படத்துல நடிகர் ஜீவா சேரிக் குழந்தைகளுக்குப் பால் வழங்கும் காட்சி ரொம்ப நேச்சுரலா வந்திருக்கு. அவர் முகத்தில் கூட கொஞ்சம் பால் துளிகள் இருக்கு. அதைக் கூடத் துல்லியமா படம் பிடிச்சிருக்காரு இந்த போட்டோ கிராஃபர். அவர் கூட இருக்கற பெண்கள் முகத்தப் பாருங்க. அப்படியே மனிதநேயத்துல ஜொலிக்குது!"

இப்படியாக எல்லா நீதிபதிகளும் அந்தப் புகைப்படத்துக்கே முதல் பரிசான பத்தாயிரம் ரூபாயைத் தருவது என்று ஏகமனதாகத் தீர்ப்பளித்தார்கள்.

பாவம்! அவர்களுக்கு அந்தப் புகைப் படத்தின் பின்னணி சரியாகத் தெரியாது. அவர்கள் படத்தை வைத்து ஊகித்ததற்கும், உண்மையாகவே நடந்ததற்கும் தான் எவ்வளவு வேறுபாடு!

"**எ**ல்லாரும் இங்க வாங்க. ஒரு குட் நியூஸ். நான் சொல்றதை உங்களால நம்பவே முடியாது."

'என்ன?' 'என்ன?' என்ற சப்தமான கேள்வியுடன் அந்த மாதர் சங்கத் தலைவி ரம்யா சுப்ரமணியத்தைச் சூழ்ந்துகொண்டார்கள் அதன்



அங்கத்தினர்கள். அவர்கள் எல்லோரும் உயர் மத்தியதர, மேல்தட்டு வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள்.

இந்த மாதத்திற்கான ப்ரோகிராமை பெரிய அளவில் நடத்தி, பத்திரிகைகளில் சங்கத்தின் பெயர் வர வேண்டும் என்பதற்காகக் கடந்த சில நாட்களாக மும்முரமாக ஆலோசித்துக் கொண்டிருந்தார்கள். எல்லோரும் ஆர்வத்தோடு மொய்த்தார்கள். ஒரு தலைவிக்கே உரிய கம்பீரமான குரலில் சொல்ல ஆரம்பித்தாள் ரம்யா.

"இங்க யாருக்கெல்லாம் சினி ஆக்டர் ஜீவாவைப் பிடிக்கும்?"

'ஹோ'



என்ற இரைச்சலுடன் அங்கிருந்த எல்லோரும் ஒருசேரக் கையைத் தூக்கினார்கள்.

"இப்போ ஜீவாவோட இன்கம்டாக்ஸ் விவகாரங்களை யார் பாக்கறாங்க தெரியுமா? சாட்சாத் என் ஹஸ்பெண்ட்தான். ஜீவாவை நம்ம சங்கம் நடத்தற ஒரு ப்ரோகிராமுக்குக் கூப்பிடணும்னு சொன்னேன். அவரும் சரின்னுட்டாரு. உடனே ஜீவாவோட பிரசிடெண்ட்ட போன்ல பேசினாரு. நம்ம சங்கத்துல ஏதாவது சமுதாய சேவை ப்ராஜெக்ட் பண்ற மாதிரி இருந்ததுன்னா ஜீவா நிச்சயமா அந்தக் கூட்டத்துல கலந்துப்பாராம்."

"ரம்யா, அப்ப சட்டுபுட்டுன்னு ஒரு ப்ராஜெக்ட் தயார் பண்ணி இந்த மாசக் கூட்டத்துக்கே ஜீவாவைக் கூப்ட்ருவோம்."

"ஏண்டிம்மா, செக்ரட்டரி. நீ சமூக சேவை ப்ராஜக்டப் பாத்துக்கறியா? எங்களுக்குத் தலைக்கு மேல வேலை இருக்கு. ப்ரோக்ராம் போடணும். இன்விடேஷன் அடிக்கணும். பத்திரிகைக்காரங்களுக்கு சொல்லணும். பந்தோபஸ்து ஏற்பாடு பாத்துக்கணும். டீவி கவரேஜ், விடியோ கவரேஜ், போட்டோ.... அப்பா எவ்வளவு வேலை இருக்கு தெரியுமா?"

"தர்ம காரியம். சமூக சேவையை மட்டும் நான் தனியா கஷ்டப்பட்டுக்கிட்டு செய்யணும். நீங்க ஜாலியா ஜீவாவோட ஈஷிக்கிட்டு நின்னு போட்டோக்கு போஸ் கொடுப்பீங்க. என்னால முடியாதும்மா. எனக்கு ஜீவாவை வரவேற்கற வேலை. அவருக்குப் பொன்னாடை போத்தற வேலை, நினைவுப் பரிசு கொடுக்கற வேலை இப்படி ஏதாவது கொடுங்க. இந்த சமூக சேவைக்கு ஏற்பாடு பண்ற வேலையை யாராவது ஜூனியர் மெம்பருக்குக் கொடுக்கறதுதான் சரி."

"இவ சொல்றதும் சரிதான், ரம்யா. நம்ப கிளப்ல போன மாசம் சேந்தாளே, அந்த பாங்க் மானேஜர் சம்சாரம்; பேரு கூட கீதாவோ, சீதாவோ சொன்னா. அவளைப் பார்த்துக்கச் சொல்லிருவோம். நம்ப சீனியர்ஸ் மிச்ச வேலையெல்லாம் பாத்துப் போம்."

மறுநாள் காலை சங்கத் தலைவி ரம்யா இருப்பதிலேயே ஜூனியர் மெம்பரான பாங்க் மானேஜர் சம்சாரத்திற்குப் போன் செய்தாள். நடக்கப் போகும் நிகழ்ச்சியைப் பற்றிச் சொல்லி அதற்குத் தகுந்தாற்போல் ஒரு சமூக சேவையைத் தேர்ந்தெடுத்து அதற்கான ஏற்பாடுகளைச் செய்யும் சிறிய பொறுப்பை அவளிடம் ஒப்படைத்தாள். எதற்குமே அலட்டிக் கொள்ளாத சுபாவமுடைய அவளோ, தன் அந்தரங்கக் காரியதரிசியான தன் வீட்டு வேலைக்காரியிடம் விஷயத்தைச் சொல்லி விவாதிக்க, அந்த வேலைக்காரி குடியிருக்கும் குப்பத்தில் இருக்கும் பத்து வயதுக்குட்பட்ட சுமார் நூறு, நூற்றைம்பது குழந்தைகளுக்கு இலவசமாக ஒரு டம்ளர் பால் வழங்குவது தற்போதைக்கு செய்யக்கூடிய மிகச் சிறந்த சமூக சேவை என்று கடைசியில் முடிவு செய்யப்பட்டது. முதலில் சங்கத் தலைவி ரம்யாவுக்கு இந்த ப்ராஜக்ட் பிடிக்கவில்லை. ஆனால் செகரட்டரிதான் தன் வாதத் திறமையால் தலைவி ரம்யாவை இந்த ஏற்பாடுக்கு சம்மதிக்க வைத்தாள்.

விழாவுக்கான இன்விடேஷன் தடபுடலாக வந்திருந்தது. அதற்கான முழுச் செலவையும் ரம்யாவே ஏற்றுக் கொண்டாள்.

கடைசியாக அந்தத் திருநாள் வந்தது. அந்த மிக முக்கியமான சமுதாய சேவையில் ஈடுபட்டிருந்த லேடீஸ் கிளப் உறுப்பினர்கள் யாருமே முந்தைய இரவு சரியாகத் தூங்கவில்லை. மாலை நான்கு மணிக்கு நடக்க வேண்டிய விழாவுக்காக எல்லோருமே காலையிலேயே தங்கள் அபிமான ப்யூட்டி பார்லரில் தஞ்சம் புகுந்து விட்டார்கள்.

மூன்று மணி முதல் ஒவ்வொருவராக விழாவுக்கு வர ஆரம்பித்தார்கள். பால் பெறப் போகும் குழந்தைகள் எல்லாரும்

---

**இ**லங்கை விவகாரத்தைப் பற்றி, பிரதமர் அலுவலகத்திலிருந்து பண்ருட்டி ராமச்சந்திரனைத் தொடர்பு கொண்டு சில விஷயங்களைக் கேட்டுத் தெளிவு படுத்திக் கொண்டிருக்கிறார்கள். மனைவியுடன் விரைவில் ஸ்டேட்ஸுக்குப் பறக்க இருக்கும் பண்ருட்டியார் வரும் தேர்தலில் பண்ருட்டி தொகுதியில் மீண்டும் போட்டியிட முடிவு செய்திருக்கிறார்.



— கௌசி

வெயிலில் கியூவில் நிறுத்தப்பட்டார்கள். ஜீவா வரப் போகும் செய்தி அறிந்து அங்கு ஒரு பெரிய ரசிகர் கும்பல் வேறு கூடி விட்டது.

ஜீவா அந்த இடத்துக்கு வந்து சேர்ந்த போது மாலை ஐந்தரை மணி. ஜீவாவுக்கு இருமுறை பூச்செண்டு கொடுக்கப்பட்டது. மூன்று முறை பொன்னாடை போர்த்தப்பட்டது. நான்கு முறை மாலை அணிவிக்கப்பட்டது – சங்கத்தின் எல்லா உறுப்பினர்களும் தங்கள் பங்குக்கு ஏதாவது செய்ய வேண்டும் என்று விரும்பியதால்.

வரவேற்புரை, தலைமையுரை போன்ற சம்பிரதாயங்கள் எல்லாம் முடிந்து ஜீவா முதல் குழந்தைக்குப் பால் தருவதற்காக மேடையில் இருந்து இறங்கிய போது மணி ஆறரைக்கு மேல் ஆகி விட்டது.

பால் தம்ளரை வாங்கிக் கொண்ட ஜீவா வரிசையில் முதலில் நின்று கொண்டிருந்த சிறுவனைப் பார்த்தார். கிழிந்து போய் அரைஞாண் கயிறை பெல்டாகப் பிரயோகித்து இழுத்துக் கட்டப்பட்ட அரைக்கால் சட்டையோடும், மேலே வெற்றுடம்போடும், துறுதுறுவென்று இருந்தான் அந்தப் பையன். நின்று கொண்டிருந்த ஜீவா சட்டென்று தரையில் குத்துக்காலிட்டு அமர்ந்து தம்ளரில் இருந்த பாலை அந்தப் பையனுக்கு ஊட்ட, புகைப்படக்காரர்களும் டீவி ஆட்களும் கீழே உட்கார்ந்து அந்தக் காட்சியை அப்படியே படம்பிடிக்க முயன்று கொண்டிருந்தார்கள். மாதர் சங்க உறுப்பினர்கள் காமிராக் கோணத்தை சட்டென்று புரிந்துகொண்டார்கள். அவர்களும் ஜீவாவைப் போலவே தரையில் குத்துக்காலிட்டு உட்கார்ந்தார்கள்.

நடிகர் ஊட்டிய முதல் மடக்குப் பாலை, முழுங்க யத்தனித்தான் அந்தத் துறுதுறு சிறுவன். அடுத்த நொடி அவன் முகம் என்னவோ போல் ஆகியது. அந்தச் சமயம் பார்த்து ஜீவா பாசத்துடன் அவன் முகத்தில் தடவிக் கொடுக்க, சங்கத் தலைவியும் செக்ரட்டரியும் பையனின் முகத்துக்குப் பக்கத்தில் தங்கள் முகங்களைக் கொண்டு வர, திருதிருவென்று விழித்துக் கொண்டிருந்த சிறுவன் தன் வாயில் இருந்த மொத்தப் பாலையும் காறித் துப்பினான். ஜீவா, ரம்யா, செக்ரட்டரியின் முகங்கள் பால் வடியும் முகங்களாயின. அந்தக் கண் கொள்ளாக் காட்சியை வீடியோ காமிராக்கள் ஆர்வத்தோடு விழுங்கிக்

**'புதிய தமிழகம்'** கிருஷ்ணசாமி, தினசரிப் பத்திரிகை ஒன்றைத் துவக்குகிறார். சன் செய்தித் தொலைக்காட்சியிலிருந்து ஒருவர் வெளி வந்து ஆசிரியராகப் பொறுப்பேற்க இருக்கிறார். மதுரையிலிருந்து வெளிவரும், இந்த தினசரி.

— கெளசி



கொண்டிருந்தன.

காலையிலேயே அந்த வேலைக்காரியால் பொறுப்பாக வாங்கி வைக்கப்பட்ட பால் ஃபிரிட்ஜில் வைக்காததால் புளித்துப் போய் அதனால் ஏற்பட்ட குமட்டலில்தான் அந்தப் பையன் பாலைத் துப்பினான் என்பது ரொம்ப நேரத்துக்குப் பிறகுதான் தெரிந்தது. அந்தச் சிறுவனின் செய்கையைப் பார்த்து ஒருவாறாக விஷயத்தை ஊகித்த வரிசையில் இருந்த மற்றக் குழந்தைகள் நாலாபக்கமும் சிதறி ஓட, அவர்களை மாதர் சங்க உறுப்பினர்கள் விடாமல் துரத்த, நடிகர் ஜீவா, தலைவி ரம்யா, செக்ரட்டரி ஆகியோர் தங்கள் முகத்தில் வழிந்த பாலைக் கூடத் துடைக்கத் தோன்றாமல் நடப்பதை வெறித்துப் பார்த்தபடி நின்று கொண்டிருந்தார்கள்.

அந்தக் காட்சியை அப்படியே படம் பிடித்தார் ஒரு தினசரி பத்திரிகையைச் சேர்ந்த புகைப்படக்காரர். அந்தப் படத்தின் பிரிண்டைப் பார்த்த அந்தப் பத்திரிகை ஆசிரியர், பால் வழங்கும் விழாவில் நடந்த கேலிக்கூத்தைக் கேட்டறிந்தார்.

"வேண்டாம்பா! இந்தப் படத்தைப் போட்டா, ஜீவா சண்டைக்கு வந்துருவாரு. அவருடைய ஃபைல் போட்டோ எதுனாச்சும் போட்டுச் சின்னதா நியூஸ் போட்ரு போதும்."

அந்தப் புகைப்படக்காரர் இது நடந்து ஒரு வருடம் கழித்து அறிவிக்கப்பட்ட புகைப்படப் போட்டிக்கு அந்தப் படத்தை அனுப்பி வைத்தார்.

'மனிதநேயத்தை சிறந்த வகையில் பிரதிபலிக்கும் படம்' என்ற வர்ணனையுடன் முதல் பரிசான பத்தாயிரம் ரூபாய் அந்தப் படத்துக்கு வழங்கப்பட்டது.




# சம்மர் ஜம்மாய்!

நூற்று எட்டு டிகிரி வெயிலுக்குப் போட்டியாகக் குளுகுளு நிலவு. அயோடின் கலந்த தென்றலை வீசி அடித்தபடி அலைகள். ஒரே ஒரு ராணுவ ஜீப்பையும், அதில் வந்திருந்த ஐந்து பேரையும் தவிர யாருமற்ற தனிமையில் சோழிங்கநல்லூர் கடற்கரை. அந்தக் குழுவிற்குத் தலைவர் முன்னாள் ராணுவமேஜர் ராய். எஞ்சிய நான்கு பேரும் பத்து முதல் இருபத்தைந்து வயதிற்குட்பட்ட இரண்டு இளைஞர்கள், இளைஞிகள். நான்கு பேர் முகத்திலும், பயம் கலந்த பரவசம் படபடக்கிறது.

ஆயிரம் அடி நீளமுள்ள கயிறின் ஒரு முனை ஜீப்பின் பின்புறத்தில் கட்டப்பட்டிருக்க, மற்றொரு முனையைப் பிடித்துக் கொண்டு, மேஜர் நடக்கிறார். அவரைத் தொடர்ந்து நால்வரும் செல்கின்றனர். கயிறின் நீளம் முடிகிறது. நிற்கின்றனர். மேஜர் தனது தோளில் கட்டியிருந்த பையைப் பிரிக்கிறார். வானவில் வண்ணங்களில் ஒரு பாராசூட். இருபதே வயதான ஸ்வேதாவின் தோள், இடுப்புப் பகுதிகளோடு பாராசூட் இணைத்துக் கட்டப்படுகிறது.

மேஜர் ஜீப் நோக்கிச் செல்கிறார். மற்ற மூவரும் ஸ்வேதாவுக்குக் கைகுலுக்குகின்றனர். உற்சாகக் குரலுடன் மேஜரை நோக்கிக் கையசைக்கிறார்கள். ஜீப் நகர்கிறது. பாராசூட் மேலே எழுகிறது.

பாராசூட் பறவையாகப் பறக்கத் தொடங்க, ஸ்வேதாவும் மேலே மேலே எழுகிறார். மற்ற மூவரும் பின் தொடர்ந்து ஓடுகின்றனர்.

அலைகளை ஒட்டியே ஜீப் வேகம் பிடிக்கிறது.

இப்போது நானூறு அடி உயரத்தில் ஸ்வேதா!

ஐந்து கிலோமீட்டர் தூரம் பயணம் தொடர்கிறது.

ஜீப்வேகம் மெல்லக் குறைகிறது. பாராசூட் மெள்ள மெள்ள இறங்குகிறது.

ஜீப் நின்றதும், பாராசூட் தரை நோக்கித் தவழ்ந்து வருகிறது. கால்களை லாகவமாக ஊன்றி ஸ்வேதா தரையிறங்குகிறார்.

மேஜர் ஓடி வந்து, கைகொடுத்து வெல்டன் என்கிறார்!


* மலையேற்றம்

இது ஏதோ சினிமாக்காட்சியல்ல! கோடையில் ஒரு நாள் சாகசப் பயிற்சிகள் வழங்கும் 'அட்வென்சர் ஸோன்' என்ற அமைப்பை நடத்திவரும் மேஜர் ராயின் பேரா–செயிலிங் பயிற்சிதான் இது!

எந்த வயதினரும் கலந்து கொண்டு இந்த பாராசூட் அனுபவத்தைப் பெறலாம்! ஒரு முறை பறக்க நூற்று

முப்பத்தைந்து ரூபாய் கட்டணம் என்கிறார் இந்த ஓய்வு பெற்ற மேஜர்.

இந்திய ராணுவத்தின் சாகஸப் பயிற்சிப் பிரிவில் அதிகாரியாகப் பணியாற்றிய இவர், "என் அனுபவமும் பயிற்சியும் இளைய தலைமுறைக்குப் பயன்படவேண்டும். பணம் இரண்டாம் பட்சம்தான்!" என்கிறார்.

'பேராசெயிலிங்' தவிர, அடையாறு அருகே மலை யேறும் பயிற்சி, திருவான்மியூர் 'வாட்டர் பேலஸ்' நீச்சல் குளத்தில் ஸ்கூபா டைவிங் பயிற்சி, என தன்னம்பிக்கை வளர்க்கும் பயிற்சி களையும், தவளை ஜம்ப், குரங்கு டைவிங் என வயிறு வலிக்க சிரிப்பை வரவழைக்கும் பயிற்சிகளையும் வருடம் முழுக்க நடத்துகிறார்! எல்லாவற்றிலும் மிலிட்டரி தரம். தொழில் விவகாரங்களில் தலையைப் பிய்த்துக் கொண்டு அல்லல்படும் கார்பரேட் எக்ஸிக்யூட்டிவ்களுக்கு 'பூட் கேம்ப்'ம் நடத்துகிறார், மேஜர் ராய்!


பாராசூட் பயிற்சி

அடுத்து நுங்கம்பாக்கத்தில் இருபத்தியோரு நாள் நீச்சல் பயிற்சி வழங்குகிறார்கள், வி.வி. இண்டர்நேஷனல் ஸ்கூல் ஆப் ஸ்விம்மிங். பயிற்சிக் கட்டணம் ரூபாய் ஆயிரத்து இருநூறு. அடை யாறு அருகேயுள்ள கிளாசிக் கிளப் நிறுவனம் சம்மர் ஸ்பெஷல் கார்னிவெல் நடத்துகிறார்கள். அயோடின் கலந்த நீச்சல் குளத்தில் ஸ்விம்மிங், யோகா மெடிட்டேஷன், கராத்தே, இசை, நடனம், மேஜிக் ஷோ, மிமிக்ரி, கிரிகெட், உணவு, வாகனவசதி என கொஞ்சம் காஸ்ட்லியான ஜமாய் இது.

புதிதாகத் திறக்கப்பட்டுள்ள ஸ்பென்சர் பிளாசா இரண்டில் பதினைந்து நாள் பில்லியட்ஸ் பயிற்சி. கட்டணம் ரூபாய் நானூற்றி ஐம்பது. இருபத் தைந்தே ரூபாய் கட்டணத்தில் ஒரு மாத வலு தூக்கும் பயிற்சியை நடத்துகிறது சென்னை மாநகராட்சி. பெரம்பூர்– மாதவரம் நெடுஞ் சாலையில் உள்ள மாநகராட்சி உடற் பயிற்சிக் கூடத்தில் இந்தப் பயிற்சி!


ஸ்கூபா டைவிங்

சம்மரை உருட்டித்தள்ள இவை போதாது?

— லியோ

மும்பை சண்முகானந்தா ஃபைன் ஆர்ட்ஸ் தெரிந்திருக்கும். இவர்கள் 'சண்முகா' என்றொரு காலாண்டு (கலை–கலாசார) இதழ் நடத்திவருவது தெரியுமா?

'சண்முகா' பத்திரிகைக்கு 25 வயது பூர்த்தியானதை ஒரு விழாவாகக் கொண்டாடி சிறப்பு மலர் ஒன்றும் வெளியிடப்பட்டது. சமீபத்தில். விமர்சகர் சுப்புடு, மகாராஷ்டிர அரசின் கலாசாரத்துறைச் செயலர் கோவிந்த சொரூப் ஆகியோர் கலந்து கொண்டு பேசிய இவ்விழாவில் தெரிய வந்த ஒரு ஆச்சர்யமான தகவல்–

மற்றெந்த சிறு பத்திரிகைகள், சபா இதழ்களில் இல்லாத ஒரு வழக்கத்தை 'சண்முகா' இத்தனை ஆண்டுகளாகக் கடைபிடித்து வருகிறது. அது–எழுதுபவர்களுக்கு ஒழுங்காகச் சன்மானம் தருவது!

– லக்ஷ்மி கண்ணன்



உலகக் கோப்பை வெற்றிக்குப் பிறகு, லார்ட்ஸ் பால் கனியில் கபிலும் மொஹிந்தரும், பாட்டிலை உடைத்து ஷாம்ப் பெய்னை ஆறாக ஓடவிட்ட காட்சி இன்னும் நம் கண் களிலிருந்து அகலவில்லை. அதற்குள் இப்படி உள்ளத்தை உடைத்து, மடைதிறந்த வெள்ளமாய்க் கண்களிலிருந்து நீரை வரவழைத்துவிட்டாரே கபில்?

கரன் தாப்பரின் 'Hard talk', கபிலின் 'Soft talk' ஆக மாறிய கதையைத்தான் சொல்கிறோம். அவர் சிந்தியது முதலைக் கண்ணீரா, அல்லது அசல் வெந்நீரா என்பது பற்றிய சர்ச்சை ஒருபுறம் காரசாரமாக நடக்க, கம்பீரமாக எதிர்த்துப் போராடாமல் இப்படிக் கோழைத்தனமாய்க் கசிந்துருக வேண்டுமா என்ற கேள்வி மறுபுறம் கிடக்க-

புதனன்று பிபிசியைப் பார்த்த கோடிக்கணக்கானவர்கள் கண்ணும் கண்ணீருமாய்க் கதறினார்கள் என்பது அப் பட்டமான உண்மை! மும்பையில் பல குடும்பங்கள் ஒப்பாரியே வைத்தன.

"யாருக்குப் பணம் வேண்டும்? என் பணத்தையெல்லாம் எடுத்துக் கொள்ளுங்கள்! எங்கள் குடும்பத்துக்கே கௌரவம் தான் முக்கியம். எனக்குத் தற்கொலை செய்து கொள்ளலாம் போலிருக்கிறது" என்று அவர் குமுறிய போது, பலர் தங்கள் கையிலே வெட்டரிவாளை எடுக்காத குறைதான்!

"கபில் என்பது முதல் பெயர். தேவ் என்பது குடும்பப் பெயர். இந்தியன் என்பதுதான் அசல் பெயர்" என்றல்லவா எல்லோரும் எண்ணிக் கொண்டிருக்கின்றனர்?

கபிலுக்காக எழுந்த அனுதாப அலை, டீ.வி. நிகழ்ச்சியால் ஏற்பட்ட பாதிப்பா, அல்லது ஆத்மார்த்தமானது தானா எனத் தெரிந்து கொள்ள ஒரு அரிய வாய்ப்பு கிட்டியது.

குஜராத் ராஜஸ்தான் பஞ்ச நிவாரண நிதிக்கென்று, ஸஹாரா இந்தியாவும் முக்தி ஃபவுண்டேஷனும் இணைந்து நடத்திய, ஸ்டார் மாட்ச் ஒன்று, வான்கடே ஸ்டேடியத்தில் ஏற்பாடாகியிருந்தது. கபில் ஒரு வேளை கலந்து கொள்வாரோ என்ற நப்பாசையில் தான் நாமும் சென்றிருந்தோம்.

எக்கச்சக்கக் கூட்டம். பெண்களே (+ மம்மிகளே) பிரதானம்! புரிந்து கொண்டிருப்பீர்கள். எல்லாம் ஹ்ருத்திக் வெறியர்கள். எதிர்பார்த்தாற்போல் ஹ்ருத்திக்தான் ஓர் அணியின் காப்டன். எதிரணித் தலைவர் சச்சின்!

பாவம் சச்சின்... பாலிவுட் ஹீரோ முன் இந்த அசல்

கிரிக்கெட் ஹீரோ, ஜீரோவாகி விட்டார்! ஒரே 'வீ வாண்ட் ஹ்ருத்திக்' கோஷம்தான்!

'டாஸ்' ஜெயித்து, ஹ்ருத்திக் அணி, பேட்டிங்கைத் துவங்கியதும், கூட்டத்துக்கு ஹ்ருத்திக்மேனியா தலைக்கேறிவிட்டது. அவர்தான் ஆட்டத்தைத் துவக்குவார் என்று பார்த்தால், ஜடேஜாவும், ஜதின் பரான்ஜ்பேவும் வந்தார்கள். ஒருவாறாக பரான்ஜ்பே 'அவுட்' ஆனதும், மறுபடியும் கூட்டம் ஹ்ருத்திக் நாமாவை ஜபித்தது. ஆனால் வந்தது அஜய்குமார்.

அந்தப் பக்கம் கோவிந்தா பௌலிங் செய்ய வந்ததும் கொஞ்சம் கலகலப்பானது. அனுபம் கேர்தான் அதிர்ஷ்டசாலி பௌலர். உப்புச் சப்பில்லாமல் பந்து வீசியே, அக்ஷய் குமார், சஞ்சய் தத், சேகர்சுமன், அசுதோஷ் ராணே என்று விக்கெட் மலையாய்க் குவித்தார்.

ஜானி லீவரும் ஜஸ்பால் பட்டியும் 'இன்ன டலிங் கமெண்ட்ரி' கொடுத்து, கூட்டத்தைக் கிச்சு கிச்சு மூட்டப் பார்த்தார்கள். ஆனால் நேரம் ஓடியும் ஹ்ருத்திக் வராதது, ஆடியன்ஸை ரொம்ப டென்ஷனாக்கிவிட்டது.

"ஹ்ருத்திக் எங்கே?" என்று கூக்குரல் வலுத்தபோது, திடீரென்று கபில்தேவ் வந்தார். அவரைக் கண்டதும் எல்லோரும் ஹ்ருத்திக்கை மறந்தனர். சினிமாவை மறந்தனர். கிரிக்கெட்டையே மறந்தனர். எங்கும் எதிலும் கபில்... கபில்.. கபில்தான்.

எழுந்துநின்று, கைகள் ஓயும்வரை தட்டித் தீர்த்தனர். 'பாஜி... பாஜி...' கோஷம்! பலர் கைகள் கண்களுக்குச் சென்றதைக் காண முடிந்தது. கபில் பழைய வேகத்துடன் ஐம்பது ரன்களைக் குவித்தபோது கூட்டம் நெகிழ்ந்துவிட்டது.

கடைசியில், முதல் கட்ட ஆட்டம் முடிந்ததும் ஹ்ருத்திக் ஒருமுறை மைதானத்தை வலம் வந்து 'தரிசனம்' தந்து, மேடையேறி நன்றி தெரிவித்தபோது, மீண்டும் ஹ்ருத்திக் ஜபம் செய்தது கூட்டம்.

# தலைவா, கலங்காதே!

நுழைவாயிலிலேயே ஒரு கும்பல் நின்று கொண்டு, வருவோர் போவோரிடம் கபிலுக்கு ஆதரவாகக் கையெழுத்து வாங்கிக் கொண்டிருந்தது. கையில் 'Kapil - the son of India', போன்ற அட்டைகள். மூவாயிரம் கையெழுத்துக்கள் சொற்ப நேரத்துக்குள் கிடைத்துவிட்டதாகச் சொல்லிக்கொண்டார்கள்.

பிட் நோட்டீஸ் போல் நிறைய விநியோகித்தார்கள் - 'சத்ய மேவ ஜெயதே' என்று போட்டு 'மாட்ச் ஃபிக்ஸிங்' ஊழலுக்கு முடிவு காண்பதெப்படி என்பது விளக்கப்பட்டிருந்தது.

X குற்றவாளி என்று Y சொல்வதாக Z கூறினால், உண்மையைக் கண்டுபிடித்து, X குற்றவாளிதான் என்றால், Xஐ தண்டியுங்கள். X குற்றவாளி என்று Y சொல்லி, அது நிரூபிக்கப்படாவிட்டால் Yக்கு தண்டனை அளியுங்கள்.

X குற்றவாளி என்று உண்மையிலேயே Y சொல்லாமலே இருந்திருந்தால், Zஐத் தண்டியுங்கள். (இங்கே X, Y, Z யாரைக் குறிக்கும் என்பதெல்லாம் சொல்லாமலே புரியாதா?)

கடைசியாக, அச்சிடப்பட்டு, விநியோகிக்கப்பட்ட ஓர் ஆங்கிலக் கவிதை ஒன்றின் சுமாரான தமிழாக்கம்:

உன் வாழ்வில் சில
தருணங்கள்
இப்படியும் அமையும்...
நம்பிக்கை எனும் ஒளிக்
கீற்றுகளை
சோகக் கருமேகங்கள்
கவ்வும்...
உன் கருவுற்ற கண்களிலிருந்து அருவியாய்
நீர் பொழியும்
கூர் வாள் ஏந்திய பொறாமைக் கரங்கள்
மறைந்திருந்து உன்
குழந்தை மனதைப் பிளக்கும்
உன் நிழலே உன்னை விட்டு நீங்கும்
வாழ்வினும் மரணம் மேல்
என நினைக்கத் தோன்றும்..
ஆனால்
கலங்காதே தேவனே..
அன்பார்ந்த கபில்..
நாங்கள் என்றும் உன்னுடன்தான்!

டச்சிங்?

— ஜெயஸ்ரீ ராஜ்

## காச்மூச்

டாக்டர் மு.அனந்தகிருஷ்ணன்



# பேய்களின் பிடியில் பிள்ளைகள்!

**கோ**டை விடுமுறை வந்தாலே மாணவ மாணவிகளை நுழைவுத் தேர்வு என்கிற பேய் பிடித்து ஆட்டுகிறது. •ப்ளஸ் டூ முடித்தவர்களும், பட்டப்படிப்பு முடித்தவர்களும் என்ஜினியரிங், மெடிக்கல், எம்.பி.ஏ. எம்.சி.ஏ. என்று இந்த நுழைவுத் தேர்வெழுத அலைகிற அலைச்சல் இருக்கிறது பாருங்கள், எரிச்சலான விஷயம். ஒரு மேற்படிப்புக்கு - உதாரணமாக எம்.பி.ஏ., என்றால் - எத்தனை நுழைவுத் தேர்வுகள்! ஒரே மாதிரியான தேர்வுதான். ஆனால் ஒவ்வொரு பல்கலைக் கழகமும், சில சமயங்களில் கல்லூரிகள் கூட தனித்தனியே நுழைவுத் தேர்வுகள் நடத்தி மாணவர்களின் உயிரை வாங்கும்போது கோபம் கோபமாக வருகிறது. இங்கே தமிழ் நாட்டிக்குள்ளேயே இப்படி. இதை முடித்துவிட்டு பல்வேறு ஐ.ஐ.டி. மற்ற மாநிலப் பல்கலைக் கழகங்கள்.

சராசரியாகப் பார்த்தால் ஒரு மாணவன் ஐந்து முதல் பதினைந்து நுழைவுத் தேர்வுகளை எழுத வேண்டியிருக்கிறது.

இந்தத் தேர்வுகள் நடத்தப்படுவது பெரும்பாலும் மாணவர்களைத் தேர்ந்தெடுக்க அல்ல. வடிகட்டத்தான். அவர்களின் கல்வி அறிவை அளவிடவும், ஆர்வத்தை மதிப்பிடவும் இந்தத் தேர்வுகள் பயன்படுவதைவிட பணம் பிடுங்கவே அதிகம் பயன்படுகின்றன. ஏன் இத்தனை நுழைவுத் தேர்வுகள்? தேவையின்றி கசக்கிப் பிழியும் இந்த அர்த்தமற்ற சிஸ்டம் கோபத்தைத்தான் ஏற்படுத்துகிறது.

இதை மாற்றுவது அப்படியொன்றும் மலையைப் புரட்டும் காரியமல்ல.

கணிதம், அறிவியல், உயிரியல், சமூகப் பொருளாதார இயல், மொழியியல், கணிப்பொறியியல் என்று மொத்தப் பாடங்களையும் ஆறு பிரிவுகளில் அடக்கி மாநிலம் முழுமைக்குமாக ஒவ்வொன்றிலும் ஒரே தேர்வுதான் என்று வைத்து, வாங்கும் மதிப்பெண்களின் அடிப்படையில், மொத்தம் உள்ள இடங்களுக்கு ஏற்றபடி மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்.

இப்போது தேர்வுகளுக்கென எப்படி ஒரு தேர்வாணையம் இருக்கிறதோ, அப்படி இந்த நுழைவுத் தேர்வுகளை ஒருங்கிணைந்து நடத்த ஒரு நுழைவுத் தேர்வாணையம் அமைக்கலாம். பணி எளிதாகும்.

இன்னொன்று, இந்த நுழைவுத் தேர்வுகளை வெயில் காலத்தில் வைத்து கொடுமைப் படுத்துவது பெரும்பாவம். முன்னதாக நவம்பர், டிசம்பரிலேயே நடத்தி முடித்து விட வேண்டும்.

அனைத்துக்கும் மேலாக ஏதோ வாழ்க்கையின் எதிர்காலமே என்ஜினியரிங், மெடிக்கல், எம்.பி.ஏ., எம்.சி.ஏ. இவற்றில்தான் அடங்கியிருப்பதாக மாணவர்களுக்கு இருக்கும் அல்லது பெற்றோர்களால் திணிக்கப்படும் மாயை அகல வேண்டும்.

சந்திப்பு : ராணிமைந்தன்

படம் : வெங்கடேஷ்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623;
Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)






# ஸ்ரீ சுதர்ஸன மஹா யக்ஞ்ய கமிட்டி

பழைய எண்.5, புதிய எண்.32, கேசவப் பெருமாள் சன்னதி தெரு,
மைலாப்பூர், சென்னை - 600 004. தொலைபேசி : 4610179

**ஸ்ரீ மஹா சுதர்ஸன ஜெயந்தி** முன்னிட்டு
**ஸ்ரீ சக்கரத்தாழ்வார் லட்சார்ச்சனை**

## ஸ்ரீ சுதர்ஸன மஹா யஞ்யம் (1 லட்சம் ஆவர்த்தி)

8.7.2000 முதல் 10.7.2000 வரை

நடைபெறும் இடம் : **P.K. மஹால்** (கல்யாண மண்டபம்) பழைய எண் 20, புதிய எண் 32, சித்திரகுளம் தெற்கு தெரு, மயிலாப்பூர், சென்னை - 4
லட்சார்ச்சனை கட்டணம் ரூ.50/- (சுதர்சன காப்பர் டாலர் வழங்கப்படும்)

## லட்சார்ச்சனை நடைபெறும் நேரங்கள்

| | | |
|---|---|---|
| 8.7.2000 | சனி | 6.00 a.m., 7.30a.m., 4.00 p.m., 5.30 p.m. |
| 9.7.2000 | ஞாயிறு | 6.00 a.m., 7.30 a.m., 4.00 p.m., 5.30 p.m. |
| 10.7.2000 | திங்கள் | 7.00 a.m., |

**ஸ்ரீ மஹா சுதர்சன யக்ஞ்யம் கட்டணம் ரூ.100/-** வெள்ளி சுதர்சன டாலர் வழங்கப்படும்

கட்டணம் ரூ.250/- ஸ்ரீ சுதர்சன வெள்ளி டாலர் ஸ்ரீ சுதர்சன யந்திரம் வழங்கப்படும்
கட்டணம் ரூ.500 ஸ்ரீ சுதர்சன வெள்ளி டாலர் ஸ்ரீ சுதர்சன யந்திரம் ஸ்ரீ சுதர்சன ரக்ஷை வைத்த வெள்ளி தாயத்து வழங்கப்படும்.
ரூ.2000/- வழங்குபவர்க்கு ஸ்ரீ சுதர்சன ரக்ஷை வைத்த தங்க தாயத்து, வெள்ளி டாலர், சுதர்சன யந்திரம் முதலியவை வழங்கப்படும்.

## ஸ்ரீ சுதர்சன மஹா யக்ஞ்யம் நடைபெறும் நேரம்.

| | | |
|---|---|---|
| 8.7.2000 | சனி | காலை 8.30 முதல் 11.30 மணி வரை.<br>மாலை 7 முதல் 9 மணி வரை |
| 9.7.2000 | ஞாயிறு | காலை 8.30 முதல் 11.30 மணி வரை.<br>மாலை 7 முதல் 9 மணி வரை |
| 10.7.2000 | திங்கள் | காலை 9.00 மணி |

மஹா பூர்ணாஹுதி 12.30 மணி

***டிக்கட் கிடைக்கும் இடம்***

*லட்சார்ச்சனைக்கு சுதர்சன மஹா யஞ்யம் டிக்கட் கிடைக்கும்*

**இடம் : ஸ்ரீ ரங்கராஜ பட்டாச்சாரியார்,
பழைய எண் 5, புதிய எண்.32,
ஆதிகேசவப் பெருமாள் சன்னதி தெரு, மயிலாப்பூர்,
சென்னை - 4. தொலைபேசி 4610179**

இங்ஙனம்
ஸ்ரீ S. ஸ்ரீரங்கராஜ பட்டாச்சாரியார்
ஸ்ரீ T. சம்பத்குமார்
ஸ்ரீ M. பிரவீன்குமார்
ஸ்ரீ V. நந்தகுமார்
ஸ்ரீ T. சுதர்சன்

குறிப்பு : M.O., D.D., காசோலை அனுப்பும் பக்தர்களுக்கு கொரியர் சர்வீஸ் மூலம் பிரசாதம் அனுப்பப்படும்.
M.O., D.D., காசோலை அனுப்பும் பக்தர்கள் தாங்கள் பெயர், கோத்திரம், நட்சத்திரம் குறிப்பாக அட்ரஸ் சரியாக புரியும்படி எழுதவும். (இல்லாவிட்டால் பிரசாதம் அனுப்பப்படமாட்டாது)
M.O., D.D. அனுப்பும் பக்தர்கள் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பவும். ஸ்ரீ சுதர்சன மஹா யக்ஞ்ய கமிட்டி,
S. ஸ்ரீரங்கராஜ பட்டாச்சாரியார் பழைய எண்.5, புதிய எண்.32, கேசவ பெருமாள் சன்னதி தெரு, மைலாப்பூர், சென்னை - 4.

